ஸ்ரீ மஹாகணபதயே நம:

திருச்சிற்றம்பலம்.

# குடியேற்ற நல்லூர் புராணம்.



இத்தல சிலாசாதனத்தும், வடமொழியினும் உள்ள
அரிய பெரிய சரித்தத்தை தமிழ் மொழியாக்கித்
தரல்வேண்டுமென, இத்தல சிவநேசச்
செல்வர்கள் வேண்டுகோளின்படி

திருப்பத்தூர்

ஸ்ரீ சொரூபானந்த சபா வித்துவானும்

ஷெயூர் ஹைஸ்கூல் தமிழ் பண்டிதருமாகிய

மஹாகனம்

ஆ. க. குமாரசாமி பண்டிதரவர்களால்

இயற்றித்தரப்பெற்று

திருப்பத்தூர்:

நேஷனல் பிரஸ் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1915.

மஹாகணபதயேநம:
திருச்சிற்றம்பலம்.

# குடியேற்ற நல்லூர் புராணம்.

## பாயிரம்.

### விநாயகர்.

கலி விருத்தம்.

பால சந்திர னாறணிவார்க்குமைப்
பால சந்திர வேகமகத்த வைம
பால சந்திர நாதவென் றேத்துதும்
பால சந்திர தந்தி பொற்பாதமே. (1)

1. (இதன் பதப்பொருள்.) சந்திரன் - ஆறு அணிவார்க்கு பால? - சந்திரனையும் கங்கை[illegible]யையும் சடையிலணிந்த சிவபெருமானுக்கு புத்திரனே? உமைபால் அசத்து - இரவு ஏக எம் அகத்த - சொல்லினிடத்து அசக்தியாகிய இருள் நீங்க எமது நெஞ்சக மிருக்கின்றவா? ஐம்பால் அசம் திர[illegible]ந்தலுடைய ஆட்டு முகங்கொண்ட வல்லபை என்னும் சத்திக்கு நாயகனே? என்று - துதிசெய்து, பாலசந்திர தந்தி பொற்பாதம் ஏத்துதும் -யாம் பால சந்திர விநாயகர் பொன்போன்ற திருவடிகளை வணங்குவாம்-எறு.

[illegible]ரோகணியினிமித்தம் தக்கனுல் சந்திரனுக்கு நேர்ந்த சாபம் தவிர்ப்பான் வேண்டியும், தமது கண்பொத்திய உமாதேவியார் கைவிரலில் உண்டாகிய [illegible]கைப பிரவாகத்தால் உலகழியா வண்ணமும் சிவபெருமான் சடையி[illegible]ததிஞல் சந்திரன் ஆறணிவாரென்றும் கயமுகா சூரசம்மாரங் கருதி [illegible]பில் உலாபபோந்த உமாமகேசுரர் ஆங்கொரு சித்திரசாலையில் உள்ள [illegible]வச்சித்திர நோக்குழி அதினின்றுந் தோன்றிய களிறும் பிடியும் ஆடிய [illegible]வியினமயம் உதித்த குழவியைக் காத்தேந்தியதால் - பால என்றும், சூரன் தங்கை அசமுகி அறுமுகப் பெருமான் செய்த யுத்தமுகத்தில் அவளது யோனியினின்று முடிவின்றி வந்த அசுரப்படையை வாராதடக்க அவ[illegible]த் தமது துடையிலிருத்தி துதிக்கரத்தால் யோனியைப் புதைத்து மீட்[illegible] வாராதிருத்தினமையால் ஐம்பால சந்திரநாத என்றும் கூறினர்.

பாலன், அகத்தன், நாதன் எனல் "ஒருசார் னவ்வீற்றுயர் திணைப் பெயர்க்கண் அழிவு மீறழிதல்" என்னும் விளிபெயரின் விகாரத்தால் [illegible]ந்திக்கெடுமெனலால் பால அகத்த நாத என வந்தன. ஐ + பால் — ஐந்தா[illegible] ப[illegible] (உச்சியில் முடிப்பது) கொண்டை, சுருள், (பின்னே செரு[illegible]ட்டி முடித்தல்) பனிச்சை (பின்னி விடுவது) ஆகிய ஐந்து [illegible]டையது ஆகையால் அன்மொழித் தொகையாய்ப் பெண்கள் [illegible]ப்பெயர் வழங்கும், ஏத்துதும் எனல் தன்மைப பன்மைக்கண் [illegible]டர்க்கை யோரையும் உளபபடுத்திய உளப்பாட்டுவினை

(இ-ள்.) அநாதி சிருட்டியி லுண்டாகிய சருவாண்டங்களின் உள்ளும் புறமுமாகியும், ஒவ்வோ ரெல்லையளவாகியும், எல்லாமாகியும், யாவுக்கும் சாட்சி மாத்திரமாகியும், சிவஞானிகள் நிரந்தரம் பொசிக்கும் பரமானந்த அமிர்தமாகியும், அவர்கள் அறிவிற் கறிவாயெழுந்த சோதிப பிழம்பாகியும், உள்ள சுத்த சிவத்தின் திருவருளாகிய சம்பு பக்கத்தால் நமது அஞ்ஞான மென்கின்ற குறை நீங்கி வாழ்வாம்.—எ-று. (2)

(இ-ள்.) பிறவி தோற்றத்தால் உண்டாகிய சரீரம், அந்தக்கரணம் இவைகளை இகபரபோகமென்கின்ற ஊசலின் வைத்து போதல்வருதல் என்னும்படி ஆட்டி முதலில் உலக விச்சையை யுண்டாக்கி, பின்னர் அவ்விச்சையைக் கெடுத்து சரியை கிரியை யோக ஞான மென்னும், சாதனங்களை கற்பித்து முன்னனுபவித் தறியாத அதிசயமாகிய பேரின்ப மென்கின்ற அமிர்தத்தை ஊட்டி முதிர்க்காளா யென்னை யெடுத்து வளர்க்குந் தாயாகிய சிவசத்தியின் தாமரை மலர்போலுந் திருவடி யிரண்டையும் நமது இருவினையும் ஒப்புவர வேண்டி வணங்குவாம்.—எ-று. (3)

(இ-ள்.) அழகிய புலித்தோலை யிடையில் தரித்திருப்பவனும் சந்திரனை சடையில் வைத்திருபபவனும் பத்தியில் ஒப்பில்லாத வியாக்ரபாத மஹா முனிவர் புத்திரராகிய உபமன்னிய முனிவருக்குக் குழந்தை பருவத்தில் அழுங்குரல் கேட்டு கருணைகூர்ந்து பாற்கடலை யழைத்துக் கொடுத்தவனும் மணமுள்ள நால்வகைச் சாந்தணிந்த உமாதேவியாரை மணந்து தனக்கொரு பிறப்பில்லாதவனும் நீயே என்று அந்தணர் வணங்கும் கருப்புலி என்னுந் திருநாமங்கொண்டு குடியேற்ற நல்லூரென்னுந் தலத்தில் திருவிளையாடல் செய்து வீற்றிருக்கும் சிவபெருமானை நினைந்து வணங்குவாம்.—எ-று. (4)

(இ-ள்) பிறவித்துன்பமும் ஆசையும் நீங்க சிவதலங்களை நாடிச்சென்று துதிக்கும் சைவசமயாசாரியர்கள் அற்புதத் திருப்பதிகங்கேட்டு அவர்களது மும்மலங்களையு நீக்கி தமது சோதிப்பிழம்பாகிய திருவடி நீழல் கொடுத்த கருணாகரக் கடவுளைனக் கண்டுதான் அரிய தவம்புரிந்து கருப்புலீச்சுரரது இடபாகத்திலிருக்கும், சிவகாமசுந்தரி யம்மையாரது பாதபதுமத்தை சிவா கமத்தில் விதித்தவண்ணம் சிந்திப்பாம்.—எ-று. (5)

(இ-ள்.) அண்டவடுக்குகள் நிலைபெயர்ந்தாடவும், தாமரைமலருற்பவனு [illegible] பிரமதேவன் சிருட்டி நடக்கவும், விண்டுவின் காவற்றொழி னடக்கவும், [illegible] சேடனால் தாங்கப்பெற்ற பூமியசையவும், பிரமேந்திராதி பதவிகள் [illegible]யவும், தனக்காபரணமாக அரவகங்கணம் பூண்டுள்ள சிவகாமி கண்டு [illegible] ஊன்றியபாத மாதியாக சூழ்ந்த பிரணவா கிருதியாகிய பொன் [illegible]த்தில் ஆனந்த நிருத்தம் செய்தருளிய திருவடியே கதியென வணங் [illegible] பேரறிவானந்த வாழக்கடவது.—எ-று. (6)

### செருச்கிரி விநாயகர் வேறு.

*தனத்தன தனத்தன தனத்தன தனத்தன தனத்த தனனு.*

ஒருக்கிரி விரற்றனு சாற்றிதி நினைப்பா ரொழித்தன் மலரான், மருக்கிரி குலத்திறை சிறைப்பெறு விதித்தொழின் மதிப்புமவர் தம், தருக்கிரி தாச்சிவ கதிக்கெனை விளித்திட தனித்த துணையே, செருக்கிரி வருக்கரி முகப்பதி மரைப்புரை செழித்த சரணே. (7)

### முருகக்கடவுள்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

படியேற்றோ ரடியளந்தோ னிருடியர்கள் வானவர்கள் பதுமபீ புத்தேள், கொடியேற்று பாமனிடன் குறையேற்ப நுதலிலெழுங் குமரன்கோழி, கொடியேற்று மயிலூர்ந்து சூரனுரங் கண்டமராக் குழாத்தைவானங், குடியேற்ற நெடியவிலை வடிவேல னடிமுடி மேற் கொண்டு வாழ்வாம். (8)

### வீரவாகுதேவர்.

*வண்ண விருத்தம்.*

*தாந்தாம் தனன தாந்தாம் தனன தாந்தாம் தனன தன தனனு.*

நீந்தா வறலைப் பாய்ந்தான் றருமந் தாங்கா தமர்செய் நிசிசரர் கள், மாய்ந்தே முடிய வேந்தா முருகன் போங்கா லவன்பின் மதிநிழலின், சேந்தாரயிலை யேந்தாந் துணைமுன் தர்ன்போர் சமரில்செறியிருளை, காய்ந்தானவனைக் காய்ந்தானவனைக் காய்ந்தா னவனைக் கருதுவமே. (9)

### நக்கனூர்த்தம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

மாகம்புவியு மியங்கமணி மன்றநடிப்பா னேவனவன்,
போகமாரு நுகாவுமைப் போகத்திருப்பானேவனவன்,
ஏகமிரண்டி லின்புலக மெய்தக்கல்லா நீழலமர்,
யோக னேவனவனின்ப வுபாயசாறும் புகலிடமே. 10

### வேறு நந்திதேவர்.

ஊழியுமிருந் தொன்று முலப்பிலா கைலைக்குன்றப்,
பாழிதன்வாய்தற்பாங்க ரிருந்ததி காரம்பெற்று,
வாழியெம் மண்ணமேலத்த வானவர்க் கருளைதந்த,
காழிய சூரனந்தி கான்மலர் வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்) ஒப்பில்லாத பொன்மலையாகிய சிவன்வில்லுக்கு பாணமாகிய நாராயணன் காக்க நினைத்தலும், உருத்திரன் சங்காரம் செய்யவருதலும், பூக்களால் வாசம்வீசும் குறிஞ்சிக் கிறைவனாகிய முருகக்கடவுளால் குட்டிச் சிறையிடம்பெற்ற பிரமன் சிருட்டிக்கக்கருதலும், ஆகிய அவர்கள் அகங்காரங் கெட அடியேனை சிவசாயுச்சிய பதவிக்கு அழைத்து சேர்க்க செருக்கிரியில் வீற்றிருக்கும் யானை முகமுள்ள விநாயகக்கடவுள் தாமரைமலர் போலும் திருவடி நல்ல துணையேயாகும். – எ-று. (7)

(இ-ள்.) மகாபலியினிடத்தில் மூன்றடி மண்ணேற்று உலகமளந்த நெடுமாலும் முனிவர்களும், இந்திரனும், பிரமனும் இடபக்கொடியுடைய சிவபெருமானிடம் சூரனால் வருந்திய குறைகூறிநிற்க அவர்கள் இடுக்கணீக்க கருணைகூர்ந்த சிவபிரான் நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றிய ஆறுபொறியினுதித்து குமாரபருவத்தே சூரனாகிய மாவைப்பிளந்து ஒரு கூறாகிய கோழிக்கொடியை கையிலேந்தி மற்றொரு கூறாகிய மயில்மீதாரோகணித்து தேவகணங்களை விண்குடியேற்றிய நீண்டதகட்டுவடிவும் கூர்மையும் உள்ள வேலேந்திய முருகக்கடவுள் திருவடியை நம்முடைய தலைமேற்கொண்டு வணங்குவாம்.—எ-று. (8)

(இ-ள்.) ஒருவாராலு நீந்தமுடியாத கடலைத் தாண்டிப்போய் யான் அறுமுகப்பெருமான் விடுத்த தூதன் நீ தேவர்கள் சிறை விடுகின்றனையா சண்டைக்கு வருகின்றனையா யாது சம்மதமெனக் கூறிய நீதிகேளாது அகங்காரங்கொண்டு தூதனோடு சமர்செய்த அசுரர்கள் மடிந்து வேருடன்மாள தேவசேனாதிபதியாகச் சென்ற முருகக்கடவுளின் பின்னே அவரது கருணையால் மிதிக்கு நிழல்போல் செங்குந்தம் கையிலேந்திவரும் தனது தம்பியராகிய இலக்கத்தெண்மருக்கு முன்னே யுத்தகளத்தில் நெருங்கிய இருட்கூட்டங்களை கோபித்தவன் சூரியன் அவனைக் கோபித்தவன் பானுகோபன் அவனைக்கோபித்துக் கொன்றவன் வீரவாகுதேவன் அவனை மனதில் சிந்திப்பாம் — எ-று (9)

(இ-ள்.) விண்ணுலகமு மண்ணுலகமும் சலிக்க, பஞ்சகிருத்தியநிகழ, சிதாகாயத்திலானந்தத் திருநடனம் செய்தருளுவோனெவனோ அவனும், சகல சீவகோடிகளும் போகமுண்ணவேண்டி உமாமகேசுரனாகி வீற்றிருக்கின்றவன் எவனோ அவனும், ஒன்றிரண்டென்று சொல்லப்படாத பேரின்ப மேலோரடைய கல்லால விருக்கத்தினடியில் தென்முகநோக்கி சின்முத்திராங்குசனாய் சிவராஜயோகத்திருப்பவன் எவனோ அவன் தக்கணாமூர்த்தியே ஆதலால் அவனது உபயபாதாரவிந்தமே நாம் அடையக்கூடிய மோக்கத்தானம்.—எ-று. (10)

(இ-ள்.) சருவசங்காரகாலத்தும் ஒன்றாலும் அழியாநிலைபெற்றுள்ள கைலாயம் விளங்கும் ஆலயத்தின் கோபுரவாய்தலில் இருந்து சிவகணங்களுக்குள்ளே அதிகாரமடைந்து அவ்வாலயத்தில் எழுந்தருளிய சிவபிரானைக் கண்டு வணங்கவரும் தேவர்கள் முதலியவருக்கும் உத்திரவுதர கையில் வைரம்பொருந்திய பிரம்பேந்திநிற்கும் நந்திதேவரது திருவடியாகிய பதுமமலரை வணங்குவாம்.—எ-று. (11)

### வீரபத்திரக்கடவுள்.

*தரவிணைக் கொச்சகக் கலிப்பா.*

கீரபத்திரச்சயனன் கோலாழி கொளவுகலை,
பாரபத்திரத் திளைத்தன் றுடிவிகடங் கண்டருளங்,
கோரபத்திரைக் கேள்வன் கொடிய தக்கனைமடி,
வீரபத்திரக் குரிசி லென்ன முன்னை வினையறுமே. (12)

### வைரவக்கடவுள்.

பயிரமேவலாச் செருக்ககல பரமன்விதித்தப் படிவிதிதன்,
செயிரவங்கொ டலைக்கிள்ளுங் காபாலங்கைச் சேர்த்தணியும்,
கயிரவங் கணன்பனலா கடிர்கைவேணி முத்தலைவேல்.
வைரவன்ற னடிக்கமலம் வணங்கி யணங்கு மலமொழிப்பாம்.(13)

### திருஞானசம்பந்தர்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

கருந்தூம கேதடுமென் புருவாக்க சஞ்சீவ காணியென்னு,
மருந்தாகி நீண்டுவிட மீண்டெழுப்பப் பன்னகத்தின் வைரியாகி,
பெருந்தீவலங்கண்ட புண்ணியருக் கெண்ணரிய பேரானந்த.
விருந்தாகுந் திருஞான சம்பந்த வடிகளடி வேண்டுகிற்பாம். (14)

### திருநாவுக்கரசர்.

வாடுகின்ற சமணரெலா நீறறரையிற் கடங்கலுழு மாதங்கத்
தால், ஆடுகின்ற மாசுணத்தா லார்கலியாற் செபதீமை யகலவா
ருந், தேடுகின்ற சைவநெறி செழித்தோங்க வப்பனையே தேர்ந்து
தேர்ந்து, பாடுகின்ற பேறுடைய திருநாவுக்கரயரடி பாசுவாமே.

### சுந்தரர்.

துண்டமதி நஞ்சிவனைப் பித்தனெனப் பேசி யந்தத்துதிக்கே
வேண்டுமெ, பண்டமுடன் பொன்னனந்தம் பரிசேற்று கட்டமு
தும் படைக்கவுண்டு, பெண்டருகே தூதனுப்பி கைம்மலைமேற்
கைலைமலை பிறங்கவாழ்வன், றொண்டரென வுலகிறைஞ்சுஞ் சுந்
தரனார் பதக்கமலந் தொழுது வாழ்வாம். (16)

### மாணிக்கவாசகர்.

வம்பலராய் குருந்தடியிற் குருநாத னருளமுத வாரியாடி,
யன்புருவாய்க் கட்டரளை மூற்றெடுப்ப ஞானவடி வாகியாண்ட,
யெம்பரனைக் கையேட்டுத் தம்பிரானுக விருந்தெழுதப்பாடி.
யிம்பருளா ருய்யவருண் மாணிக்கவாசகனீ ரிணைத்தாட சேர்வாம்

(இ-ள்.) பாற்கடலில் நித்திரைசெய்பவனாகிய நாராயணனது குற்ற மற்ற சக்கரத்தைக் கடித்துக்கொண்ட தலைமாலையின் செல்வத்திற்கஞ்சி மீட்டும் அச்சக்கரந்தான்பெற விண்டுவாடும் விகடக்கூத்து காணவேண்டியே அகோரமுகமுடைய பத்திரகாளியின் காதலனாக வெழுந்தருளிவந்து கொடி யனாகிய தக்கன் யாகத்தை அழித்த வீரபத்திரக் கடவுளென்னு மந்திரத்தை யோத நம்முடைய பழவினைகள் நீங்கும்.—எ-று. (12)

(இ-ள்.) ஒருவரும் பழகக்கூடாத மமகாரங்கெடவேண்டி சிவபெருமான் விதித்த உத்திரவின்படியே போய் பிரமனது குற்றமுள்ளதும் பயனற்றது மான நடுத்தலையைக் கிள்ளுமக் கபாலத்தையுடைய கையும், செவ்வாம்பற் பூவிற்கு நிகரனாகிய சந்திரனையும் கொன்றைமலரினையும் சேர்த்தணியும் சடையும், திரிசூலமும் உடைய வைரவக்கடவுள் பாதாரவிந்தத்தைத்தாழ்ந்து நம்மை வருத்து மலங்கெடுத்து வாழ்வாம்.—எ-று. (13)

(இ-ள்.) சென்னிறமுடைய அக்கினியிற்சுட்ட எலும்பைப் பெண்ணுரு வாக்க சஞ்சீவகரணியென்னும் பரமாவுடதமாகியும், நாகத்தாற்றீண்டு விட மீட்டுநீங்கி உயிர்பெற்றெழச்செய்யும் கெருடனாகியும், தமது திருமணக்கோ லத்தில் எழுந்த சோதியைக்கண்ட புண்ணிய முடையவருக்கெல்லாம் பேரா னந்தமென்னும அமிர்ததத்தையூட்டும் விருந்தாகியும், எழுந்தருளிய திருஞான சம்பந்தஸ்வாமிகள் திருவடியை வேண்டுவாம். எ-று. (14)

(இ-ள்.) தம் மகிமையைக்கண்டு மனமிளைத்து வாடுகின்ற சமணர்கள் யாவ ரும் நீற்றறையாலும் மதமுடைய யானையாலும் படமெடுத்தாடு நாகத்தாலும் கடலாலும் செய்த கொடுமைகளெல்லாங் கெடும்படி நல்லோரால் தேடுகின்ற சைவசமயம் தழைத்தோங்கவேண்டி சிவபிரானையே வேதசிவாகமங்களின் ஆராய்ச்சியால் தெளிந்து தமிழ்வேதம் பாடுகின்ற திருநாவுக்கரசருடைய பாதத்தை வணங்குவாம.—எ-று. (15)

(இ-ள்.) குறைமதிசூடிய இறையாகிய நமது சிவபெருமானைப பித்த னென்றுபேசி அந்த வாழ்த்துக்கே தான்வேண்டிய நெல்லோடு அநேக பொன் பரிசும்பெறவும் அப்பரமனால் கட்டுச்சாதம் படைக்கவுண்டும் தன்பெண்டா கிய பரவைநாச்சியாரிடம் தூதனுப்பி ஊடல்தணிப்பித்தும் முடிவில் வெள்ளை யானையின்மேல் கைலைக்கெழுந்தருளிய வன்றொண்டரென உயர்ந்தோரால் புகழும் கீர்த்திவாய்ந்த சுந்தரஸ்வாமிகள் பாதமலரை வணங்கி வாழ்வாம்.—எ-று. (16)

(இ-ள்.) மணமுள்ள மலர்நிறைந்த குருந்தமரத்தடியில் எழுந்தருளிவந்த குருநாதன் அருளிய சிவஞானோபதேச வமிர்தமுண்டு அதிலுண்டாகிய பேரானந்த சாகரமூழ்கி மெய்யன்பே தமக்கோருருவமாகக்கொண்டு மனங் கசிந்து கண்வழிசிந்தும் ஆனந்தமாரியுடையவராய் ஞானமே வடிவமாகி விளங்கி தம்மைவந்து ஆட்கொண்ட எமது சிவபெருமானையே தான்பாடு மணி வாசகத்தை எழுதுங் கையேட்டுப்பிள்ளையாகக்கொண்டு அவரெழுதும்படி பாடி இவ்வுலகத்தன்பர் கதியடையவருளிய மாணிக்கவாசகர் துணையடியை வணங்குவாம்.—எ-று. (17)

அறுபத்துமூவர்.

வேறு.

சத்தியடைந்த வொருபாக னுறையாலயத்துஞ் சங்கமத்தும்,
புத்தியடைந்து சிவானந்தம் பொங்கித்ததும்புங் குருவிடத்தும்,
பத்தியடைந்து வேனம்பியென்ன மீளாப்பதக்கைகலே,
முத்தியடைந்த வறுபத்து மூவரடித்தா மரைபோற்றி. (18)

கலைமகள்.

கட்டளைக்கலித்துறை.

பாணினி கும்பமுனித்தவன் றேரிருபாடையுளுங்,
காணிய செந்தமிழ்ப் பாவினத்தாம் பொருள்காப்பவணீ,
மாணியன்பா வுவப்பாக வென்னுவிரு வீந்துகலே,
வாணியம்மே யுனபாத மெஞ்ஞான்று மறந்திலனே. (19)

திருமகள்.

கல்விப்பொருளரு ளெய்தற்குனதருட் கட்கடையா,
னல்வித்தையினிக போகம்பர சுகஞாலமுண,
சொல்வித்தனையென வின்னடைந் தேன்மது சூதனற்சேர்,
செல்விச் சரோருகப் போதாலயத்துத் திருமகளே. (20)

அவையடக்கம்.

நித்தனருளிது சொற்பொருடொன்மை நிலையதனுன,
முத்தமிழ் வாணரென்புன் மொழிக்கு முறுவலிப்பர்,
தத்திப்புகலுங் குழவிக்குதலைத் தனைப்பயந்த,
வத்தனுமாயு முவப்பரிதுவுல கார்வழக்கே. (21)

வாழ்த்து.

தேவர்வாழி தேவனருண் மறைவாழி சிறப்புருவ
வர்வாழி யந்தணர்வாழி மகமுகில் வாழியவிப்
பூவாழி பூதல மன்னவர்வாழி புராணமுறும்
பாவாழி சைவரனைக் களமவாழிய பல்லுகமே. (22)

நூற்பயன்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாலசார்த் தாலமாய பரசிவ சரிதந்தன்னை,
சீலமாய்ப் படித்தோர் பூசை செய்துளோர் கற்றோர் கேட்டோர்,
ஞாலமேற் செல்வமாயு ணன்மகப் பேறுமோங்கி,
காலனைக் கடந்துசேர்வர் கைலையம் பதியிதானே. (23)

(இ-ள்) உமாதேவியை யோர்பாகத்திலுடைய சிவபெருமான் திருக்கோலங்கொண்டிருக்கும் ஆலயத்துள்ள சிவலிங்கத்தினிடத்தும் சிவனடியார்களிடத்தும் அறிவுசொரூபமாகிய சிவானந்தமேலீட்டால் உலகுய்ய திருவருள் செய்யவல்ல சத்குருவினிடத்தும் பத்திசெய்து வேல்நம்பியென்னு நம்பியாண்டார் நம்பியாரால் துதிக்கப்பெற்று நற்பதமாகிய கைலாயமென்கின்ற கதியடைந்த அறுபத்துமூவர் திருவடிகமலத்தைப் போற்றுதல் செய்வாம் — எ-று. (18)

(இ-ள்) சிவபிரான்செய்யும் சந்தியாநிருத்தங் காணவந்த பாணினிமுனிவர் வடமொழியக்கரங்களையும், அகத்தியர் தென்மொழியக்கரங்களையும், அந்நடனத்தில் ஒலித்த டமாகத்தில்கண்டு உலகில்விளக்கிய இரண்டு பாடையுள்ளும் வடவேங்கிடந் தென்குமரியாயிடை யென்னும் செந்தமிழ் விருத்தப்பாவாலாகிய சொற்பொருள் சோர்வில்லாமல் காப்பவள் நீ மாட்சிமையுடைய சரஸ்பதிதாயே நான் உன் திருவடியை ஒருபோதுமறவேன், ஆதலால் ? பிரியமும் சந்தோடமுங்கொண்டு என்னுவில் வந்திருப்பாயாக.—எ-று. (19)

(இ-ள்.) நாராயணன் மார்பகத்திருக்கும் செல்வமுடையவளே ? கமலாலயத்திருக்கும் சீதேவியே ? உனது கடைக்கண்ணோக்கத்தால் உலகம், கல்விப்பொருளையடைதற்கும், தந்திரத்தொழிலால் இகபோகசுகத்தையும், பரபோகசுகத்தையும், பொசிக்க கற்பித்து வீற்றிருந்தனையென்று உன்னை வந்தடைந்தேன்.—(என்னைக்கா என்றபடி) (20)

(இ-ள்) இப்புராணமோ நித்தியனாகிய சிவபிரான்செய்த திருவிளையாடல் இதைச்சொல்லும் சொல்லும் சொல்லின்பொருளும் பழமையேயென்னும் உண்மைநிலையில் இயலிசைநாடகமென்னும் தமிழறிநாவலர் அதையெடுத்தோதும் என்மொழிக்கும் சிவசரிதமென உவந்து புன்முறுவல் செய்வர். அஃதெவ்வாறென்னில், பாச்சி சோச்சியென தத்தி தத்திபேசும் குழந்தைகள் மழலைமொழிக்குத் தந்தைதாயார் மனமுவந்து புன்சிரிப்பே செய்வர் இது உலக வழக்காதலால், இதற்கோர் குறையுங்கூறாரென்றபடி. (21)

(இ-ள்) நீழேி பரமேசுரன் வாழக்கடவன். அவனால் அருளிச்செய்த வேதங்கள் வாழக்கடவன. வேதியர்கள் வாழக்கடவர்கள். சிறப்புப்பொருந்திய பசுவினங்கள் வாழக்கடவன. வேள்வியும் வேள்வியால் மேகமும் வாழக்கடவன. இவ்வுலகத்துள்ள உயர்ந்தோர் வாழக்கடவர்கள். உலகமாளுமரசரும் வாழக்கடவர். இப்புராணபாவினம் வாழக்கடவன. சைவர்கள் சமயமானது வாழக்கடவது.—எ-று. (22)

(இ-ள்.) கருப்புலியாகவந்து சிவபிரான் திருவிளையாடல்செய்த இச்சரிதத்தை ஆசாரமாகவிருந்து படித்தவரும் இதைப்பூசித்தவரும் கற்றவரும் கற்றவரிடங் கேட்டவரும் இப்பூவுலகில் அகண்ட சாம்பிராச்சியமடைந்து அதையனுபவிக்க வாணாள்பெருகி பின்னே அவர் சந்ததிவிளங்க நல்ல புத்திரபாக்கியமடைந்து சிவநேச மறவாதிருந்த புண்ணியத்தால் இயமதண்டனையின்றி சிவசாயுச்சியமடைவர்.—எ-று. (23)

## புராண சரித்தொகை.

*எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

மருப்புலியார் சத்திபுரத்தவரை வருமார்க்கம் வந்துதவப் பெற்
றடைந்த பொற்பகுத்தளித்து. திருப்புலியாய் மீண்டுவரும் வணி
கனொரு மகனைத் தேக்கிருளின் வழிமரித்துக் கூவொயிற்றிற்
கௌவி, யொருப்புலியாய் வன்னிநிழ னின்றிருக்கக்கண்டன்
றேலமிட மூலலிங்கப் பாவிருந்தப்பொருளை, கருப்புலியாய்ப்
போற்றியெழு மாணபவ மாறக், கண்டவனை விண்டலத்துக்
கொண்டவிளையாட்டும். (24)

விண்ணுலகை மறத்தணைந்திந் நல்லூரிற்றேவர் வேகதனரும பகற்
பூசையாற்றியணிசைலக். கண்ணுலவுநெ தெய்வதத்தாற் சூருடலஞ்
சவட்டி ககனமான் குடியேறு காதையு மார்க்கண்டன், மண்ணு
லகம் பூசித்த வாறுமறை வியாதன் வணங்கியது மெழுமுனிவர்
வாழ்த்தியதும் வேதப், பண்ணுறுநாக் கௌண்டிஞ்ச முனிநதி
யாற் பூசைப் பானடியிலாற்றியது மவனருளும் பகர்வாம. (25)

## சிறப்புப்பாயிரம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

பத்திகனிந் திரதகனி சிந்துசிவ பூசையதாற் பான்மே ரின்ப,
முத்திதருங் கருப்புலியூர் சரிதமருந் தமிழ்ப்பாவான் மொழிந்
தான்ஞானச், சித்திதரு மவனருளாற் சதோதய னென்கின்ற
வொருதீக்ஷாநாம, வெற்றியணியுங் குமார சாமிப்பாவாணனெனு
மேதக்கோனே. (26)

*இஃதிந்நூலாசிரியராசிரியராகிய சச்சியாளவந்த வள்ளலாரதீனம்—*
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவசங்கர தேசிகரவர்களாலருளியது.**

*திருச்சிற்றம்பலம்.*
*பாயிரப்படலம் முற்றிற்று.*
**ஆக திருவிருத்தம் ௨௬.**

(இ-ள்.) மணநாறு நால்வகைச்சாந்தணிந்த சத்திபுரத்தீசனை குடதிசையிருந்து குணதிசைக்கேகும் ஓர் வணிகன் திருவிருஞ்சைக்கணித்தாய் வந்து கண்டுதான் செல்லுமார்க்கம் தழைவுற்றுநெருங்கிய பலவிருக்கங்களாலும் யானை புலி முதலிய கொடியமிருகங்கள் வசிப்பதாலும் மனுஷசஞ்சார மிகுதியின்மையானும் செல்லவஞ்சி சிவபெருமானைவேண்ட அக்கருணாகரப்பொருள் வழித்துணையாக வரப்பெற்று அதனால் தானடைந்த பொருளைக்கொண்டு மீண்டும் விரிஞ்சைநகரமேகி சிவாலயத் திருத்தொண்டுசெய்து சிலநாள் மனைவியோடும் வசித்திருந்து சிவபுண்ணியத்தாலோராண்மகவீன்று சிவாஞ்சையால் அழகிய சிங்கம்போல் திரும்பும்போது அவ்வணிகன் குழந்தையை செருக்கிரியிலிருந்து வந்த சிவமெனும் புலியானது அன்றிரவு தனது கூரிய பற்களால் கடித்துக்கொண்டுபோய் குடியேற்றநல்லூர் சிவாலயத்திலுள்ள ஓர் வன்னிவிருக்கத்தடியில் இருக்கக்கண்டு வணிகன் குறையிரந்து வருந்த புலியுருநீங்கி சிவலிங்கமாக ஒரு பெருஞ்சோதிதோன்றி அதில் எழுந்தருளிவந்த சிவசாரூபங்கண்டு வணங்கிநின்ற அன்பனை அவன் மகன் மனைவியுடன் அவர்களுக்கு அன்றளவுமிருந்த பிறப்பு இறப்பென்னும் பிணிகெட சிவபெருமான் கைலாயபதவிக்குக் கொண்டுசென்ற திருவிளையாடலும். (24)

(இ-ள்.) தேவர்கள் சூரபதுமனால் வருந்தி தெய்வலோகம்விட்டு பூலோகம்வந்து நல்லூரென்னுந் திருநகரத்தில் ஒரு சிவகுறி இருக்கக்கண்டு பலநாள் பூசித்து அப்பூசாபலத்தால் குறிஞ்சிநிலத் தெய்வமாகிய சுப்பிரமணியக் கடவுளால் சூரனைவென்று விண்குடியேறப்பெற்றதும், மார்க்கண்டமுனிவரால் பூசிக்கப்பெற்றதும், அத்திரி ஆங்கிரீசன் கௌதமன் சமதக்கினி விசுவாமித்திரன் பாரத்துவாசன் வசிட்டன் என்னும் சத்தமுனிவரால் பூசிக்கப்பெற்றதும், நான்மறையோது நாவுடைய கௌண்டிஞ்சமுனிவர் தேவகங்காநதிப்பிரவாகங்கொண்டு பூசிக்கப்பெற்றதும் சொல்வாம். (25)



உ

திருச்சிற்றம்பலம்.

# பூர்வகாண்டம்.

## கந்தகிரிபடலம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நாவினிய மதுவுண்டு மதுகரங்க ளிசைமிசைய நாகர்நாட்டு, தூவியன மரைமலரி னின்றரிய சிவசரிதஞ் சொல்லுநல்ல, காவிய மாங் கனியுண்டு கனிந்த கனியுண்டுசுகங் காதைபேசும். பூவினை யாய் நனியோங்கு நைமிசாரணிய மெனும் பொழிலொன்றுண் டால். (1

காதகிகூவிளமிதழி சாக்கொன்றை வன்னிதலைத் தானயாறே
போதகலாற் பிறைமதியு லாவரலான் மந்தாரை பூத்தவாற்றுற்
சீதமுகிற் படலங்கட் கருமுதிர களம்படருஞ் செவ்விதன்னாற்
பாதகபமம்புலிவேணி கறைமிடற்றெங் கைலாய பதியைமானும்.(2)

பைந்தாரு சினையவிழ்ந்து பல்லவங்க ளுயிர்த்தரும்பிப் பருவம் வாய்ந்து, கொந்தாரு மலர்வசந்தந் திசைதிசைப்போய் நாறு மாநுங் கோட்டுப்பூவும், வந்தாரை விருந்தோம்புங் கனிபலவு நனி விளையு மாறுகாணு, மந்தார மெனமகிழூடத் தேவநக ரமாருலா வனம்பிதம்மா. (3)

ஓதங்க ணிறையமல ரானந்த ருபசாந்த ருண்மைஞான
மாதங்க ருபயசரோருக சரணே சரணென்னு மாதவத்தோர்
மாதங்க முழுவைகுடா வடிவிதித்த செயநாளு மகமியற்றும்
வேதங்க ளுறைநாவர் சாந்த்ராயண முதல விரத முள்ளார். (4)

நத்தீயு மணிமுறுவ ளரியர்க ணசைநீத்த ஞானத்தாலவ்
வத்தீயு மதியதனாற் சிலமென்மேலோங்கி வளர்ந் தெஞ்ஞான்று
முத்தீயும் வளர்த்துசிவ சரிதபடனப் புனித முதிர்ந்துரைக்கு
மெத்தீயு மில்லாது சாந்தமாயமிவாறி யிருக்கு மேலோர். (5)

(இ-ள்.) வண்டுகள் நாவில் இனிக்கத் தேனையுண்டு சுதிகூட்ட தேவலோகத்துப் பொன்னிறமுடைய அன்னங்கள் தடாகங்களிலுள்ள தாமரைப்பூவிலிருந்து கேட்டறிய கிளிகள் சிவசரித்திரம் சொல்லும், புராணமாகிய கனியையுண்டு அறிந்த மதுரத்தோடும் கனிந்துள்ள கனிகளையும் உண்டு களித்து நல்ல வசனம் பேசிக்கொண்டிருக்கும் மலர்வாசமாய் மிகச் செழித்துள்ள நைமிசாரணியமென்கின்ற ஒரு சோலையுண்டு.—எ-று. (1)

(இ-ள்.) அம்மரச்செறிவுகள் ஆத்தி வில்வம் கொன்றை சரக்கொன்றை வன்னி என்கின்ற மரச்செறிவுகளின் தலையில் தேவகங்கை யோடுவதாலும், மூன்றாம்பிறைச்சந்திரன் உலாபபோதலாலும், மந்தாரைப் பூத்திருப்பதாலும், தண்ணிய மேகங்கள் கருமுதிரவேண்டி அதன் கண்டத்தில் படிந்திருத்தலாலும், சடையில் சந்திரனைச்சூடிய காளகண்டமுடைய எமது சிவபெருமானையொத்துளது. -- எ-று. (2)

(இ-ள்.) அச்சோலை பசிய விருட்சக்கிளைகள் விரிந்து தளிரீன்று அரும்புண்டாய்ப்பின் பூவரும்பாய்ப்பூத்த பூங்கொத்துக்களிலுள்ள மணமானது நாற்றிசையும் சென்று வீசும் கோட்டுப்பூவும் அவ்வனத்தில் வந்த விருந்தினரை உபசரிக்கும் அனந்தங் கனிவருக்கங்களும் செழித்திருக்கும் தன்மையைக்கண்டு பொன்னுலக வாசிகளாகிய தேவர்கள் கற்பகத்தருவென்றே நினைத்து களித்துலாவும் தன்மையது.—எ-று. (3)

(இ-ள்.) அவ்வனத்தில் இறையவர் அமலர் ஆனந்தர் உபசாந்தர் மெய்ஞ்ஞானர் உமையை யோர் பாகத்தில் வைத்தருளினவர் என்னும் பண்புமுடைய சிவபிரான் சரணாரவிந்தமே கதியெனச்செய்யும் மகாதவமுடையவரும், யானை கரடி புலி முதலிய கொடிய மிருகங்கள் தாங்களேவிய ஏவலைச் செயய சதாகாலமும் வேள்விகள் நடாத்தும் வேத மந்திர மோது நாவுடையவரும், சாந்தராயணம் கிரிச்சிரமாதிய விரதங்களையுடையவரும் உள்ளார்—எ-று. (4)

(இ-ள்.) சங்கினத்தாலுண்டாகிய முத்துபோலும் தந்த பந்தியுடைய மகளிர் ஆசையறத்துறந்த மெய்ஞ்ஞானத்தினாலும், அப்பரம்பொருளால் கொடுக்கு நல்ல அறிவாலும், செய்யும் தவம் ஒன்று பத்தாகப்பெருகி எந்நாளும் ஆகவனீயம் தக்ஷிணாக்கினியம் காருகபத்தியம் என்கின்ற மூன்றக்கினி வளர்த்து சிவபுராணங் கேட்கும் புண்ணியமுதிர்ந்து வேதவிலக்கென்றுரைக்கும் எவ்விதத்துன்பமுமின்றி சாந்தமடைந்து அறிவுள்ளபடி யிருக்குமேலோர்—எ-று. (5)

லத்தவமுந் தவமுடையார்க் காகுமெனுங் கூற்றதனு லிமயவிந்த
மெயத்தவமா திடநாத னற்சரிதங் கேட்டிருந்த விம்மிதத்தா
லத்தவரெலாங் குழுமி புராணமுனி வரவுன்னு மமையந்தோரா
முத்தனை திராங்குறலுங் கண்டானந்தக் கடலுண் மூழ்கினுரால்.()

வநதமுனி வார்க்கினிய மாற்றமுடன் பொற்றவிசு மகிழுமாறு,
தந்தமுனி வரரெல்லாங் கரமுகிழ்த்து மிகமலர்ந்து தாழ்ந்தி
றைஞ்சி, முந்துசிவ சரிதமெனு மமுதுண்டு கண்டசுவை முதிர்ச்
சிநெஞ்சி, னுந்தவிது பரவசராய்ச் சொல்வார்க ளோயவிது வைப்பக்
கேண்மோ. (7)

கருமமொத்த வின்மொழியா ளொருபாக னருளுதவுங் காதை
தன்னுட், பெரும்பற்றபுலியூரே யெறுக்கத்தூம்புலியூரே பேத
மில்லா, விருமபுற்ற தண்காட்டு புலியூரே யன்பருக்கே விமலபோ
தம, தரும்பதி பாதிரிப்பேர் புலியூரே யென்றதலச் சரிதங்
கேட்டோம். (8)

முருக்கவிழ விளரியெனும் பண்கூட்டி யொருங்கோடி மொய்த்
தவண்டர், அருக்குநலா ரளகமணம் போன்மென்றே செம்மாந்து
மாடிப்பாடுக், தருக்குலவி யகநெகிழா தேன்றுளிக்கும் பூஞ்சோ
லைசார்ந்த வண்ணக், கருப்புலியூர் பெருந்தகைமை யுண்டென்றீ
ரதுநல்லூர் கனப்பேரன்றோ (9)

சேற்றிகழும் பொன்னிவளத் திருநல்லூர் பெருமணமுந் தோர்ந்
தேமத்தின், பாற்றிகழும் பல்லுலகச் சான்றுனன் றிருநல்லூர்
பண்பறிந்தேம், கோற்றிகழும் பூமணமுண் டளிமுரலக் கேட்
டினிதாய்க் கோலப்பைங்கா, காற்றிகழத் தலையசைக்குங் குடி
யேற்ற நல்லூரிற் காதலுற்றேம். (10)

கற்றவொரு கல்வியிடத் துய்த்துணர்ந்து சொல்வண்மை கை
வந்தோது, கற்றவனே கற்றவரெலாங் கூடுகற்றினமே நல்ல
வென்னு, மற்றமிது நின்னமிர்த வாக்கதனு லீதுபுகன் றருளு
மென்ன, பொற்றவி சிருந்தமதி புராணமுனி யருணினைவாற் புகல்
வதானுர். (11)

(இ-ள்.) எவ்விதமாகிய தவமும் முன்னேசெய்துள்ள தபோபலமுடையவர்க்கே பயன்றருமென்னும் பழமொழியாலும், இமயமலையரசன் செய்தவப் பேற்றால் பிறந்த உமையை யோர் பாகத்திலுடைய சிவபிரானது நல்ல சரித்திரங்களைக் கேட்டிருந்த புண்ணியத்தாலும், அம்முனிவர்கள் ஒருங்கே சூதபுராணிகர் இவ்விடம் வரவேண்டுமென்று நினைத்தார்கள் அப்படி நினைத்த கணநேரத்திற்குள்ளேயே அதையுணர்ந்து அம்முனிவர் ஆங்கே எழுந்தருளக் கண்டு சந்தோடமென்கின்ற சமுத்திரத்தில் மூழ்கினவராய்.—எ-று. (6)

(இ-ள்.) அங்கெழுந்தருளிய முனிவருக்கு இனியவசனம் சொல்வதுடன் பொன்னாசனங்கொடுத்து இருக்க உபசரித்த அம்முனிவர்கள் அவர் சந்நிதானத்தே நின்று அவ்வருவ இருகரமும் சிரமேற்கூப்பி அகத்திலுண்டாகிய அன்பால் முகமலர்ந்து பூமியிற்றேகம்படிய வீழ்ந்து வணங்கி முன்னே சிவசரித்திரமென்கின்ற அமிர்தமுண்டு கண்டசுவை முதிர்ந்து அவ்வாசையானது மனதிலிருந்தெழுந்து பிடர் பிடித்துத்தள்ள பரவசமுடையவராய் ஐயா முனிவரே என இவ்வண்ணம் சொல்வார்கள் - எ-று. (7)

(இ-ள்.) கரும்பின் இனிய ரசம் போலும் மொழியுடையாள் பாகனாகிய சிவபிரான் திருவிளையாடல் கூறு சிவபுராணங்களுள்ளே பெரும்பற்றப்புலியூர், எருக்கத்தம்புலியூர், அபேதமுடையவர் விரும்பும் தண்ணியகாட்டுப்புலியூர், அடியார்களுக்கு மேலாகிய சிவஞான போதங்கொடுக்கும் திருப்பாதிரிப் புலியூர் என்கின்ற சிவசரிதங் கேட்டோம் —எ-று (8)

(இ-ள்.) பூவரும்புகள் கட்டுடைய எழிசையினென்றாகிய மிடற்றாற் பிறக்குமிசைபாடி யாவுங்கூடி மொய்த்தவண்டுகள் அருமையாகிய மகளிர் கூந்தல் இயற்கைமணம் போலிருக்கிறதென்று மிகமகிழ்ந்து ஆடிப்பாடும் மரங்கள்பூத்து தேனைத் தென்றல அலர்த்தச்சிந்தும், பூஞ்சோலைகளால் அழகு வாய்ந்த கருப்புலியூர் சிறப்புண்டென்று முன்னே சொல்லியிருக்கின்றீர் அது நல்லூரென்னும் சிவதலமல்லவா? அத்தல சரிதங்கேட்க விருப்பமுடையவர்களாயிருக்கின்றோம்.—எ-று. (9)

(இ-ள்.) யாங்கள் கெண்டை மீனினங்கள் துள்ளி விளையாடும் காவேரி நதியில் வளம்பெற்ற திருநல்லூர் பெருமணமென்னுந் தலநலமறிந்தோம், அவ்வாற்றின் பாங்கருள்ள சகலலோகத்திற்கும் சருவசாட்சியானவன் என்னும் பெயர்வாய்ந்த சிவபிரான் வீற்றிருக்கும் திருநல்லூரென்னும் தலமகிமையும் தங்களால் கேட்டிருக்கின்றோம், இப்பொழுது கிளைகளில் விளங்கும் பூந்தாதுண்டு வண்டுகள் பண்பாடும் பாடல்கேட்டு அழகிய பசியசோலைகள் தென்றல் அசைக்க சிரக்கம்பனம் செய்யும் குடியேற்றநல்லூரென்னும் சிவதலசரிதம் கேட்க விருப்புற்றிருக்கின்றோம்.—எ-று. (10)

(இ-ள்.) கற்றகல்வியை இடமறிந்து ஆய்ந்தெடுத்து சொல்லும் சொல்லாற்றலில் கைதேர்ந்த நல்ல தவமுடையவரே? இச்சபையில் நல்ல தபசிகள் சேர்ந்துள்ள தினமே நல்லதினம் அதுசொல்ல இதுவே சமயம் (ஆதலால்) உம்மிட அமிர்த மொழியால் சொல்லியருள்வீராக வென்றுகேட்க; ஆங்கே பொன்னாசனத் தெழுந்தருளியிருந்த சூதமுனிவர் சிவபிரானை சிந்தித்து சொல்லத்தொடங்கினார் —எ-று. (11)

கலித்துறை.

எட்டி ரட்டிய கலையினு ரெண்ணில வொருங்கே
யுட்டி ரட்டிய வமுதொளி மிசைப்பாஞ் சோதி
விட்டி ரட்டலின் றனிக்குறின் முன்னரொற் றுயிரைத்
தொட்டி ரட்டிய பதமெனத் தோன்றுமோர் சைலம். (12)

மின்னு ருக்கொடு மிளிர்வது கொல்லுலைக் களம்வெண்
பொன்னு ருக்கிய முகத்தொளி போல்வது கனலின்
முன்னு ருக்கிய விழுதெனு மகமுளார் முனமை
யென்னு ருத்திகழ்ந் திமைப்பது கைலைமால் வரையே (13)

அந்த மாமலை யாயிரங் கொடுமுடி யுள்ள
பந்த மாறிய வானவர் மானவர் பதமா
விந்த மிக்குள வதிற்பல வளங்களு மிகுந்த
கந்த மாமலை யென்றொரு கல்லக முளதால். (14)

கந்த ரங்குலாம் பூந்தருத் தொகுதிகெள மார
தந்தி ரத்தவ முளுற்றிய வான்றவர் தங்கு
மந்தி ரம்பல செங்கதி ருதயமே மானும்
சுந்த ரச்சிக ரத்தம ணியக்குடந் தோன்றும். (15)

ஆறு மாமுகத் தண்ணலா ரக்கர மகத்திற்
கூறு மாதவ யோகிய ரவ்விறைக் குணமே
தேறு கந்தகா வியக்கனி யுண்பவர் செவ்வேள்
நீறு கண்டிகை பூண்பவர் நிறைபத மனந்தம். (16)

ஆர ணுள்செயும் விரதிய ரசுரமந் திரிதன்
வார நாள்செயும் விரதியர் சட்டி நாளென்னு
நீர நாடிய விரதியர் முற்றிய நீரார்
சாரு மாளிகை சூழலுண் மண்டபந் தகையே. (17)

தருக்கு லங்கொழுந் தம்புதப் பதங்கடந் தலர்ந்து
மருக்கு லம்பரந் தின்கனி மலிந்துதண் ணென்றே
யிருக்கு நீரினு லெப்பதத் தவர்களு மிச்சை
பெருக்க வந்துலாப் போதரு குன்றமக் குன்றம். (18)

(இ-ள்.) பதினாறு கலையுடைய அனந்தம் சந்திரர்கள் ஒரேகாலத்தி லுதையமாய் அவைகளின் உள்நின்றெழும் அமிர்தகிரணத்தின்மேல் ஒரு சிவபரஞ்சோதி தோன்றியது. அது, தனிக்குறிலைச்சார்ந்த மெய்ம்முன் உயிர் வரின் அம்மெய் யிரட்டுமென்பதுபோலும் ஒரு மலைவிளங்கும்.—எ-று. (12)

(இ-ள்) தோன்றியழியா மின்னலைப்போலும் விளங்குகின்றது, கொல்லன் உலையில் உருக்கிய வெண்பொன்னின் உருக்குமுகம்போலு மிருக்கின்றது, அக்கினியிற்பட்ட நெய்போல் சிவநேசத்தால் உருகுமனமுள்ள மேலோர் அகக்கண்ணில் தோனறும் சிவஞானப்பிரகாசம்போலும் பிரகாசிக்கின்றது, அது கைலாயபருபதமென்று சொல்லப்படுவது.—எ-று. (13)

(இ-ள்.) அம்மலையில் ஆயிரஞ்சிகரங்கள் உள்ளன அச்சிகரங்களில் பாச நீங்கிய தேவர்களும் மாந்தர்களும் வசிக்கும் பதவியாகிய மலைகள் அனந்த முண்டு அவைகளுள்ளே பலவளங்களாலுஞ் சிறந்த கந்தகிரி என்கின்ற பேருடைய ஒரு மலையுண்டு.—எ-று. (14)

(இ-ள்.) அதில் மேகங்களால் சூழப்பெற்ற பூஞ்சோலைகளும் கௌமார தந்திராகமப்படி அனுஷ்டித்துத் தவஞ்செய்த பெரியோர்கள் வாசத்தான மாகிய மண்டபங்களும் சூரியோதயம்போலும் அழகிய குடமெனும்படி பொற் சிகரங்களும் விளங்கும்.—எ-று. (15)

(இ-ள்.) ஷண்முக மந்திரமாகிய சடாக்கரத்தை உச்சரித்த புண்ணிய முடைய யோகியரும், அம்முருகன் திருவிளையாடலுரைக்கும் கந்தபுராண மென்னு மதுரக்கனியுண்டவரும் அக்கந்தநாதன் விபூதி உருத்திராக்கத் தாரணமுடைவரும் வசிக்கும பதவிகள் அனந்தமுண்டு.—எ-று. (16)

(இ-ள்.) கார்த்திகைவிரத மனுட்டித்தவர்களும், சுக்கிரவாரவிரத மனுட்டித்தவர்களும், அப்புண்ணியத்தால் வந்தமர்ந்துள்ள மாடங்கள் சூழ்ந்த வீதிகள் அளவிலடங்கா.—எ-று. (17)

(இ-ள்.) மரத்தொகுதிகள் தழைத்து மேகமண்டலங்கடந்து வளர்ந்து பூத்து மணமிகுந்து இனிய பழங்கள் பழுத்து எப்பொழுதுங் குளிர்ச்சியாக வேயிருப்பதால் எல்லாப்பதங்களிலு முள்ளவர்களும், கூடிவந்து உலா வருந்தரமுடையது—எ-று. (18)

சொற்ற பாவனக் குத்திரத் துச்சியிற் சொன்ன
முற்ற வாற்றிய வந்தனி முழுமணி குயிற்றி
மற்ற நேரிலாச் சித்திரப் பித்திகை மயனாற்
பெற்ற தூணமே போதிகை மேற்பரப் புடைய. (19)

ஆரண கோளமே கோபுரத் தூலமே யதன்மேற்
பாண மாரியே குக்குடத் துலசமே பணித்த
தாண மாலையே காவணக் கோலமே சார்ந்த
கிரண சாலமே நகுவன வவ்வயிற் கிளர்ந்து (20)

பள்ளி யுள்ளிரு பான்பனி ரெண்டுடைச் சீயங்
தெள்ளி யெண்டொகைத் தாங்கிய செம்மணி யணையே
வெள்ளி யாயிர மாற்றுடைக் காஞ்சன மிளிர
புள்ளி யாடலைச் செய்ச்சிறந் திருந்தது பொலிந்து. (21)

ஆச னத்துவீற் றிருந்தன னெண்குண னான்மா
வீச னைம்முகன் பிறப்பிலி யிரதிகா தலனைக்
காச னந்தரு நுதல்விழி கானறுதீப் பொறியான்
றேசி னந்தரு மாறுமா முகமுடைச் செவ்வேள். (22)

முலை முரட்குவ டேந்தியைம் பால்வன முறுங்கைம்
மலை மகட்சத்தி யொருபுற மிருப்பமற் றொருபாற்
கலை முதற்கொலை வேடுவர் காப்பணி வள்ளி
யிலை மதர்ப்பசும் பூங்கொடி யெழினனி படர (23)

குரு மணித்திரு முடியுடை மலர்முகங் குலவ
மரு வுறுங்குரா மலரணி பணிபல வயங்க
திரு வடிச்சிலம் பொளிசெய வெற்றிவேற் றிகழ
முருக னென்பதை யென்றுமின் னிளநல மொழிய. (24)

முந்தி யம்பல வேங்கமால் சலஞ்சல முழக்க
சந்தி யங்கெழு தும்புரு நாரதர் தாழ
நந்தி யங்கண நாதரா கியநவ வீரர்
புந்தி யங்கவ ரேவின செயவு[illegible]ருந்த (25)

(இ-ள்.) என்றுசொல்லிய சுத்தமாகிய மலையின் உச்சியில் பொன்னுலேயே முடிவுபெறச்செய்துள்ள ஓர் அழகிய கோவிலானது மாணிக்க மணிகளை இழைத்து அதற்கு வேறொன்றும் சரிசொல்லக்கூடாத சித்திரங்கள் தீற்றிய சுவர்கள்வாய்ந்து பொற்றூணிருத்தி அதன்மேல் பவளப்போதிகை வைத்து அதன்மேல் பல இரத்தின பதிப்புடைத்தாக தேவதச்சனுற செய்துள்ள மேற்பரப்புடையது.—எ-று. (19)

(இ-ள்.) மதிற்சூழலும் கோபுரத்தோற்றமும் அதன்மேல் கவசமாக சூழ்ந்த மேகத்திவலையும் கோழிக்கொடியும் அதன் பக்கங்களில் தொடுத்தணிந்த பூமாலைகளின் தொங்கலும் பந்தலலங்காரமும் இவைகளாலுண்டாகிய கிரணகூட்டமும் விளங்கி அவ்விடம் பிரகாசிக்கும்.—எ-று. (20)

(இ-ள்) அவ்வாலயத்துள்ளே முப்பத்திரண்டு சிங்கங்களாலும் அட்டகசங்களாலும் தாங்கிய இரத்தினசனம் வெள்ளியாலும் ஆயிரத்தெட்டு மாற்றுள்ள பொன்னாலும் விளங்கி அதில் சித்திரப்பதுமைகள் இயக்கமுடைத்தாய் சிறப்புறறிருந்தன.—எ-று. (21)

(இ-ள்.) அவ்வாசனத்தில் தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், இயற்கையுணர் வினனாதல், முடிவிலாற்றலுடைமை, பேரருளுடைமை, வரம்பிலின்பமுடைமை என்னும் எண்குணமுடையவனும் குணாதீதனும் ஈசனும் ஐந்து திருமுகமுடையவனும் பிறப்பிறப்பில்லாதவனும் ஆகிய பரமசிவன் இரதியின் காதலனாகிய மதவேளை எரித்து கொல்லும் நெற்றிக்கண்ணினின்றுமெழுந்த தீப்பொறியின் காந்திகளால் தரப்பெற்ற ஆறுமுகமுடைய முருகவேள்.எ-று.

(இ-ள்.) மூலை என்கின்ற ஒன்றிலொன்று மாறுபட்ட குன்றைத்தாங்கி கூந்தலென்கின்ற சோலைவாய்ந்துள்ள யானைமகளாகிய தெய்வயானை என்னும் கிரியாசக்தி யொருபுரமிருக்க, மற்றொரு பாகத்தில் மான் முதலியவைகளை கொலைசெயும் வேடுவர் வளர்த்த வள்ளி என்கின்ற இச்சாசக்தி இலையுடைத்தாய்ச் செழித்த பூங்கொடிபோலுங் அமர்ந்திருக்க.—எ-று. (23)

(இ-ள்.) நிறமுடைய இரத்தின மகுடஞ்சூடிய முடியுடைய முகாரவிந்தம் விளங்க, மார்பில் மணமுள்ள குராமலர் மாலையும் பலவித இரத்தினாபரணங்களும் பிரகாசிக்க, திருவடியில் பூட்டிய சிலம்புகள் ஒளிசெய்ய ஞானசத்தியாகிய வேலாயுதம் ஒரு கையில் விளங்க, முருகனென்று வேதசிவாகமங்கள் கூறுவதை இப்போதுள்ள இளமைபருவத்தின் அழகுசொல்ல.-எ-று.

(இ-ள்.) சந்நிதானத்தின்முன்னே அனந்தம் வாத்தியங்கள் சத்திக்க, விண்டுவின் வாயினின்று சங்கவாத்தியம் தொனிக்க, சேவை செயவந்த தும்புரு நாரதர் நாதகீதம் பாடிவணங்க, நந்தியங் கணங்களாகிய நவவீரர் செங்குந்தபடையேந்தி திருமுன்னேநின்று அம்முருகக்கடவுள் எவ நினைந்தவைசெய்ய பக்கத்தில் சூழ்ந்திருக்க.—எ-று. (25)

நடன தேவத நங்கையர் சாமரை யிரட்ட
படன மாமறை யெண்கணன் விதிமுறை பகர
வுடலக் கண்ணனோ டும்பரும் பரவநம் பார்க்கே
குடிலை கூறிய குருபர னினனண மிருந்தான். (26)

ஆய காலையி லோரெழு முனிவர ரமலன்
சேய னாக முற்றவன் றுணைவீரரிற் சிறந்தோன்
நேய நாடியன் னவன்விடை கொடுநிகே தனம்போய்
பாய சீருடை குமரவேள் சேவடி பணிந்தார். (27)

கண்ண கன்புவி யசுரரா லலைகட வுளரை
விண்ண கங்குடியேற்றிய வெற்றி வேற்பெரும
பெண்ணா கத்தெனு மதியபுறம்போயவர் பிறவிக்
கண்ண கத்துற வான்றவர் கதியுறக் காண்போய் (28)

என்ற வான்றவர் தங்களி லருநதிக் கிறைவ
னின்றி றைஞ்சின னிப்பெருங் காட்சியா னெஞ்சி
னன்றெ னக்கனிந திருகணீர் நித்தில நனைப்ப
சென்ற மெய்யெலாம் புளகமுற் றிங்ஙனஞ் செப்பும் (29)

நெருந லோதிய சிவபுரா ணந்தனி னிமலி
நிரும லன்றனை யருச்சனைப் புரிநதது நெடுமால்
பரவி நின்றதுங் சரமுகன் பூசனைப் பயனு
மொரும லர்ப்பவன் பத்தியாற் பெற்றபே றுவப்பும் (30)

மன்னர் பின்னரி லொருமகன் வழித்துணை வந்து
முன்ன வன்றிரு வருளுடை யாடலு முனிவர்க்
கின்ன ரும்பெற னுகற்சியி லுலக மீந்ததுவும்
பொன்னெனுஞ் சுதற் கிரங்கிய காதையும் புகன்றாய் (31)

அத்தி னெட்டிய னெத்தலத் தெப்பத மடைந்தான்
பித்த னற்பெயர் மாத்திர மார்க்கச காய
சித்த னென்றிகஞ் செப்புமா லாதெனைத் தேற்று
வித்த னிற்பர மென்றடி தொழுதனன் வீழ்ந்தே. (32)

குருகு பேர்வரை பகவெறிந் தோனருட் குணத்தால்
வருக வென்றரு கிருத்திமற் றவரெலா மன்னு
மொருபெ ருஞ்சவை யுணருமா வற்புதஞ் செவிவாய்ப்
பருகு மாசொலத் தொடங்கினன் கடைக்கணிற் பார்த்தே. (33)

திருச்சிற்றம்பலம்.

கந்தகிரிபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௩.

---

(இ-ள்.) அரம்பையாதிய தேவமாதர்கள் வெண்சாமரைவீச, அத்தியய னஞ்செய்யும் வேதத்தலைவனுகிய பிரமதேவன் விதிப்படிதுதிக்க, இந்திர னுடனிருந்து தேவர்கள் யாவரும் வணங்க நமது சிவபெருமானுக்கே பிரண வார்த்தம் உபதேசித்தருளிய குருபரனுகிய குமாரக்கடவுள் இவவித வைபவத் தோடும் வீற்றிருந்தார்.—எ-று. (26)

(இ-ள்.) அந்த சமயத்தில் அகத்தியன், ஆங்கீரசன், கௌதமன், காசி பன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் ஆகிய சத்தமுனிவர்கள் சிவ பிரான் திருக்குமாரனுகிய கந்தநாதன் மலையைச்சார்ந்து அமமுருகன் தம்பி யரில் முந்தியவனுகிய வீரவாகு தேவரது உத்திரவுபெற்று ஆலயத்துட் புகுந்து திருவருள் விலாசமுள்ள அறுமுகபெருமான் திருவடி வணங்கினுர் கள்.—எ-று. (27)

(இ-ள்.) இடமகன்ற இவ்வுலகத்திலுள்ள அசுரர்களால் தேவர்களை விண் குடியேற்றிய வெற்றி வேலாயுதந்தாங்கிய பெருமானே? பெண்முகநாடிய அறிவிலிகளைப பிறபபிறபபில் ஆழ்த்தி நின்முகநாடிய சிவஞானிகளை முத் தியிற் சேர்க்கும் கடவுளே? உன்னைத்தொழுகின்றேம்.—எ-று. (28)

(இ-ள்.) என்று வணங்கிய இருடிகளில் அருந்ததி கணவனுகிய வசிட்ட மஹாமுனிவன் மீட்டுமெழுந்து பணிந்து அத்திருக்காட்சியில் மனதில் கொண்ட களிபபு நெகிழ்ந்து தனது இரண்டு கண்ணினின்றுஞ் சிந்திய ஆனந்த அருவியானது சரீரமுற்றினு நனைப்ப புளகாங்கிதனுய் இது சொல் வான்.—எ-று. (29)

(இ-ள்.) சாமிமுருகவேளே? ஸ்வாமிகள் நேற்றியதினம் திருவருள் பாலித்த சிவபுராண சரிதத்தில் உமாதேவியார் சிவபெருமானை பூசித்தடைந்த பயனும், விண்டு பூசித்த விசித்திரமும், காமுகன் பூசித்த காதையும், திருமல ருற்பவனுகிய பிரமன் பூசித்தடைந்த களிப்பும்.—எ-று. (30)

(இ-ள்.) ஒரு வணிகனுக்கு வழித்துணையாய்வந்து சிவபெருமான்செய்த திருவிளையாடலும், ஒரு முனிவனுக்கு இனிமையும் அருமையுமுடைய முன்னனுபவித்தறியாத கைலாயபதவி கொடுத்ததும், பொன்போலும் அரு மையாகிய ஆதிசைவ பிராமணப்பிள்ளைக்குத் திருமுடி வணங்கியதும் சொல் லக்கேட்டோம்.—எ-று. (31)

(இ-ள்.) அச்சிவபுராணத்தில் கூறிய அந்த வணிகன் எந்த தலத்தின் கண்ணே எவ்வித கதியை யடைந்தான் என்பதை யானறியவில்லை அத்தல நாயகருக்கு மாத்திரம் மார்க்கசகாய சித்தனென்றே இவ்வுலகம் சொல்லித் துதிக்கின்றது ஆதலால் அடியேனை அது தெளிவித்தல் உமது திருவரு ளென்று திருவடியில் விழுந்து வணங்கினன் அப்படி வணங்கி நின்றவனை. —எ-று. (32)

(இ-ள்.) கிரவுஞ்சமென்னும் பக்கிப்பேர்கொண்ட மலையைப்பிளந்தோ னுகிய குமாரக்கடவுள் தனது கிருபைகனிந்து அம்முனிவனை ஆதரித்து அருகிலிருக்கச்செய்து மற்றுள்ளோர் யாவருநிறைந்த அன்பர்களுமறிய சிவ சரிதமென்னும் தேனை அவர்கள் செவியாகிய வாயிலுண்டு களிக்க கடைக் கண்ணுல்பார்த்து சொல்லத்தொடங்கினுர்.—எறு. (33)

உ

சிவமயம்.

சைவசமயாசாரியர்களில் முதல்வராகிய

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிக மூன்றாந் திருமுறையுள்

திருநல்லூர் - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய தென்பரத னயலே
கண்டரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தந்
தெண்டிரைகண் மோதவிரி போதுகமழுந் திருநலூரே. (1)

பல்வளரு நாகமரை யார்த்துவரை மங்கை யொருபாக
மலவளர் புயத்திலணை வித்துமகி ழும்பரம னிடமாஞ்
சொல்வள ரிசைக்கிளவி பாடிமடவார் நடமதாட
செல்வமறை யோர்கண் முறையேத்த வளருந் திருநலூரே. (2)

நீடுவரை மேருவில தாகநிகழ் நாகமழ லம்பாற்
கூடலர்கண் மூவெயி லெரித்தகுழ கன்குலவு சடைமே
லேடுலவு கொன்றைபுன னின்றுநிக ழுந்நிமல னிடமாஞ்
சேடுலவு தாமரைக ணீடுவயலார் திருநலூரே. (3)

கருகுபுரி மிடறர்கரி காடரெரி கையதனி லேந்தி
யருகுவரு கரியினுரி யதளர்பட வரவரிடம் வினவின்
முருகுவரி பொழிலின்மண நாறமயி லாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்தமதுவார் திருநலூரே. (4)

பொடிகொடிரு மார்பர்புரி நூலர்புனல் பொங்கரவு தங்க
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத லாளரவ ரிடமா
மிடிகொள்முழ வோசையெழி லார்செய் தொழிலாளர் விழமல்கச்
செடிகொள்வினை யகலமன மினியவர்கள்சேர் திருநலூரே. (5)

புற்றரவர் நெற்றியொர்க ணொற்றை விடையூர்வ ரடையாளஞ்
சுறறமிருள் பற்றியபல் பூதமிசை பாடநசை யாலே
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கண் முற்றுமெயின் மாளச்
செற்றவ ரிருப்பிட நெருக்கு புனலார் திருநலூரே. (6)

பொங்கரவ ரங்கமுடன் மேலணிவர் ஞாலமிடு பிச்சை
தங்கரவ மாகவுழி தந்துமெய் துலங்கிய வெண்ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை யடிகளிடம் வினவில்
செங்கயல் வதிக்குதிகொளும் புனலதார் திருநலுரே. (7)

ஏறுபுகழ் பெற்றதெனி லங்கையவர் கோனையரு வரையிற்
சீரிய வனுக்கருளு மெங்கள்சிவ யோகனிட மாகுங்
கூறு மடியார்களிசை பாடிவலம் வந்தயரு மருவிச்
சேறு கமரானவழி யத்திகழ்தருந் திருநலூரே. (8)

மாலுமலர் மேலயனு நேடியறி யாமையெரி யாய
கோலமுடை யானுணர்வு கோதில்புக ழானிடம தாகு
நாலுமறை யங்கமுத லாறுமெரி மூன்றுதழ லோம்புஞ்
சீலமிடை யார்கணெடு மாடம்வளருந் திருநலூரே. (9)

நீறுமுடை கோவண மிலாமையிலே, லோவிய தவத்தோர்
பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள் வேடமவை பாடு
லேறுமட வாளொடினி தேறி முனிருந்த விடமென்பர்
தேறுமண வாரமுடை யார்குடிசெயுந் திருநலூரே. (10)

திரைகளிரு கரையும்வரு பொன்னிநிலவுந் திருநலூர மேற்
பரசுதரு பாணியை நலந்திகழ்செய் தோணிபுர நாத
னுரைசெய் தமிழ்ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்
விரைசெய்மலர் தூவிதி (பணுகதி பேறுபெறுவாரே. (11)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# நல்லூர்ப்படலம்.



கலிவிருத்தம்.

நந்த னங்கமலப் பதப்பா லியால்
நந்த னங்கனியந திரநா டலால்
நந்த னங்களெனப் புண்ணினைத் துலா
நந்த னங்களலர்த் தொண்டை நாடரோ. (1)

சுகம னந்தடஞ் சோலை வசந்தனு
சுகம னந்தஞ் சொலச்செல வீசற்கஞ்
சுகம னந்தணியப் பொடிபூ சுவார்
சுகம னந்தன்சொலற் கடங்காப பொழில். (2)

சினக ரங்கொளுந் தேவைப்ப வங்களுஞ்
சினக ரம்பதச் சேவைய டைந்துவீ
சினக ரங்க யிலைப்பதஞ் சேர்ந்ததென்
சினக ரங்கணை குநதிரு நாடரோ. (3)

தருமஞ் சிந்திரன் றனமிருந்து போ
தருமஞ் சிந்திரைசா ரிடஞ்சாரு மோ
தருமஞ் சிந்திறைத் தன்பதி யென்பதால்
தருமஞ் சிந்திதத் தண்டக நாடரோ. (4)

கமுக நெற்றுயர் காயமெழுந்த தெங்
கமுக நெற்றி னுதிர்ந்தன காவொலி
சமக மாமனு நமக மான்பதி
சமக மாமறை சான்றவ ரோதொலி. (5)

சங்க மிட்டெறிதண் பணையாளர் மேல்
தெங்கி னெண்கனி வீசுஞ் சினக்கவி
பொங்கு மியாற்றின் றிரைப்புளி னத்துவாய்
துங்க நித்திலந் தூற்றுநன் னாடரோ. (6)

(இ-ள்.) நந்து அனம் கமலம் பதம் பாலியால் - சங்குகள் அன்னங்கள் தாமரை மலர்கள் மிகுந்திருந்த அழகுடைய பாலி நதியின் வளத்தினாலும், நந்து அனங்கள் இயந்திர நாடலால், முன்னே சிவபெருமானால் சாம்பரான மதவேள் தேராகிய தென்றல் வீசலாலும், புள் நம் தனம் என நினைத்து உலா - வண்டுகள் நமது பாக்கியம் தேனென்றே எண்ணி உலாவும், நந்தனங்கள் அலர்தொண்டை நாடு - சோலைகள் வளர்ந்தோங்கி மலர்ந்த தொண்டை நாடு ஒன்றுண்டு.—எ-று. (1)

(இ-ள்.) சுகம் அனம் சொல செல தடம் சோலை வசந்தன் ஆசுகம் அனந்தம் வீசல், கிளிகள் பேச அன்னங்கள் நடக்க தடாகங்களில் தாமரையும் நீலமும், பூங்காவில் மாவும் அசோகும் முல்லையும் ஆகிய மதவேள் அம்புகள் அனேகமாகமணம் வீசலையும், கஞ்சுகம் மனந்தணிய பொடி பூசுவார் சுகம் அனந்தன் சொலற்கு அடங்கா பொழில், சட்டையாக அன்பர்கள் மனம் சாந்தமாம்படி சிவசின்னமாகிய விபூதியை அணிபவரது சிவானந்தத்தையும் ஆயிரநாவுடைய ஆதிசேடனாலும் சொல்லுதற்கு முடியாதநாடு.—எ-று. (2)

(இ-ள்.) அத்திருநாடு சினகரம் கொளும் சேவை பவங்கள் அஞ்சினகரம் பதம் சேவை அடைந்து, அந்நாட்டில், கோபித்தெழுந்த ஆலகால விஷத்தை யுண்ட சிவபெருமானைப பிறவிபபிணிக்குப் பயந்த கரமுகாசூரன் பூசித்து அவரது பாதாரவிந்தசேவை காணப்பெற்று, கரம் வீசின, கைலைபதம் சேர்ந்த தென் சினகரங்கள் நகும், காந்திபொருந்திய வெள்ளியங்கிரியை யடைந்த அழகிய சிவாலயங்களாதியவை விளங்கும்.—எ-று. (3)

(இ-ள்.) தரும் - அஞ்சு இந்திரன் தானம் இருந்து போதரும், கேட்டதைக்கொடுக்கும் பஞ்சதருவும் தேவலோகம் விட்டு தன் செல்வத்தை கொடுக்கபோகும், மஞ்சு இந்திரை சாருமிடம் சாரும், மேகங்கள் காலமாரிபெய்ய இலக்குமி வாசத்தானமாகிய இவ்விடம் செல்லும், ஓதரும் அம் சிந்து இறை தன்பதி என்பதால், சொல்வதற்கரிய அழகிய சமுத்திர ராஜனாகிய வருணனுலகமென்று சொல்வதால், தண்டகநாடு தருமம் சிந்திதம், இத்தொண்டை நாடு தருமசிந்தனையே யுண்டாயிருக்கும்.—எ-று. (4)

(இ-ள்.) பாக்குமரத்திற் பூத்த குலைகள் அதற்கு உயர்வாகிய தென்ன மரத்தினின்றும் உதிர்ந்த நெற்றினால் சிதறிவிழுகின்ற ஒலியே சோலைகளில் உண்டாகும் ஒலி, சமக நமக என்னும் கடையுடைய மகாமந்திரங்களை பெரிய வேதமுணர்ந்த அந்தணர்கள் ஓதுகின்ற ஒலியே சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஆலயத்திலுண்டாகும் ஒலி.—எ-று. (5)

(இ-ள்.) சங்குகளைவிட்டு வீசுகின்ற உழவர்கள் மேல்பக்கமுள்ள சோலையிலிருந்து குரங்குகள் தெங்கின் நெற்றுகளைப்பறித்து கோபங்கொண்டு வீசும், இருகரையும் பெருகி வரும் யாற்றின் அலையானது மணல் திட்டின்மேல் சுத்தமாகிய முத்துக்களை வாரி எறியும்.—எ-று. (6)

பனக பூடணன் பத்துடை மூவர்செய்
இனிய செந்தமிழ்ப் பாடலு வந்துவந்
தனக வாலய நாடிய ருட்பெற
கனக நாடருங் காமுறு நாடரோ. (7)

கயிலை பாதியுங் காளத்தி பாதியு
மயிலை யாதி மகிழ்ந்தருட் பாடலு
மயிலை வென்ற கண்ணாடிரு வாலங்காண்
செயலைப் பாடலுஞ் சேருநன் னாடரோ. (8)

இத்த கைப்பெருந் தேய.மகட்பணி
முத்த மாலை முழுமணி நாயகம்
ஒத்த வங்குடி யேற்றநல் லூரெனு
நத்த முண்டது ஞான விளக்கமே. (9)

கற்ற நூனெறி யாடிக டைப்பிடி
பெற்ற நெஞ்சிற் பிறங்கொளி யவ்வழி
நிற்ற னன்றென நேயரு ரைத்தவா
றுற்ற கல்விய ருண்டினி தப்பதி. (10)

பிணிபி றப்பிறப் பாறப்பெ ரும்பசி
பிணிபொ றுத்துயிர்க் கோருறு கண்டரா
வணிய ணிந்துல காசைய றத்துறந்
தணிய வீடதி காரருண் டாயிடை. (11)

ஆரணத்து விலக்கெகவை யன்னவை
மாரணத்து மறந்து நினைந்திலார்
தாரணத் திருநீரணி சாதனக்
காரணப்பிடி வாதர் கணக்கிலார். (12)

அங்கலத் திருமேனிய ரவ்வயின்
மங்கலத் திருநாளென மாறிலா
மங்கலற் றறநாளும் வளர்ப்பரா
லெங்களத்த னிடத்தவ னொன்னவே. (13)

(இ-ள்.) அரவாபரணனாகிய சிவபெருமானிடம் அன்புள்ள சைவசமயா சாரியர்கள் செய்த இனிமையாகிய செந்தமிழ்ப்பாவினங்களைக்கேட்க விரும்பி வந்து களங்கமற்ற சிவாலயத்து மெய்யடியார் அப்பாடலை பாடுவதைக்கேட்டு அவர்களைப்போலும் புண்ணியம் பெறவேண்டி பொன்னாட்டவரும் இச்சிக்கும் நாடு.—எ-று. (7)

(இ-ள்.) கடைச்சங்கத்தலைவராகிய நற்கீரரால் கைலைபாதி காளத்திபாதி என்று பாடிய பாடலும் திருஞான சம்பந்தப் பிள்ளையாரால் திருமயிலையில் காபாலீச்சுரன் மகிழ்ந்து என்பைப் பெண்ணாக்கும்படியாய் பாடிய பாடலும், வேலைவென்ற கண்ணுள்ள காரைக்கால் பேயரால் திருவாலங்காட்டீச்சுரன் திரு நடனத்தைப பாடிய பாடலும், கொண்ட நாடு.—எ-று. (8)

(இ-ள்) இச்சிறப்பு வாய்ந்த தொண்டை நாடாகிய பெண்ணின் ஆபாரணங்களின் முத்து மாலையில் நடுநாயகமாகவிருக்கின்ற மாணிக்க மணியை ஒத்து அழகிய குடியேற்ற நல்லூரெனகின்ற ஒரு நகரமுண்டு அது ஞான தீபம் போன்றுளளது.—எ-று. (9)

(இ-ள்.) அந்நகரத்தில் தான் கற்ற சாத்திரத்தில் விதித்தவண்ண நடந்து மீட்டும் அது வழுவாமல் மற்கடம்போல் பற்றிபிறழாத மனதில் தோன்றும் தெளிவோடிருந்து அந்த மார்க்கமே நிற்கவேண்டியதே நல்லதென மேலோர் சொல்லியபடி நின்ற கல்வியுடையவர் உண்டு.--எ-று. (10)

(இ-ள்) நோயாகிய மரணபவ நீங்க பெரிய பசி நோயைப் பொருத்து, தன்னால் ஒருயிர்க்கும் ஒரு துன்பமு நேராத பணி பூண்டு உலகத்திலுள்ள மூவாசைகளையும் வேரற நீக்கி சிவானுக்கிரகம் பெற நெருங்கிய சத்தினிபாதத் துத்தமர்கள் அவ்விடத்தில் அநேகர் உண்டு.--எ-று. (11)

(இ-ள்.) வேதங்களால் விலக்கப்பட்ட தீமையான காரியங்கள் எவை எவையோ, அவைகளை, ஐம்பொறிகளுந் தத்தந்தொழில்களை மறந்து அறிவழிந்திருக்கும், மரணகாலத்திலும் நினைக்காதவர்களாகி சைவாகமங்களில் விதித்த வண்ணம் அணிகின்ற திருநீற்றுச்சாதனமே முத்தியடைவதற்கு நேரான காரணமென்று அதனைக் கடைப்பிடியாகக் கொண்டவர் எண்ணிறந்தவர்கள்.--எ-று (12)

(இ-ள் அழகிய பொன்னாபரணமணிந்த அந்நகர மங்கையர் எமது தந்தையாராகிய சிவபெருமானது வாமபாகத்திலெழுந்தருளியிருக்கின்ற உமாதேவியாரைப்போல ஒவ்வொரு தினமும் புண்ணியத்தைத் தரும் மேன்மையான தினமென மதித்து பிரதியுபகாரம் வேண்டாமல் நாடோறும் முப்பத்திரண்டறங்களையும் குறைவற வளர்ப்பார்கள்.--எ-று. (13)

வெண்களிங்கம் விழிமணி வெண்பொடி
கண்களிப்பத் தரிப்பவற் காணுறில்
மண்களிக்க வணங்குவா வாமமோர்
பெண்களிக்கும் பெருந்தகை யென்னவே. (14)

நானமாடு நகுஞ்சிவ வேடமெய்ம
மோனஞான முனிவ ரமிர்தமுட்
பானமுண்பா முனிபபெய ராற்றின்சோ
பானமெங்கும் பராயின ராயிடை (15)

வேறு.

தருவெலாந் தேவதாரே தரையெலாம் பொன்னினேரே
மருவெலாஞ் சுகந்தவாச மனமெலாம்பரந்த னேசம
தெருவெலாம் பந்தற்றூமந் தீயெலாம் வேள்வித்தூமம்
திருவுலா நல்லூரென்னுஞ் சிவபுரச்சீரி தம்மா. (16)

வேறு.

திரிகடுகிற் சபரோக சம்மார மரீசிவிலை செயுந்தாளாளன், கரி கடுக வுரித்தணிந்தான் றீமையறிந் தடபமெனுங் கடவுளர்க்காய், வருகடு வுண்டாதரித்தான் முத்திதலத் துத்தமமாய் வயங்கப் பெற்று, திருகடுக்குமனை மகவினுடன் முத்திசேர்ந்த நல்லூர் சீரனந்தம் (17)

பத்திவலைப் படுநமப னனுதியே யமர்ந்த விந்தப்பதியை யெய்த, வத்தியினான் மொத்துண்ட சித்தமுளா ராரேனு மணுகியன்பாய், சுற்றிவலஞ் செயவகலுஞ் சினகரத்தின் முற்றோன்றுந் தூலலிங்க, மெத்திசையிருந்து தரிசித்தவருஞ் சிவனுலக மெய்து வாரால் (18)

காமரிதட் கட்டுடைய பூமணம்போய் சேப்பையினுங் கதிக்குஞ் செங்கேழ், தாமரையா சனத்தமர்ந்தாள் பணிவிடை கேட்டநவ ரதந் தான டிப்பள், தோமினெறியா லுஞற்று முற்பவத்திற் செய்புனித தோற்ற முந்த, சேமநலூர் குடிபுகுத வெண்ணிவரும் புண்ணியர்க டிருமு னம்மா. (19)

(இ-ள்.) அந்நகரத்திலுள்ளவர்கள் யாவரும்வெண்மையான வஸ்திரமும் உருத்திராக்க மாலையும் வெள்ளிய திருநீறும் ஆகிய சிவசின்னங்களைத் தரிக்கின்றவர்களைக் கண்டால் தமது இடப்புறத்திலிருந்து உமாதேவியென்னும் பெண்ணானவள் சந்தோஷமடைய வீற்றிருக்கும் பெருங்கருணையாளனாகிய கருப்புலீசநாதனென்றே பாவித்து பூமியில் விழுந்து வணங்குவார்கள். —எ-று. (14)

(இ-ள்.) நீராடுதற்கு வந்திருக்கின்ற இவ்வேடப் பொலிவுடைய அடியவர்களும், உண்மையாகிய ஞானவரம்பை யுணர்ந்திருக்கின்ற மௌன முனிவர்களும், மதிமண்டலத்திலிருந்து சொரிகின்ற அமுததாரைகளை யருந்தி யழியாத சரீரமுடையவர்களும் அந்நகரத்தின் கண்ணுள்ள கௌண்டிஞ்சநதியின் படித்தலங்களில் நிறைந்திருப்பார்கள் --எ-று. (15)

(இ-ள்.) இலக்ஷ்மீ விலாசம் பொருந்தி எப்போதும் மங்களகரமாயிருக்கும் நன்மையாகிய ஊர் என்னும் பொருள்படும் நல்லூர் என்னும் பெயர்க்குக் காரணம் எவையெவையென்று பார்க்குமிடத்து, அவ்விடத்திலுள்ள மரங்களெல்லாம் கற்பகத்தருக்களைப்போலிருக்கின்றன. தரைகளெல்லாம் பொற்சுண்ணங்களால் நிறைந்து பொன்னுலகம் போன்றிருக்கின்றன. இடைவிடாது மலர்ந்துகொண்டிருப்பதால் மலர்களெல்லாம் சுகந்தத்தை வீசிக்கொண்டிருக்கின்றன. அவ்விடத்தில் வசிக்கும் மனிதர்கள் மனங்களெல்லாம் சிவபெருமானிடத்தே பதிந்த அன்பு வடிவங்களாயிருக்கின்றன. வீதிகளிலெல்லாம் பந்தல்களும் பூமாலைகளும் நிறைந்துள்ளன மூளுகின்ற தீயெல்லாம் வேள்வித்தீயாய் தமக்கும் பிறர்க்கும் உதவி தருவதாயிருக்கின்றன. ஆகையால் இவைதான் அப்பெயர்க்குத் தகுந்த காரணம்.--எ-று. (16)

(இ-ள்.) விரைந்து வந்த யானைத் தோலை யுரித்துப் போர்வையாகப் போர்த்தவரும் பாற்கடலைக் கடைந்தபோதெழுந்த ஆலகாலவிஷத்தால் தங்களுக்கு நேரிட்ட, தீங்கையறிந்து அபயமென்றோலமிட்ட தேவர்களுக்காக அதனையுண்டாதரித்தவருமாகிய சிவபிரானெழுந்தருளியிருக்குந் தலங்களுக்குள், சேவித்தவர்களுக்கு முத்தியைத்தரும் உத்தமதலமாய் விளங்கி, முன்னொருகாலம், திருகடுகத்துள் சிலேத்தும சங்காரியாகிய மிளகு வியாபாரத்தில் முயன்ற ஓர் வியாபாரி திருமகளைப்போன்ற தனது மனைவி மக்களுடன் முத்தியடைந்த நல்லூர் என்னுந் தலத்தின் பெருமை இன்னும் அனந்தமுண்டு.--எ-று. (17)

(இ-ள்.) பக்திவலையில் அகப்படுவோனாகிய எமது கருப்புலீசநாதன், எக்காலத்தும் எழுந்தருளியிருக்கின்ற இந்த நல்லூரென்னுந் திருப்பதியின் கண் எவ்வித பாவத்தாலாயினும் பீடிக்கப்பட்ட மனமுடையவர்கள் அன்புடன் சென்று வலமாகச் சுற்றிவர அப்பாவத்தினின்றும் விடுபடுவார்கள், அந்நகரத்திலுள்ள ஆலயத்தின் முன்னே தோன்றுகின்ற கோபுரத்தை எத்திக்கிலிருந்து சேவித்தவர்களும் சாலோக பதவியை யடைவார்கள்.--எ-று. (18)

(இ-ள்.) முற்பிறப்பில் பாவங்களுக்கஞ்சிச் செய்யும் நன்மார்க்கத்தினால் சம்பாதித்த புண்ணியப்பேற்றால் பிறந்தவர்கள், பிறந்த அப்பிறவியிலும் மேன்மையடையும்பொருட்டு, காவலுடைய நல்லூரில் வசிக்கவேண்டுமென்றெண்ணிவரு மப்புண்ணியவான்கள் முன்னே அழகிய இதழ்களானவை முறுக்கவிழ உள்ளிருந்தெழுந்த மணமானது தூரத்திலுஞ்சென்று பரிமளிக்கும் செந்தாமரையாசனத்தமர்ந்த இலக்ஷ்மியானவள் அவர்கள் ஏவலின் பிரகாரம் தாண்டவஞ் செய்துக்கொண்டிருப்பாள்.--எ-று. (19)

தலநலத்தை யறிந்துள்ளார் தைம்மதிவை கனைநியமஞ் சார்ந் தினல்லூர், இலகாளேத்தெரி சிக்கப் பிரதோடப் பிரதக்கணங்க ளாற்ற, வலவாவர் நாவகலாள் தவளநில வெழுசலச வாணியத் தால், புலவரோன வுலகேத்த நாற்கவியுஞ் சொலும்வன்மை பொருந்துவாரே. (20)

பண்பயிலு விச்சையுளார் செயக்கடவ தொன்றுண்டு பகரக் கேண்மோ, பண்பிறொடு மவ்வூரின் முக்கணியினிரதத்தாற் பர மற் காட்டின், விண்பயிலுங் கருதருவர் கேட்டுவத்தி லறநாண மிளிர் மிடற்றில, தண்பயிலுஞ் செந்தமிழொண் மாவேத மோது மொரு சம்பத்தாமே. (21)

பற்றமல சங்கரற்க ணிட்டுலகப் பற்றைவயும் பாறவிச்சை, யற்றவருக் கன்புகனிந் தன்னமொரு தினநீவோர்க் கணியினல் லூர் நற்றவரெ னப்பொலியு மோரிருடிக் கான்முளைக்கா நவன் றன்னை, யெற்றுசிவ நித்தமுத்தப் பேருலக மேற்றுவிக்கு மேனி யாமே. (22)

கனககொடு முடிநந்தி குறும்பொறைபி னின்றிழியுங் கமலஞ் சான்ற, வனககௌண்டிஞ்சமுனி யாற்றுதவப் பேறுதவு மாறு சூழும், பனகவணி யரனல்லூர் வாழ்நரெவ ரவர்வினைகள் பாற வத்தால், தினகரனே யெனவிளங்கித் தேசத்திற் கொடும்பிணிகள் சிதையுமன்றே. (23)

மடடவிழு மலாளகச் சிவகாம வல்லிபதம் வணங்குமாதர், கட்டழகு பெற்றிமபர் பேரெழிலார் கணவரொடுங் கலந்து வாழ்ந் தாங், கிட்ட கன தன தானியம் பலணி பொன்னுடை யெய்தி வாணாண், மட்டுமொரு நலிவின்றி யரும்போக நுகர்ந்துமன மகிழ்ந்து வாழ்வார். (24)

மாணபவத் திரையலைக்குங் கடனீந்த விநல்லூர் வந்து தித் தார், திரணமென விகபரத்தி னசையினது பசையகலச் செய்த கன்ற காரணவலைவாற சிவபோகமுற வெணுமெண்ணங் காண்கிற் பாரெப், புரணகன பண்டிதர்க்கு மல்லார்க்கு மந்நினைவே பொருந்து மாலோ. (25)

(இ-ள்.) இத்தல விசேடத்தையறிந்தவர்களாகி தை மாதம் விடியற்காலத்திலெழுந்து நித்ய நியமத்தை முடித்துக்கொண்டு இந்நல்லூரிலெழுந்தருளியிருக்கும் பாலசார்த்தூல மூர்த்தியைத் தெரிசிக்கவும், பிரதோஷ காலத்தில் திருக்கோயிலை வலஞ்செய்யவும் வல்லவர்களுடைய நாவின் கண்ணே, நிலவு போல் விளங்கும் வெண்டாமரை மலரில் வீற்றிருக்கும் கலைமகளானவள் நீங்காதிருப்பள், அப்படி நீங்காதிருக்குங் காரணத்தால் புலவர் இவரென்று உலகிலுள்ளார் துதிக்க ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், என்னும் நான்கு கவிகளும் பாடும் வல்லமையைப் பொருந்துவார்கள்.--எ-று. (20)

(இ-ள்.) இசைத்தமிழைக் கற்கவேண்டிய ஆசையுள்ளவர்கள் செய்ய வேண்டிய புண்ணியம் ஒன்றுண்டு அதைக் கேளுங்கள் சுத்தமாகிய மனதுடன் அவ்வூரிலெழுந்தருளியிருக்கும் சிவபிரான் திருமுடியில் வாழை, மா, பலா என்னும் முக்கனிகளினிரசத்தால் அபிஷேகஞ் செய்தலால் ஆகாயவாசிகளாகிய கந்தருவர்களுங் கேட்டு மனதில் மிகவும் நாணமடைய, விளங்குங் கண்டத்தினின்றெழுந்து குளிர்ச்சியைத்தரும் மூவர் திருவாக்காகிய செந்தமிழ் வேதமோதும் இசைச்சம்பத்துண்டாகும்.--எ-று. (21)

(இ-ள்.) இந்த நல்லூரானது அகபபற்று புறப்பற்றென்னும் இருபகுதியாகிய உலகப்பற்றெல்லாம் கெட நின்மலனாகிய சங்கரனது திருவடிகளில் வைத்த பற்றுள்ளவராய் ஆசையற்றிருக்கின்ற பரம ஞானிகளுக்கு அன்பு மிகுந்து ஒரு வேளை யன்னம் உண்பித்தவர்களை நன்மையான தவமுடையவரென்று சொல்ல மேன்மைபெற்று விளங்கிய மிருகண்ட முனிவர் புத்திரனாகிய மார்க்கண்ட முனிவர்க்காக இயம தருமனை யுதைத்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் நித்திய முத்தித்தானமென்று சொல்லும் திருக்கைலாயத்திற்குச் செல்லும்படி ஏற்றுவிக்கும் ஏணியாகும்.--எ-று. (22)

(இ-ள்.) மேன்மையால் மிகுந்து பரிசுத்தமாகிய கௌண்டிஞ்ச முனிவர் செய்த தபோ பலத்தால் தோன்றி பொற்சிகரங்களையுடைய நந்தி மலையினின்றும் பாய்கின்ற நீரானது கௌண்டிஞ்ச நதியாற் சூழப்பெற்ற சர்ப்பாபரணனாகிய கருப்புலீச நாதர் எழுந்தருளியிருக்கும் நல்லூரின்கண்ணே, தாங்கள் செய்த தீவினைகளால் வந்த நோய்கள் தீரும்பொருட்டு வாசஞ் செய்கின்றவர்களெவர்களோ அவர்களுக்கு அவ்விடத்தில் வாசஞ்செய்த பலத்தினால், சூரியனைப்போன்ற காந்தியோடும் விளங்கி உடம்பிலுள்ள கொடுமையான அந்நோய்களெல்லாம் நீங்கிப்போகும்.--எ-று. (23)

(இ-ள்.) கருப்புலீச நாதர் இடப்புறந்தமர்ந்த, தேன் சிந்துகின்ற மலர் மாலை தரித்த கூந்தலையுடைய சிவகாமவல்லியம்மையின் பாதங்களை வணங்கித் துதிக்கின்ற பெண்கள், இவ்வுலகத்தில் இம்மையிலேயே சிறந்த அழகைப்பெற்று தங்களழகுக்கேற்ற பேரழகுடைய கணவரோடுங் கூடிவாழ்ந்து, தேவையாகிய நிறைந்த தன தானியங்களையும், பல ஆபரணங்களையும், பொன்னுடைகளையும், அடைந்து தமது ஆயுள்பரியந்தம் யாதொரு துன்பமுமில்லாமல் பெறுதற்கரிய போகங்களையனுபவித்து மனமகிழ்ச்சியோடும் வாழ்வார்கள்.--எ-று. (24)

(இ-ள்.) சனன மரணமாகிய அலைகள் மோதுகின்ற சம்சார சாகரத்தை நீந்தும்பொருட்டு இந்த நல்லூரில் வந்து பிறந்தவர்கள், இகபரசுகங்களை துரும்புபோல் மதித்து அவ்வாசைகளில் வைத்த பிரியத்தை நீங்கச்செய்து பரந்திருக்கின்ற மனோசஞ்சலமானது ஆறுதலையடைய சிவபோகத்தை யனுபவிக்கவேண்டுமென்கின்ற தங்களெண்ணத்தின் பிரகாரம் அச்சிவபோகத்தை யனுபவிப்பார்கள். இவ்வெண்ணமானது வேதாகமங்களில் பாண்டித்தியமுடையவரிடத்தன்றி அப்பாண்டித்திய மில்லாதவரிடத்தும் எப்போதும் பொருந்தியிருக்கும்.--எ-று. (25)

நன்மையினைக் கடைப்பிடித்தார் புரிகின்ற தெஞ்ஞான்று நன் மையாமந், நன்மையாலெய்துபய னல்லொழுக்க நற்குடிமை நற சார்வுற்ற, நன்மைதரு பிறப்பன்றே யப்பிறப்போ ரொருங்கு குழீஇ நாளும்வாழும், நன்மையினாற் பேர்பெறுநல் லூராயி னிதன்பெருமை நவிலலாமோ. (26)

ஈசனுரு வியமலன் குடியேற்ற நல்லூரை யேத்துமேலோர்க், காசகலு மெடுத்தபவத் திளைப்பாறு மப்பவத்தே யாமெய்ஞ் ஞானத், தேசகனு லந்தவர்கள் வாக்கிலெழு வசனமெலாந் தெய்வ வேத,வாசகமா மப்பதியின் மகிமையினம் வழுத்துவநா மகிழ்ந்து கேண்மோ. (27)

விண்டநகர் குடவாசை நனைத்திரைமூப் பகலப்பால் வேலை புக் குப், பண்டசலத் தறிநிறீஇயரவுகயி றுக்கடைந்த பாங்காங் குற்ற, வண்டர்வெரு வராவூழிக் காலவன லுஞ்சிறுக வார்த்துண் டாநஞ், சுண்டகுடி யெனும்புரத்தான் சிவநேச வசிதான னொரு வனுண்டால். (28)

கஞ்சமல ரொளிர்நீரைந் தருவென்ன நறுநிழலங் கனசமன்னி, விஞ்சுநில னந்நிலத்தி லொன்றனந்த மாயோங்கு விளையும்பொங்க, வஞ்சலசை வந்துவந்தே யநவரதந் தாண்டவம தாடுமில்லான், நெஞ்சவஞ்ச மில்லார்க்கீ துண்டென்னுஞ் சொற்கிலக்கா நின்ற நீரான். (29)

பல்வினையி னும்பெரியோ ரியலிலரு ணெண்டதுவே பற்றிநாளு, நல்வினையி னல்லாத வழியிட்டும் பொருடேடு நாட்டமிலான், கல்வியறி வெனிலவனுக் கெடுத்தபவந் தொறுந்தொடர்பால கை வந்திம்மைப், புல்வினையே தூவினையாம் புனிதமுறக் கோளகத்திற் புந்திசெய்தான். (30)

அற்றமவா சிக்கணிருந் தமிதவருங் கறிப்பொதிந்த வங்கநேர்ந்து, முற்றலறிந் துள்ளவெலாம் சிவபுரத்தைக் கொள்ளைகொள்வான் நேரக்கொண்ட, முற்றினமே குணநெய்தற் புரமிருந்து வந்ததிரு முகங்கண்டின்றே, நற்றினமென் றுனெழுந்தா னதுசுமந்த பல் பூணி நடந்தவம்மா. (31)

(இ-ள்.) நன்மைக்கடைப்பிடி என்னும் மூதாட்டியின் சொற்படி அந் நன்மையைக்கடைப்பிடித்தவர்கள் செய்கின்ற தெப்போது நன்மையேயாகும், அந்நன்மையாலுண்டாகும் பிரயோசனமானது நல்லொழுக்கமும், நற்குடிப் பிறப்பும், நல்லிணக்கமும் பொருந்திய மேன்மையைத்தரும் பிறப்பல்லவா அந்த நற்பிறவியுடையவர்கள் ஓரிடத்தில் சேர்ந்து எப்போதும் வாசஞ்செய்வ தால் குடியேற்றநல்லூரென்னுங் காரணப்பெயரையுடையது இவ்வூராதல் இதன்பெருமையைச் சொல்லமுடியுமோ.—எ-று. (26)

(இ-ள்.) யாவருக்குந் தேவனும் உருவில்லாதவனும் மலரகிதனுமாகிய சிவபிரான் வீற்றிருக்கும் இக்குடியேற்றநல்லூரை வணங்கும் புண்ணியருக்கு மனமாசு தீர்ந்து இந்த பிறவியிலேயே இதுகாறுமெடுத்த பிறப்பின் கஷ்டம் நீங்கி உண்மை ஞானபபிரகாசமுண்டாகுமதனால், அவர்கள் வாக்கினால் சொல்கின்ற வார்த்தையெல்லாம் தெய்வத்தன்மையுள்ள வேத வாக்கியமென்றால் இந்த புண்ணிய பூமியின் மகிமையை இன்னமும் சொல்வேன் கேளு மென்றார் கந்தநாதன.—எ-று. (27)

(இ-ள்.) இப்போது நாம் சொல்லிவந்த தலத்திற்கு மேற்றிசையில் திரு மால் சுராசுரரைக்கொண்டு நரை திரை மூப்புகள் நீங்கும்பொருட்டு பால் சமுத்திரத்தையடைந்து, முற்காலத்தில், மந்தரகிரியை மத்தாக நாட்டி ஆதி சேடனைக் கயிறாகப்பூட்டி கடைந்தபோது அங்குள்ள தேவர்களெல்லாம் பயந்தோட ஊழி காலாக்கினியும் சிறிதெனும்படி ஆரவாரித்தெழுந்த நஞ்சுண்ட சிவபெருமானது குடி என்னும் சிவ நாமம் பெற்ற நகரவாசமுள்ளவனும் சிவ நேசனென்கின்ற பெயருடையவனும் ஒருவனுண்டு.—எ-று. (28)

(இ-ள்.) அவன் தாமரை மலர் பூத்த நீரோடைகளும் அதன் கரையில் கற்பகத்தருவென்ன வோங்கி வளர்ந்த சோலை நிழலும பொற் சன்னங்கள் அதிகரித்திருக்கும் நிலமும் அந்நிலத்தில் ஒன்றனந்தமாக விளையும் விளைவு முண்டாகி அதனால் கமலாசனியாகிய இலக்குமி வந்து சந்தோடமிகுதியால் சதாகாலமுந் தாண்டவமாடும் இல்லறததை நடத்துபவனும், மனதில் கபட மில்லாதவர்களுக்கு இதுவெல்லாமுண்டாகுமென்று சொல்லுநீதி மொழிக்கு இலக்கியமாகவுள்ளவனும்.—எ-று. (29)

(இ-ள்.) அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமை என்னும் பல கருமங்களினும் பெரியோர் அருளேதுவோ அதையடைந்து எந்நாளும் நல்வினையினால் பொருள் சம்பாதிக்கு நோக்கமுடையவனும் கல்வி யறிவு ஒழுக்கம் என்பது இவனுக்குதான் பிறந்த பிறவிதோறும் தொடர்ந்து வந்துவிட்ட குறையால் தேர்ந்து இப்பிறவியில் செய்யத் தொடங்கும் கரும மெல்லாம் சுத்தமாய்ப் புண்ணியமடைய மிளகு வியாபாரத்தில் மனதைச் செலுத்தினன்.—எ-று. (30)

(இ-ள்.) அந்தசமயத்தில் தென் தேசமிருந்துவந்த வாணிபர்கள் கொண்டு வந்த அளவில்லாத மிளகு பொதிகள் நிற்பதைபபார்த்து வந்திருக்கின்ற மிளகுகள் முற்றிலும் சிவசாயுச்சியப பதவியைக் கொள்ளைகொள்ளும் பொருட் டோ? யாதோவறியேன் விலைபேசி வாங்கி அதற்குமுன் தினத்திலேயே கடற்கரையைச்சார்ந்த பட்டினமிருந்துவந்த ஓலையைக்கண்டு மிளகுகொண்ட அன்றையதினமே நல்ல நாளென்று பிரயாணஞ்செய்ய பரிசனங்களுக்கு உத்திரவளித்தெழுமுன்னமே அம்மிளகு சுமந்த அனேக எருதுகள் நடந் தன.—எ-று. (31)

கண்டமாய் முருவகலா னமதுள்ளத் திருவகலாக் காட்சியத் தால், விண்டமாற் றந்த விராவிரதமுளீர் பரிசனங்காள் மிளர்தீப் பொன்னின், துண்டமாற் றக்கிரண மாற்றுயருந் தேற்றமெனுஞ் சொல்லாய்க்கொண்ட, பண்டமாற்று மென்னப் பதிவிட்டுக் கதி செல்லும் பாக்கனென். (32)

தூகலிங்கப் போர்வையினுல் விழிமணியான் முகத்தேசாற சோதிநீற்றன், மாகலிங்கத் தவனென்கோ பசுநிரைகட்பின் செல்வான் மாலோனென்கோ, ஏகலிங்கச் சைவயோக ஙகாண்ட கையாலதிரேகத் தேற்றந்தன்னல், வாகிலிஙகு விகச்சுடராம் பசு வேச மடமேவு மாணனென்கோ. (43)

இக்குவிலா னைக்கனலா மக்கநெரித் தானையகஞ் செண்ணிமுன் னம், வக்குமுனி வரணிருக்கு மறைமனுவின் முடிதந்த வண்கூர்ச் சத்தாங், தொக்குசகத் திரமுனிவர் குலநலத்தாமணி யென்கோ தூயவெல்லாம், விற்குமுவ கைக்கருத்தான் றன்றருமக் கிழமை நயமறுவிரதனென்கோ. (34)

அன்பறந்த வாவறவ ரகமணங்க ளுர்கண்களல்ல நோக்கா, தன் பரந்த வெல்லையகமிமிலேறறின் மேனின்றன் றனதனன்னன், முன்பரந்த கறிபரித்த மூரிமழ விடையினங்கண் முடிவிருந்தான் தென்பரந்த சாலேசில காவதங்க ளளவேகுஞ் செயலினன்றே. (35)

வேறு.

தூசெனப்பன்னுட் பற்றிய பற்றைத் துறந்தவர் வான்கதியடை யக், காசிகமடவா ராசைய ரங்கைக் கடலக மிருப்பதேகடுப்ப, மாசனத்தொகுதி வழிவிடச் சென்றர் வாழ்த்தினர் வணங்கினர் நின்று, ஈசநஞ்சண்டகுடி விடக்கண்டா னெழிற்குடி யேற்ற நல்லூரே. (36)

ஆலவாய்மேய வழனிறக்கடவு ளருட்பெறக் கொலே மறுத்தமல, வேலவாய் பொற்று மரைத்தட மிருந்தாங் கிருந்தவண் டானவா ய்க்கயல்கள், மேலவாய்ப் பாயுந் தடநல்லூர்ப்புகுந்த வெள்ளிய பாற்கடலலைகள், போலவாங்வந்த கறிபரியிடபம் பூத்தன கண்ட னர் வியந்தார். (37)

(இ-ள்.) அப்போது வணிகன் தமது களத்தில் உள்ள படிகநிறத்தை வேறுபடுத்திய விடக்குறி நீங்காத சிவபிரான் உம்முடைய மனதின்கண்ணே நீங்காத காரணத்தால் நாம் சொல்லிய வார்த்தையைக் கடவாது நடக்கும் விரதமுடைய பரிசனங்களே? விளங்கிய தீயில் பொன்னின் பொடியைக் காய்ச்சிக்காய்ச்சி மாற்ற அதன் மாற்றுயர்வதுபோல் நாம் கொண்ட பண்டத்தை மாற்றுவதாகுமென்று சொல்லி தானிருந்த ஊரை விட்டு சிவபுரமென்னுங் கதியையடையும் வழிபோக்கனுனன்.—எ-று. (32)

(இ-ள்.) இவ்வணிகனை சுத்தமாகிய வெண் பட்டாடையுடையினாலும் உருத்திராக்ஷ மாலிகை பூண்டிருத்தலாலும் முகக் காந்தியினாலும் விபூதி தாரணத்தாலும் தெய்வலோகத்துள்ள சூட்சம தேகியாகிய தேவனென்று சொல்வேனோ அல்லது, அங்கலிங்க சையோகமாகக் காணப்படும் அதிசயக் காட்சியால் அழகிய சிவந்த கனற்பிழம்பாகிய பசுவேசரது மடாலயத்திலிருக்கு மாணாக்கனென்று சொல்வேனோ.—எ-று. (33)

(இ-ள்.) முன்னொரு காலத்தில் கரும்பை வில்லாகவுடைய மதவேளை அக்கினிக் கண்ணால் நீராக்கிய சிவபெருமானை மனதிலுன்னி வக்குமுனிவர் இருக்கு வேத மந்திரத்தினால் தருப்பையை முடிந்து யாகாக்கினியில் இட்டபோது அதில் பிறந்த ஆயிரமுனிவர் குலத்தவனென்பேனோ அல்லது நல்வினையால் கொண்ட பொருளை விற்குமகிழ்ந்த வெண்ணத்தினால் குலத்தருமமாறு தவனென்பேனோ.—எ-று. (34)

(இ-ள்.) அன்புந் தருமசிந்தையு நீங்காத முனிவர் மனமும் அழகிய மகளிர் கண்களும் விலககியவைகளைப் பார்க்காத தன்னுடைய இடமகன்ற நகரின் எல்லையில் திமிலுடைய இடபத்தின்மேலேறி முன்னே நடந்த மிளகுப்பொதி சுமந்த வலிமையும் அழகுமுள்ள எருது கூட்டங்கள் வளமுள்ள சாலைகள் வாய்ந்த சில காதவழி வரைக்கு நடக்கும் அவைகளின் கடைபாகமிருந்தன்.—எ-று. (35)

(இ-ள்.) அணுவின் திரணமாக அநாதியாகத் தொடர்ந்து வந்த இச்சையை நீத்தவர்கள் மேலாகிய மோக்கமடைய செல்லுவதைபபோலும் பொன்னிலமகளிர் என்னு மூவாசையுடைய மாந்தர்கள் மூலாங்கார சாகரத்திலிருப்பதுபோலும், இவ்வணிகருககு வழிவிட வந்த சனக்கூட்டங்கள் அவரை வணங்கி அவ்விடததிலேயே நிற்க, வணிகன் பரமேசுரன் எழுந்தருளியுள்ள நஞ்சுண்ட குடியை விட்டான் அழகிய குடியேற்ற நல்லூரைக் கண்டான்.—எ-று. (36)

(இ-ள்.) திருவால வாயின்கண் எழுந்தருளியிருக்கும் அக்கினி வடிவுடைய சோமசுந்தரக்கடவுள் திருவருள் பெறவேண்டி கொல்லாமையையே விரதமாகக்கொண்டு நல்ல பரிசுத்த மனமுள்ள பொற்றாமரைப் பொய்கையின் கரையில் ஒரு நாரை சிவத்தியானத்துடன் மௌனமுற்றிருந்தது போலும் கௌண்டிஞ்ச நதி தீரத்தில் தங்கியிருந்த நாரையின்மேல் கயல் மீன்கள் போய் வீழ்ந்துபாயும் வளமுடைய தடாகங்களால் சூழப்பெற்ற நல்லூரில் புகுந்து வெள்ளிய பாற்கடல் திரண்டுவந்ததுபோல் மிளகு பொதி சுமந்த இடபங்கள் வருவனவற்றை அந்நகரவாசிகள் கண்டு அதிசயமடைந்தார்கள்.—எ-று. (37)

அங்கிவேசனத்துச் சிவபரம் பரையா னறுமுக னிளவலார் வழியான், செங்கிறக் குந்தக்குலநலா னாசத்திருவகுப் பான்பதித்தெருணூல், சொன்னெறி யொழுகு நடையினன் றோரார்துணுக்குறு வடிவினன்பாவ, மின்னெறித் தொழிலே தந்தமர்க்குணர்த்தும் வித்தையைக்கைகொளும் விரதன். (38)

காருணிப் போலாதுலகுபி ரோம்புகாரணன் பொதுநிலத்துண்டாம், ஊருணி யனையான் பலர்கொளச் செழிக்குமூர்நடு கனிமரமொப்பான், பாருணியென்னப் பேரொழிலுடையான் பத்துடனெனப் பகரும், சீருணிபிரவி மதிநதியியைபத் தேருகைம் மாறிலாச செல்வன். (39)

உலையிடுமழுதை விருந்தினாக்கென்றே யுளத்தெண மனைமகார்க் குரைப்போன், கலைவிதிமறவான் விலக்கிய கருதான் கருதல றுப வினாரு. நலைசுகிவாழி யெனப்புகன் மொழியா ணுண்மலர் மாலை யானல்லூர், எலைச்சிவ மனன சீலனென்றுரைக்கு மேந்தலா துணர்நகெழுமேல்லை. (40)

உவந்துறும் பொருளும் பொருளுடையவர்க்கே யொங்குமென் மேனுமுன்னோற்ற, தவநதவ முடையார்க் காகுமொன்றறைக்க சத்துவத் துத்தரவேத, நவநரு மொழிக்கோர் சான்றிவனென்ன நாட்டவா ரகமகிழ்வெய்த, சிவந்தரு நினைவாற் கண்டனனின்னே திருமகனெறழுநதிரளை. (41)

சிதவான்குழுமி யோதமுண்டெழுநது செய்யகூன் முதிர்தாச் செம்பொற, பூதாமென்ன விருமருங்கணியாற் பொலிவெழின் மாடமேற் பொருந்த, நீதம்வந துறநகுந திருவுலாமருகா நிறை செல வேதவணோர்ந்த, நாதனைரென்னக் கேண்மியினென றனைந்தா னமர்தமிற் றாதரைவிளியா. (42)

சிலனுத்தரமே சிரமெனப் போந்தார் சேமுகமிருந்தனர் சில்லோர், கோலவான்முதல்வர் கண்டனர்மீண்டார் கொற்றவ கேண்மதி வருவார், நீலவான்மேனி வெளிய நீறணியா நிறையுடைக் கண்ண னேவன்றேல், ஆலமுண்டமரர்க் கமுதளித்தவனே யாவரென் றறைகுவ தறியேம். (43)

(இ-ள்.) அந்நகரத்தின்கண்ணே சிவபரம்பரை க்ஷத்திரியனும் உப சுப்பிரமணியர் குலத்தில் வழி வழியாக வந்து தோன்றிய செங்குந்த வரசசந்ததியானும், பதியைக்கண்டு தேறும் சாத்திரங்களில் சொன்ன வண்ணம் நடக்கும் ஒழுக்கமுடையவனும் பகைவர் கண்டஞ்சும் தேகதிடமுள்ளவனுமாகவிருந்தாலும் பாவமில்லாத கருமமே தனது சுற்றத்தினற்கு போதிக்கும் விவேகத்தைக் கைகொண்ட விரதமுள்ளவனும்.—எ-று. (38)

(இ-ள்) துட்டர்களைக் காயுந்தன்மையால் கிருபையுடையவனென்னத் தோன்றுதேனும், உலகத்திலுள்ள சீவர்களுக்கு உபகாரஞ்செய்வதில் கைம்மாறு கருதாத மேகத்தைப்போன்றவனும், பலர்க்கும் பொதுநிலத்திலிருக்கும் நன்னீர் நிறைந்த குளத்தை யொத்தவனும் ஊர்நடுவில் யாவரும் உண்டுகளிக்கச்செழித்துப் பழுத்திருக்கும் தேமாமரத்தைப்போன்றவனும், உலகத்தை யுண்ட திருமாலென்ன அழகுடையவனும், புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பதினாறு பேறுடையவனும், சூரியன், சந்திரன், ஆறு இவைகள்போலும் பிறிதி உபகாரங் கருதாது செய்யுநன்றியுடையவனும்.—எ-று. (39)

(இ-ள்.) தன் மனைவிமக்களுக்கு அடுக்களையில் இடுகின்ற அமுதுபடியை அதிதிகளுக்கென்றே சங்கற்பித்து பெய்யுங்களென்று கட்டளையிடுபவனும், சாத்திரத்தில் விதித்தவைகளை மறவாதவனும், விலக்கியவைகளை நினையாதவனும், தன்னைப பகைஞரும் நேசரும் நீ நற்குணமுள்ளோன் சுகமாக வாழக்கடவாயென வாழ்த்தும் சொற்பூண்டவனும், அன்றலர்ந்த மணமாலையுடையவனும் எல்லையுடைய நல்லூரென்னும் நகரமேவிய சிவனையே தியானிப்பனுமாகிய மனனசீலனென்னுந் திருநாமமுடைய அரசன் இச்செயலைக் கண்ட தருணத்தில்.—எ-று. (40)

(இ-ள்.) நல்வினையால் வரும்பொருளுடையவர்க்கே மேலுமேலும் பெருகும், முன்னேசெய்த தவமுடையவர்க்கே தவமும் பலிக்குமென்று சொல்லிய சத்துவகுணமுடைய முப்பான்மறையினது மகிமைதங்கிய வாக்கியத்திற்கே இவன் சாட்சியென்று உலகுள்ளார் மகிழ்வடைய சிவபெருமான் கொடுத்த வெண்ணத்தால் அச்செல்வன் எருதின் கூட்டத்தைக்கண்டான்.—எ-று.(41)

(இ-ள்.) குளிர்ந்த மேகமானது கடனீரை யுண்டெழுந்து தனது செவ்விய சூல்முதிர பொன்மலைபோலும் உயர்ந்து இருபாரிசத்திலும் அழகினல் பொலிவுற்ற மாளிகை மேல்படிய அனுதினமும் வந்து கவிந்துள்ளதாகவிருக்கும் இலக்குமிவிலாசம் பொருந்திய வீதிகளில் சுமை எருதுகள் போகின்ற காரணமென்ன இவைகளுக்கு தலைவன் யாவனென்று கேளுங்களென்று தனது தூதரையழைத்துச் சொன்னான்.—எ-று. (42)

(இ-ள்.) அம்மனனசீலனது ஆஞ்ஞையை சிரசாக வகித்து சென்றவர்களில் சிலர் அவ்வானிரை முன்னேநின்று போவனவற்றை நிறுத்தினார்கள், சிலர் அழகிய வணிகனைக்கண்டு வந்து சொல்வார்கள் - ஏ அரசனே? கேட்பீராக அங்கே வருகின்றவர்களில் திருமேனியில் வெள்ளிய விபூதியணிந்து பசுக்கூட்டங்களை மேய்க்கப் பின்செல்லுங் கண்ணபிரானோ, அல்லது ஆலகால விடத்தையுண்டு தேவர்களை [illegible] சிவபெருமானோ யாவர் என்று சொல்வோம்.—எ-று. (43)

நாபுரப் பவர்க்கோ வுலகெலாங்கேட்ட நல்குமான் மனுநெறி முறையாற், பூபுரப் பவர்க்கோ குடியினமடங்கும் புற்கலத் தரு வெலாந்தேவாம், ஆபுரப் பவர்க்கோ வானவருறையுளப் புரத்தப் புரத்துண்டாங், கோபுரப் பதுமமென்னலா லென்னே கொள்ளை யானிரை சொலிற்கடங்கா. (44)

பண்டமாற்றென்ன விண்டனர் தலைவர் பார்மின்னெஞ்சில வென்றடியிற், றண்டமாய்ச் சூதர் தாழ்ந்தெழா முன்னஞ் சாந்த னத் தலைவனைச்சாரா, கண்டமா யகண்டமாயவை யெவைக்குங் கரியதாம் பரசிவவடிவங், கொணடிரு ளுகைத்துச் செலவிலாம் புனிதக் குடகனைத் தாழ்ந்திதுபுகலும். (45)

உரைவிடம் போத வியாதெவ னெனநாமுசாவிலம் போது முச்சாமம், இரவினைநோக்காய் நிறபரிசனததோ டினறிருந் தெஞ் சிறுகுடிவில், தரையினைப் படர்ந்து வருமிளைப்பாறக் கணீர் வெனீர் பாலமுதருந்தி, மரைமலரலாந் துணைக்கரி வருமுன் வைக றைச் செலநலமல்லான. 46)

எகுநிற்குறிப் பேயதிககி திசையு யிந்திரியம்பரமென்றல், நாகி ளமஞ்சை புயலினம்படர நாண்மலர் சோலைவாயகுழுமி, தோகை களவிழ வெழின டமுநேற்றுஞ் சூழனலூர்க்கபபுரம போநதான், மாகமட்டணவு மாச்செறி வடர்ந்த வளவன மிருட செல லென் றும். (47)

இன்னண முகமன் கூறியமாற்ற மின்னமுதஞ் செவிப்புலன் வாய், பொன்னணவனக பாந்தனுண் டேற்றின் புரமிருநதொய் யெனவிழியா, கண்ணெனக் கண்ணின் மணியின்வர் தாய்க்குகரு திகை மாறுமற்றறியேன், அண்ணனின்னினிய வாக்கிய வமுத மனந்த வானநத மென்றறைவான். (48)

காளைமேற் பொதிந்த சுமையெலாமரிய காயமற்றவை கடற் பாக்க, நாளைமுத்தினத்திற் றீவகஞ் செல்லு நாரநாவாய்க் கிட வரைந்த, பாளையாமடலா லறிந்தனன் செல்வான் படாநதனன் பாந்தளும்பதத்தில், வேளைறுங்காதை மாற்றுபு நேரேன் விரைவி னென் செய்குதுமென்றான். (49)

(இ-ள்.) நாவைக் காப்பவர்க்கு உலகத்துள்ளவர்கள் கேட்டவையனைத்துங் கொடுப்பர், பூமியை காப்பவர்க்கு குடிசனங்கள் அடங்கும் பசுவை காப்ப வர்க்கு சுவர்க்கம் சத்திய உலகம் பரமபத மெல்லாங்கடந் தப்புராத்திருக்கும் கோவினது பதவியுண்டாகு மென்கின்ற ஆகமம் சொல்லியவண்ணம் பெற வேண்டியோ பசுக்கூட்டமானது அளவிறந்தனவாகவிருக்கின்றன —எ-று.()

(இ-ள்.) அவைகளின் முதன்மையாளரைகக்கண்டு கேட்டோம் அவர் வாணிபத்தின் மூலமாகச் செல்கின்றோமென்றார். எமது மனனசீல மகா ராஜனே? அக்காட்சியைத் தாமேவந்து பாருங்கள். என்று தூதுவர்கள் வணங்கிநிற்க அதுகேட்ட சற்குணமுடைய சீலன் அந்தகணத்திற்குள்ளா கவே போய் ஒன்றாகியும் பலவாகியும் சராசரப்பொருள்கள் அனைத்திற்கும் சாட்சிமாத்திரமாயுமுள்ள பரமசிவன் சின்னங்களை தரித்து ஒரு இடபத்தின் மேல்வருகின்ற புண்ணியமுடைய சிவநேசனைக்கண்டு இவை சொல்வான்— எ-று. (45)

(இ-ள்.) ஐய? தாங்களெவ்விடமிருப்பது இப்போது போகின்றதெவ் விடமென்ன யான்கேட்டுப் போவதை தடைசெய்யவில்லை இப்பகல் மூன்று சாமமாய்விட்டது இதனால், உமது பரிசனங்களுடன் எமது சிறிய குடிசையில் தங்கி வழிநடந்துவந்த சிரமசாந்தமாகும்படி தண்ணிய நீரும் பாலும் பாலமுத மும் உண்டு இளைப்பாற்றிகொண்டு தாமரைப்பூமலர சூரியன் கீழ்த்திசை யில் உதையமாகுமுன்னமே போவது நல்லது அன்றியும்.—எ-று. (46)

(இ-ள்.) இப்பொழுது தாங்கள் போகின்ற குறிப்பைப் பார்க்குமிடத்து கீழ்த்திசை நோக்கிச்செல்வதுபோலும் அக்கீழ்த்திசையோ இளமைவாய்ந்த மயில்கள் மேகங்கள் வந்து தவிழவோங்கிய அன்றலர்ந்த மலர்ப்பூங்காவில் கூடி கலாபங்களை விரித்து நடிக்கும் சோலைகள்சூழ்ந்த இந்த நல்லூரை கடந்தால் ஆகாயமளாவிய மரங்களடர்ந்த காடாகும் அக்காட்டில் இருட்பொழுது போ னால் ஏதாய் முடியுமோ.—எ-று (47)

(இ-ள்.) இவ்விதமாகிய இனிய உபசார வார்த்தையாகிய அமுதத்தை தனது செவியாகிய வாய்வழியே உண்டு அருமையாயும் புனிதமாகியும் வந்த வழிப்போக்கன் இடபத்தை விட்டிறங்கி அரசனை வணங்கி ஐயனே? எனது கண்போலுங் கண்ணினுள்ள கருமணிபோலும் வந்த உமக்கு யான்செய்யும் பிரதி உபகாரம் யாதுளது உம்முடைய பரமானந்த வசனமே எனக்கு அள வில்லாத சுகந்தந்ததென்று பின்னும் சொல்வான்.—எ-று. (48)

(இ-ள்.) இந்த எருதுகளின் மேலிருக்கும் சுமைகள் யாவும் மிளகு பொதிகள் அவைகள் நாளைமுதல் மூன்று தினத்தில் மற்றொரு தீவிற்குப் போகும் கடல்மார்க்கமாய் மரக்கலங்களுக்கு நிரப்ப அக்கடற் சார்ந்த நகர வாசிகள் எழுதிவிடுத்த ஓலையாலறிந்து போகும் காரியத்தில் வழிச்செல்பவ னாகிவந்தேன் அப்படிவந்த இந்தசமயம் உம்முடைய வார்த்தையுங்கடக்க முடி யாதவனாயிருக்கின்றேன் யாதுசெய்வேனென்றான்.—எ-று. (49)

வருவிருந்துண்ணு நோன்புநன்குடையே மறுக்கலை நஞ்சொலைச் செல்வம், கருவிருந்துநித்து மண்மிசைவிழுந்த காலையாங் கொணர்ந்தனஞ் செலுங்கால், திருவிருந்தென்னும் கொடுசெலத தருமோ திருநலூர் சிவன்றரலீதென், னுருவிருந தவர்களறிதர லென்றுனுவன்றருமுறை யுணர்சீலன். (50)

மாலயனறியா வன்னியாய் வளர்ந்தான் 'வன்னியினறு நிழலமர்ந்த, வாலயங்காண்டி செய்கடன் செய்பாக் கந்திவானுமை பிரதோடக், காலையெம்முன்ன நின்றதா மீதென் கருதலை நங்கௌண்டிஞ்ச, சேலியலுந்தி போதுமென் றமைப்பத் தேர்ந்தனன நிரங்கன்மாறரங்கன். (51)

வேறு.

மாயிரும் புவியிற் செல்வன் வருந்துதல் காணவஞ்சி
ஆயிரங் கிரணனத்த கிரிமுடி யமர்ந்தா னத்தாற்
பாயிருடுன்னி நம்பன் பத்திலார கமபோ லெங்கும்
போயறப் பறந்துமூடிப் பொலிந்திக மலிந்த தன்றே.

வேறு.

தெற்றெனமனன சீலனுற் கடிதிற் சிரியதுரிய மனைத்து, முற்றுகைச்செயுமா கட்டுரை வெளியாமுனந் தனதேவலர் பொதியின், பற்றிகங்குவியா வடுக்கலைக் கடுப்ப பதத்தனர்ப்புன்னனீரெருத்திற், குற்றவாறுதவி பரிசனர் தமக்கு முவக்குமாவூணினிதளித்தார். (52)

காணிய விருவ ரளவளாயமி தகாலநட்பாளரி னணவி, வேணியந்துறைபோய் மாலைசெய் கடன்கள் விதிவழியாற்றயுமுடித்தார், பாணிமற்றிருவர் நட்பகமறிய பற்றினர் நற்றின மென்ன, சேணியனல்லூ ரநாதிவி மானச்சேவையினுவல்கொண் டிற்றுர். ()

தூலமாலிலிங்கந் தொழுததிகாரச் சுந்தர நந்திகாட் பணிந்து
சீலமாமாதி சைவர் காற்கண்டு திருமுனை பன்முறைவிழுந்து
ஆலயத்துனுற்று மணிமணித்தீப மருச்சனை மற்றுள வாற்றி
மூலலிங்கேச சோதி கண்டவர்கண் மொழிவரா லெம்பரன்றுதியே.

(இ-ள்.) அம்மொழியைக்கேட்ட அரசன் சொல்வான், யானோ செல்விருந்தை யாதரித்து வருவிருந்தை எதிர்பார்க்கும் விரதமுடையேன் நீர் என்வார்த்தையைத் தடைசெய்யவேண்டாம் பொருட்செல்வத்தை நாம் தாய் வயிற்றின் பிறந்தபொழுது கொண்டுவந்தோமா? அல்லது போகும்பொழுது இந்த செல்வம் என்ன உபசாரம்செய்யும் அதைக் கொண்டுபோக முடியுமா? இவையனைத்தும் திருநல்லூர் பரசிவன் கொடுத்ததையென்ன மனிதரானவர் அறியவேண்டிய தென்றான் — எ-று. (50)

(இ-ள்.) முன்னொருகாலத்தில் திருமாலும் பிரமனும் திருவடியுமுடியு மறியாவண்ணம் அக்கினி மலையாய் வளர்ந்த சிவபெருமான் வன்னிமரத்தின் நிழலில் வீற்றிருக்கும் சிவாலயமிருக்கிறது யாரும் நித்திய கருமமுடிக்க மாலை காலமாகிய பிரதோடகாலம் வந்தது இவைகளையேனு நீர் நினைக்கவில்லையா கயல் மீனினம்பாயும் நமது கௌண்டிஞ்ச நதிக்குபபோவோ மென்றழைக்க அம்மொழிக்கு மிளகு விற்கவந்த வணிகன் சம்மதித்தான்.— எ-று. (51)

(இ-ள்.) இப்பெரிய பூமியின்கண்ணே வணிகன் வருத்தமுறுவதை தனது கண்களால் பார்ப்பதற்கு அஞ்சினவனாய் பலகிரண காந்தியுள்ள சூரியன் அத்தகிரியில் அமர்ந்தான், அதனால் பரவிய இருட்கூட்டங்கள் நெருங்கி சிவபத்தியில்லாதவர் மனம்போலும் உலகமெங்கும் நிறைந்து இடமக்கொண்டது.—எ-று. (52)

(இ-ள்.) மனன சீலன் அதையுணர்ந்து விரைவாக சிறந்த பொதி மாடுகள் யாவையு நிருத்தி யுபசரிக்கும்படி திட்டஞ்செய்யு முன்னமே அவனது ஏவலாளர் மிளகு பொதிகளனைத்தையும் இறக்கி ஓரிடத்தில் மலைபோல் குவித்துவைத்து அவ்வெருதுகளுக்குப் புலலும் நல்ல நீரும் கொடுத்து அதன் பின் வந்த பரிசனங்களுககும் நல்லுணவூட்டினார்கள். — எ-று (52)

(இ-ள்) இவ்விதமாக ஒருவரையொருவர் சந்திதத இவர்கள் இருவர் மனமுங்கலந்து பலநாள் நேசிததவர்போல் நெருங்கி ஆற்றின் துறைமுக மடைந்து மாலைசெய்யும் கருமங்களை விதிப்படிமுடித்து சந்தித்த இத்தினமே நல்ல நாளென நட்பின் மிகுதி தோன்ற ஒருவர் கையை ஒருவர் பற்றி மேன்மைதங்கிய நல்லூர் சிவபிரான் வீற்றிருக்கும் சிவாலயம் தெரிசிக்கும் விருப்பமுற்றார்கள்.— எ-று. (53)

(இ-ள்.) முன்னே கோபுர தெரிசனம் செய்து அழகிய அதிகார நந்தியை வணங்கி ஒழுக்கமுடைய ஆதிசைவ சிவாசாரியரைப பணிந்து ஸ்வாமி சந்நிதானத்தில் பலமுறை வணங்கி அவ்வாலயத்தில் செய்யவேண்டிய தூப தீப ஆராதனை அருச்சனை முதலியவும் செய்வித்து அக்காட்சியால் ஆனந்த பரவசராகி இவ்விதமாகத் தோத்திரம் செய்வார்.—எ-று. (54)

தரவிணைக் கொச்சகக்கலிப்பா.

காடவிழுமா நடஞ்செய கண்ணுதலே மரணபவப்
பாடவிழப் பட்டவெறும் பாமரரா மெந்தமக்கும்
வீடவிழ லுண்டாங்கொல் மிக்கரும்புட் கயமலரின்
ஏடவிழப் பாடுகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (55)

பொன்றலிலாப் பரிபாகப் புண்ணியருக் காழுணருள்
நன்றறியாத் தீதறியா நாயனையேற் குண்டாங்கொல்
முன்றிறொறும் பலவியங்கண் முழங்குகடி மணவொலியே
இன்றியமை யாதகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (56)

சஞ்சிதமெ லாமகன்று சாமியுன தாக்கநட
குஞ்சிதத்தாட் போதுநிழற் கூடுங்கொ லெந்தமக்கே
அஞ்சுகச்சொ லாயிழையா ரம்மனையா டயர்சோலை
எஞ்சுத லிலாதகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (57)

நீந்தமுடி யாதபவ னேநியகன் றுரவருட்
காந்துகளை யேறவெனுட் காணுங்கொன் மந்திகாஞ்
சேர்ந்தமலர்ச் சோலையுலாய்த் திரிதக்க கனிவனைடுத்
தேந்துகனி மாந்துகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (58)

மூலவகங் காரத்தா மும்மலமற் றிருவினையின்
காலமகன் றின்பமெழுங் காலமெனுட் காணுங்கொல்
கோலமணங் காவணத்திற் குங்குமம்பூம் பொடிபன்னீர்
சாலமக லாதகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (59)

மாமறைவி தித்தவணம் வாழ்வறி யாதுமனம்
காமவெறி யேற்குனருள் காணுங்கொல் விளையாட்டாய்
நீமகிழ லம்விதித்த நேமியச லங்கடக்கும்
ஏமவெயிற் காந்துகுடி யேற்றநல்லூ ரீச்சரனே. (60)

(இ-ள்.) சருவ சங்கார காலத்துண்டா மயானத்தின்கண் திருநடன மாடும் நெற்றிக்கண்ணுடையவரே? வண்டுகள் தடாகத் தாமரை மலரின் இதழ் விரியப் பாடியாடும் வளமுள்ள குடியேற்ற நல்லூரீசனே? அடியேனுக்குப் பிறப்பிறப்பால் பட்டபாடு நீங்க மோக்ஷவாயிலுந்திறக்குமோ. —எ-று. (55)

(இ-ள்.) ஒவ்வொரு தலைவாயில்கள்தோறும் பலவித மணப்பறை யொலியே இல்லாமல் முடியாது முழங்கும் குடியேற்ற நல்லூரீசனே? கெடுதலில்லாத மலபரிபாகமுடையவர்க்காகும் உன் திருவருளானது நன்மை தீமை யென்பதறியாத நாயினேயேற்குமுண்டாகுமோ.—எ-று. (56)

(இ-ள்.) அழகிய கிளிபோலுமொழியுடைய மகளிர் அம்மனைக்கொண்டு விளையாடும் சோலைகள் குறைவின்றி நிறைந்த குடியேற்ற நல்லூரீசனே? எமக்கும் சஞ்சிதக்கட்டவிழ்ந்து உனது தூக்கியாடும் குஞ்சிதபாத நீழற்பேறுங் கிடைக்குமோ.—எ-று. (57)

(இ-ள்) செவ்விதாக மலர்ந்த தோப்புகளில் உலாவும் ஆண் குரங்குகள் பறித்துக்கொடுக்கும் கனிகளைப் பெண் குரங்குகள் கையால் வாங்கியுண்ணும் சோலைசூழ்ந்த குடியேற்ற நல்லூரீசனே? கடக்க முடியாத பவசாகரங்கடந்து இளைப்பாற திருவருள் பிரகாசிக்கு முத்தியங்கரைகாண எந்நாட் செல்லுமோ —எ-று. (58)

(இ-ள்.) அழகிய மணப்பந்தரில் குங்குமம் கதம்பப்பொடி பன்னீர் இவற்றின் பரிமள நீங்காத குடியேற்ற நல்லூரீசனே? மூலாங்காரத்தாலுண்டாகும் இருவினையொப்பு மலபரிபாகம் உண்டாகுங்காலம் எப்பொழுது காண்பேனோ —எ-று. (59)

(இ-ள்.) நீ ஓர் விளையாட்டாக இப்பூமியின்கண் உண்டாக்கிய சக்கர [illegible]ரிபோலும் பொற்கிரணம் வீசுகின்ற மதிலால் சூழப்பெற்ற குடியேற்ற [illegible]சனே? பெருமைதங்கிய வேதங்கூறியபடி வாழ்வதற்குரிய அறிவில் [illegible] ஆசையாகிய பித்தேறிய மனமுடைய வெனக்கும் உன் திருவருள் [illegible]குமோ—எ-று. (60)

சாதலுடனே பிறத்தற் சகலமுடன் கேவலமாம்
போதல்வா லாலலையும் பொன்னூச லென்றநனும்
சீதமனத் தாயினருட் சிந்தையுள மாந்தரங்கை
யீதன்மற வாதகுடி யேற்றநல்லூ ரீச்சுரனே. (61)

பாரமில மென்றறியேன் பாழ்க்குழைத்துன் பதநினைக்க
நேரமிலை யென்றலையு நீட்டீர ரென்பெறுவேம்
ஆரிவரெ ணுதறவோ ரன்பரெளி யோரகத்தும்
ஈரமன நீரகுடி யேற்றநல்லூ ரீச்சுரனே. (62)

மாகமுறு மாநலத்தான் மறுபடுதநு ந்மையினால
போகவரு மென்றறியாப் புந்தியுளே மென்பெறுவேம்
சோகமென வுன்னருளே தோன்றுனருக் கின்றியென்றும்
ஏகசுக போககுடி யேற்றநல்லூ ரீசுரனே. (63)

எல்லையில்லாச் சிவபோகத் தெங்கெழிலெஞ் ஞாயிறெனும்
நல்லவர்க்கு தொண்டுசெய நாம்பெறுமா றுண்டாங்கொல்
சொல்லறத்திற் காதலனுங் காதலியுஞ் சேர்விலராய்
தில்லுறை யின்பகுடி யேற்றநல்லூ ரீச்சுரனே. (64)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்ன கண்ட கட்டரவ முருப்ப வென்பு நெக்குருக
முன்னு னெஞ்சங் கரையழிய மொழிகண் மாற மயிர்ப்பொடிப்ப
மன்னு மவசம் பரவசமாய் மறப்பு நினைப்பு மின்றிசிவ
சின்ன முள்ளும் புறம்பகலா சிவானந் தத்துண் மூழ்கினால். (65)

நெஞ்ச மான்பாற் கொடுத்ததனை மீட்டு நனவு நிலநோக்க, அஞ்சு
னெழுத்தை யுண்ணினையா அவ்வா லயத்தைச் சூழ்ந்து பினும்,
குஞ்சி பவழம் போன் முத்தன் குறித்துவிடைகொண் டிரு
வோரு, மஞ்சு துயில வுயர்நதோங்கு மாட நாடி புக்கிருந்தார். (66)

டனைய சீலன் சிவநேச மதிமா னுடனு சனத்திருக்க, கனநே [illegible]
கப் பெருமாட்டி கசியு மனையா லனையினு, மனநெய் [illegible]
பாற் கறிவகைக ளாரவரம்பை மடனிரைய, முனைநக் நந்தி [illegible]
மனை யுட்ட லேய்ப்ப முகந்திட்டாள். (67)

(இ-ள்.) குளிர்ந்த மனமுடைய தாய்போலும் கிருபை தங்கிய சிந்தையு டைய மாக்கள் அழகியகையில் கொடுத்தலைமறவாத குடியேற்ற நல்லூரீசனே? மறத்தல் நினைத்தல்போலும் இறத்தல் பிறத்தலால் போதலும் வருதலுமாகி யவ்கின்ற பொன்னூசல் எக்காலத்தில் எம்மை விட்டு நீங்கும்.—எ-று. (61)

ள்.) இவர்கள் யாவரொன்றோராமல் துறவிகள் உனது அன்பர்கள் எளியவர்கள், என்பவரிடத்தும் கசிந்த மனமுடைய மேலோர் வசிக்கும் குடி யேற்ற நல்லூரீசனே? இல்லற நடாத்தல் அதிக சுமையென்றறியாதவராகி வீணில் உழைத்து உன் திருவடி நினைக்க நேரமில்லையென்று அலைந்து திரி யுங் கொடுமையுளேம் என்ன பயனையடைவேம்.—எ-று. (62)

(இ-ள்.) சோர்வென்பது உன்னுடைய திருவருள் பெறாதவர்க்கல்லா மல் உன் கிருபாநோக்கமடைந்த புண்ணியத்தாலுதித்தவர்க்கு சதாநந்தருங் குடியேற்ற நல்லூரீசனே? புண்ணியம் செய்தால் சுவர்க்காதி பதவியும் பாவஞ் செய்தால் நரகமும் உண்டென்பதை யறியாத சித்தமுடைய யாம் என்ன பயனையடைவேம்.—எ-று. (63)

(இ-ள்.) வேதாகமங்களிற்கூறும் தருமமார்க்கத்தில் நாயகனு நாயகியு மனமொத்து சோர்வில்லாமல் இல்லறவின்பத்தி லின்பமடையுங் குடியேற்ற நல்லூரீசனே? அளவிறந்த சிவபோகசாகரத்தில் மூழ்கி எந்த சூரியன் எந்த திசையிலுதித்தாலென்னவென நித்தியானந்தமுடைய மேலோர்க்கு ஏவின வைச்செய்யும் திருத்தொண்டு நாமடையு நாளுமுண்டாகுமோ.—எ-று (64)

(இ-ள்.) இவ்விதமாக இவர்கள்கண்ட சிவகாட்சியால் கண்களினின்றும் ஆனந்தமாரியாகிய முத்துதிரவம், உடலின்கண்ணுள்ள எலும்புகள் நெக்கு விடவும், நினைக்குமனம் வரம்புகடக்கவும், நாக்குளறவும், மயிர்குச்செரியவும், தன்வசமாறி பரவசமாகி நினைத்தல் மறைத்தல் என்பதுமில்லால் சிவசொரு பம் உள்ளும்புறமு நீங்காத சிவானந்த வடிவமானார்கள்.—எ-று. (65)

(இ-ள்.) இவ்விருவரு மனதை சிவபரமாக்கி பின்னர் நினைவுண்டாகி தவிருத்தியுண்டாக பஞ்சாட்சர தியானத்துடன் மீட்டுமந்த ஆலயத்தை வலம்வந்து பவளநிறம்போலுஞ் சடையுடைய வயிரவக்கடவுள்விடைபெற்று மேகங்கள் உறங்க உயர்ந்திருக்குமாளிகையை நோக்கிவந்து சேர்ந்திருந்தார் கள்.—எ-று. (66)

(இ-ள்) மனனசீலனென்னும் அரசனானவன் சிவநேசனென்கின்ற மானவானுடன் தனித்தனி யாசனத்திலிருக்க, மேகம்போலும் கரிய கூந்த லுடைய அரசமாதேவியார் தாயைப்போலுங் கசிந்த அன்பினால் அன்னம் நெய் பால் தயிர பலவகை கறிவகைகளை வாழையிலை நிரம்ப முன்னொரு காலத்தில் பசுவேசர் அல்லமாபிரபுதேவருக்குப் படைத்ததுபோலும் தனது திருக்கையால் அள்ளியிட்டாள்.—எ-று. (67)

இன்சொ லமுதஞ் செவியுண்ண வெழினு நல்ல வமுதுண்ண.
பொன்செய் செம்பி னன்னீர்வாய்ப் பூசி யடைக்காய் மணந்
தின்று, கொன்செய் நன்மங் கலவசனங் கூறி யொருவர்க்கொ
வர் சொலி, முன்செய் புனிதம் பிடருந்த மொழிவான் வழி
போந் திவணின்றான். (68)

சொன்முக கடுகி லதிகார நதோய்ந்த மிளகு விலைமாறுங், கன்
மங் குறித்த நாணெய்தற் காண வேண்டி விடைதாநின், நன்
மித் திரவார்த் தையினென்றான் ஞால மெல்லாம் வாழ்த்தெடுக்கும்,
சென்மத் தின்பா ரகமுதிதத சில னின்ன சொலநேர்ந்தான். (69)

நன்றேன் றீதேன் பகலிரவே னல்லூ ரீச னருளுதயங், குன்று
ஞானச் சுடர்விளக்க கொண்டோ புனோநா னெதிர்போந்து,
மன்று டெனது பிழைபொறுத்தி மறவா தொருநா ணட்டமன,
மென்றான் பத்திக் கொடுமுத்தி விலைகொள் வணிக னிதுசொல்
வான். (70)

சிவனே யெனநான் வாளாவித் தெருவிலேகு மெனைத் தடு
தாள், அவனே நீயென் றுணர்கின்றேன் அரும்ப ரோப காரியு
னுற், பவனே யென்ன விடைகொண்டான் பாங்க ருள்ள வேலு
லரே, தவனே வமிதத் தூர்வகமே தளம்போ னடக்கத் தலை
பட்ட. (71)

செல்லூர் மாடத் தணிமருகிற் சென்றங் கடர்ந்த சோலையுளே
வில்லூர் பாந்தண் மணியொளியால் விங்கு நெறியே கெளண்டிய
சந், தல்லூர் போதென் றுண்ணியினையா தாற்றின் றீரத் தகமணு
நல்லூ ரெல்லை விட்டுவழி நடக்குந் தொடக்க மினிமொழிவாம்.

திருச்சிற்றம்பலம்.

நல்லூர்படலம் முற்றிற்று.

ஆகதிரு விருத்தம். ௨௧௰.



(இ-ள்.) அரசமாதேவியின் இனியமொழிகளாகிய அமிர்தம் செவிக ளருந்தவும் அழகிய நாவானது இட்டவமுதத்தை யுண்ணவும் உண்டு பொற் செம்பினிறைபயித் தந்தநீரால் வாய் கை கால் சுத்தமாக்கி மணமுள்ள வெள் ளிலையடைக்காய் அருந்தி பொருமைதங்கிய வசனங்களை யொருவரோடொ ருவர் வார்த்தைசொல்லி தான் முன்னேசெய்த புண்ணியமானது பிடர்பிடித் துத்தள்ள வழிப்போக்கனாக வந்த வணிகன் பின்வருவன சொல்வான்.-எ-று.

(இ-ள்.) திரிகடுகமென்று சொல்வதில் அதிக காரமுடைய மிளகை விலைகூறுந் தொழிற்காக போகவேண்டி நிச்சயித்தநாளில் கடல்சார்ந்த பட்ட ணம் போவதற்காக உனது நல்லவசனத்தால் உத்தாரந்தரவேண்டுமென்றான்; அம்மொழியையறிந்து உலகமெல்லாம் தன்னை ஆசிகூறவெடுத்த பிறப்புடைய மனனசீலன் இது சொல்லலுயினான்.—எ-று. (69)

(இ-ள்.) நல்லவசனம் தீயவசனந்தானேன் இரவு பகலென்பதுதானேன் இந்நல்லூர் பரமேசுரன் திருவருள் குறையாத அறிவின் பிரகாசங் கொண்ட வனே? யான் உன்னை எதிரேகண்டு தங்கிபோம்படி இரந்து வேண்டிக் கொண்ட பிழையை பொறுக்கவேண்டும்: உன்னை ஒருநாள் நேசித்த நெஞ்ச மறவாதென்றான்; பத்தி யென்கின்ற பொருள்கொடுத்து முத்தி யென்கின்ற பொருளை விலைகொள்ளும் வணிகனிது சொல்வான்.—எ-று. (70)

(இ-ள்.) சிவஞானத்துடன் வீதியில் போகிற என்னையறிந்து இவ் வுபசாரம் செய்ததால் அச்சிவபிரானென்றே உன்னை நினைக்கின்றேன் பரோ பகாரம் செய்யவேபிறந்த புனிதனே என விடைபெற்று மீண்டான்; அதன் பின், வணிகனும் அவன்பக்கலில் இருந்த பரிசனங்களும் பொதியெருதுக ளும் சேனைகளைப்போல் நடக்கலாயின.—எ-று (71)

(இ-ள்.) மேகங்கள் படியும் மாளிகையுடைய அழகிய வீதியைக்கடந்து அங்கே நெருங்கிய தோப்புகளில் பிரகாசம்பொருந்திய நாகரத்தினங்களால் ஒளிவீசும் வழியாக கௌண்டிஞ்சநதிக் கரையைச்சேர்ந்து இருளுடைய நேர மென்று மனதில் சிந்தியாதவனாக நல்லூர் எல்லையைவிட்டுப் போகுஞ்சரிதம் இனிசொல்வாம்.—எ-று (72)

திருச்சிற்றம்பலம்.

# வழித்துணைப்படலம்.



அலமரு காலிற் புந்தி யலைதரா வணங்கி வாத,
நிலைதரு தீப மென்ன நிட்டையிற் பெட்ட வன்பின்
றலைநலாய் வணிகற் கீசன் றனித்துணை யாகப் போந்த
நலமுறை தருவ லென்று நவிலுவன் சவிகொள் வேலோன். (1)

நதிக்கரை யிவர்ந்து நோக்கி நாகமா ளாச ஞைசை
மதிக்குறை யிலங்க வேணி வள்ளலை யுன்னி யேகுந
ததித்தரை யெங்கும் புல்லான் மரகத கவசஞ் சார்ந்து
நிதிப்புரை யிருந்த கானு நிரைப்பதந் துவைத்துச் சென்ற. (2)

இளங்கொடி படர்ந்து பூக்க ளேந்த நொந் தசைந்து தாவ
வளங்கொடு யடர்ந்து நீண்ட வளர்சினைப் பல்ல வங்கள்
துளங்குகண் கவர்ந்து போர்த்து சோதிபா தபங்கண் மின்னல்
உளங்கலங் கிருளி லின்ன வுண்டெனக் கண்டனே தோன். (3)

அத்தியால் கடம்பு புன்னை யரசுசண் பகஞ்செ ருந்தி
யித்திமஞ் சாடி வன்னி யிலந்தையீந் திலவ நாவல்
பச்சிலை முருக்கு தேக்கு பாதிரி மருத மாவேல்
நொச்சிவெட் பாலை பென்ன துவன்றுபன் மாங்க ளெல்லாம். (4)

மந்திபு மறியா தோங்கு மரம்பயி லிடையின் மூன்று
சந்தியும் பானு காணு தன்ரை யிருட் படல மூடி
யுந்தியொன் றிடையிற் பாய வுததியென் குறையு மாறி
தந்திவெம் புலிம டங்க லாதிய தருக்கு கானம். (5)

தண்ணிய மணங்கால் கொண்டு வீசிய தருக்கண் முற்றி
யுண்ணுழைந் தகலத் தன்ன மேனுழை ளிடந்த ராவங்
கண்ணிருந் தென்னுஞ் சோதி காணினல் லாது பெற்றம்
புண்ணிய வடிவான் மெல்லப் போங்கதி செல்வி னின்ற. (6)

(இ-ள்.) சுழல்கின்ற காற்றைப்போலும் கரணங்கள் விடயவாசனையிலே சிக்கியலையவிடாமல் காற்றிலலையாத தீபம்போலும் மனவாசனைகளையடக்கி குருமுகமாயறிந்த குறியினிடமே சிந்தைநிலைக்க நிட்டைகூடவிரும்பிய அசிபத நிலையினுடைய முனிவனே? சிவநேசனென்னும் வணிகனுக்கு சிவபெருமான் மார்க்கசகாயராய் வந்த திருவிளையாடலை சொல்லுவோம் கேட்பீராக வென்று கதிர்வேற்காரத்தண்ணல் சொல்வார் —எ-று. (1)

(இ-ள்) அவ்வாற்றின் கரையில்வந்து தெய்வலோகமாளும் தேவேந்திரன் திசையாகிய கீழ்த்திசையை பார்த்து பிறைமதிசூடிய சடையுடைய சிவபெருமான் திருவடியைச் சிந்தித்துப் போகுமார்க்கத்தில் பொதி எருதுகள் தரையெங்கும் பசும்புல்லால் பசியமரகத கவசம்போர்த்ததுபோல் தழைவுற்ற நிலத்தை காலால் மிதித்துச்சென்றன.—எ-று. (2)

(இ-ள்.) இளமைதங்கிய பூங்கொடிகள் படர்ந்து பூவாகிய சுமையை தாங்கப்பொறாமல் அங்குமிங்குமசைந்து எட்டித்தாவிப்பற்ற செழுமையாயும் நெருக்கமாயு நீண்டகிளைகளில் தளிர்கள்விளங்க கண்டவர் கண்ணைக்கவரும்படி நெருங்கிய சோதிவிருக்ஷமுள்ள சோலைகள் பிரகாசித்தலை இருளால் மனக்கலக்கமுடைய வணிகன் இராக்காலத்திலும் இப்படிப்பட்ட வெளிச்சமும் உள்ளதேவென கண்ணால் கண்டுந்தேராதவனானான்.—எ-று. (3)

(இ-ள்.) அத்தி ஆல் கடம்பு புன்னை அரசு சண்பகம் செருந்தி இச்சி மஞ்சாடி வன்னி இலந்தை ஈந்து இலவம் நாவல் பச்சிலை முருக்கு தேக்கு பாதிரி மருதம் மா வேல் நொச்சி வெட்பாலை என்று சொல்லு மரங்களெல்லாம்.—எ-று. (4)

(இ-ள்.)அடர்ந்த கானகமானது குரங்கினங்களுமறியபபடாது செறிந்து காலை மாத்தியமாலையென்னும் திரிசந்தியும் சூரியனொளியையறிய விடாந்தராது பூமியில் இருள்மூடி அதன் மத்திய பாகத்தில் பாலநதியென்கின்ற ஆறு பாய்ந்தோடலால் சலக்குறைவின்றி யானைகள் கொடிய புலிகள் சிங்கமாதிய மிருகங்களும் வசிக்குந் தன்மையுடையது.—எ-று. (5)

(இ-ள்.) குளிர்ந்த மணமானது காற்றின் அசைவால் எங்கும் பரந்த மரமடர்ந்து உள்ளே நுழைந்துபோக கொஞ்சமேனுமிடங் கொடுக்காது அதனால் வெளிச்சங்கண்டாலன்றி கண்கள் மாத்திரமிருந்தென்ன பயனைத்தரும் அவ்வெருதுகள் புனித சரீரமுடையதாதலால் வழி செல்லுந் தன்மையிலேயேயிருந்தன.—எ-று. (6)

கள்ளிழி தரவி ருலைக் காம்பலைத் துடைக்குங் காண
நள்ளிரு ணடுநாட் செல்லற் பொதியெருக் தவைக்கு நாளுந்
தெள்ளிய வென்ன வாய்ந்த தெளிரு னவ்வந்த காரம்
உள்ளில னாகியாங்க ணூறு நெறி கடக்கு மெல்லை. (7)

சினையபற் றருக்க ளண்டந தீண்டநீண் டறப்ப சநது
நனையபூ வலர்நது சேந்து நாரிகோங் கிரண்டு காத
முனையமுண் ணெருங்கி யோங்கி முட்டிமட் டின்றி துன்றி
கனையவண் டணநத மொய்த்த காடது கணிக்கற் பாற்றோ. (8)

இச்செல வேவலா ளொருத்தி ஞென் றென்று நாடி
முற்செலச் சென்றான் பின்னை சின்னெறி முதன்மை யாளன்
பச்சிளங் காடு துன்று பதவையே தோன்றக் கண்டு
அச்சுறுத் தியதா னெஞ்சி னயர்வயாத் தங்க ணின்றான். (9)

அஞ்சரக் கால வற்ற மாயதான மழைக்கால கொண்டு
விஞ்சிய கங்குல் வந்து விட்டதா லிப்பர் கோமான்
அஞ்சின னென் செய்கிற்பா னெனப்பருந் துயரத் தாழ்ந்து
தஞ்சமென் றரன்றன் கோயி லொன்றுகண் டதனைச் சாற்றும். (10)

அமரரைத் துரத்து மால காலமுன் னயின்று காத்து
தமர வோத் தாதியாய தாரக முடியா னின்றோய்
குமரனைப் பெற்ற தாதா குறைபுறோற் கஞ்ச லென்ன
நமரநீ யல்லா லாரே நாதவோ கடைக்கண் பாரும். (11)

அளியருக் கெளிபா யோல மஞ்செழுத் துருவே யோலம்
வளிவெளி தீநீர் வைய மதிகதி ராணாய் நின்பொற்
றளியலால் வேறு காணேன் சமயம்வந் துதவி னெந்தாய்
ஒளியவென் றனத்த ணின்ற வூகியம பாகி தநதேன். (12)

காவென விரந்து நின்ற காலையே யனந்த ஞானத்
தேவென வுலகி லியார்க்குந் தெற்றென விளக்கு வான்போல்
மாவென லொன்றின் மிக்காய் வாள்வல மின்ன முன்னம்
சேவக னாகி யீசன் திருமகன் காண வந்தான். (13)

(இ-ள்.) தேன் சிந்தி வழிய அதன் கூட்டை மூங்கில் காடுகள் அசைந்து பிளக்கும் காடானது நடுசாமத்திருளில் அச்சமின்றி போதல் பொதியெருது களுக்கு வழக்கமெனத் தேறிய வணிகன் அவ்வந்த காரத்தையொரு பெரிதாக நினைக்காதவனாகி நடக்கும் சமயத்தில். – எ-று. (7)

(இ-ள்.) அங்கே கிளைகளென்கின்ற கைகளால் ஆகாயத்தைத் தீண்ட மேலோங்கி வளர்ந்து பசிய நிறங்கொண்டு தேனுகுத்தும் பூவலர்ந்து செந்நிறமாகி இரண்டு காவததூரமு மணம் வீசி கூர்மையாகிய முட்களால் நெருங்கி வளர்ந்து ஒன்றையொன்று பற்றி அளவில்லாமல் மூடி சத்திக்கும் வண்டுகள் பல மொய்த்துள்ளது அதனால் கற்பனையால் புலவர்கள் அளவிட்டு சொல்ல முடியுமோ —எ-று. (8)

(இ-ள்) அவைகளுக்கு முதலாளியாகிய வணிகன் இவ்வண்ணமாகப் போவதில் பரிசனங்கள் ஒவ்வொரு எருதின் பின்னே ஒவ்வொருவர் செல்ல சிலதூரம் போக, அங்கே பசேலென்கின்ற நிறமுள்ள காடு காணப்படு மார்க்கந் தெரியக்கண்டு மனதில் கொஞ்சம் பயந்தோன்ற உடல் நடுங்கி அவ்விடத்தில் நின்றான் —எ-று. (9)

(இ-ள்.) இவ்வைசியன் மழைக்காலமானதாலும் அம்மழை துளிக்கும் இருள் மூடிக்கொண்டதாலும், அதிக பயமடைந்தான் இன்னமென்ன செய்வான் அளவில்லாத மனவருத்தமடைந்திருக்கும்போது எதிரில் ஒரு சிவாலயத்தைக்கண்டு இதுவே நமக்கடைக்கலமென்று கண்டு இப்படி சொல்வான். —எ-று. (10)

(இ-ள்.) தேவர்களை பாதுகாக்கவேண்டி ஆலகால விஷத்தையுண்டாதரித்து சத்திக்கும் வேதத்தின் முதலாகிய பிரணவ முடிவிலிருக்கின்றவனே? குமாரக்கடவுளைப் பெற்ற தந்தையே? மனக்கலக்க முடையவர்க்கு அஞ்சவேண்டாமென்று சொல்லி யாதரிக்க சுற்றம் நீயல்லாமல் யாவருளர் ஓ நாதனே? கடைக்கண்ணால் என்னை நோக்கியபாரும் – எ-று. (11)

(இ-ள்) ஏழைகளுக்கு எளிதாக வந்துதவும் அப்பனே உனக்கபயம் பஞ்சாட்சரத்தின் வடிவுடையவனே உனக்கபயம் காற்று நீர் ஆகாயம் அக்கினி மண் சூரிய சந்திரர் இயமானன் முதலிய அட்டமூர்த்தமானவனே உன்னுடைய திருக்கோயிலன்றி வேறே ஒரு கதியும் காண்கிலேன் இந்த சமயம் வந்து என்னை பாதுகாத்தால் என்னுடைய வெள்ளிய தனத்துள் உண்டாகும் இலாபத்தில் பாதி பொருள் உன்னுடைய திருப்பணிக்கே கொடுத்தேன்.— எ-று (12)

(இ-ள்.) வணிகன் என்னை காக்கவேண்டுமென வேண்டி நின்ற அந்த சமயத்திலேயே இயற்கையுணர்வுடைய வீச்சுரனென்பது உலகிலுள்ள எவருக்கும் தெளிவாக விளங்கக் கூறுபவனைபபோல் பரமசிவன் ஒரு குதிரையேலேறினவனாய் வலக்கரத்தில் வாளாயுதம் பிரகாசிக்க அவ்வணிகன் எதிரில் ஒரு வல்லாளன் போலாகி வந்தான்.—எ-று. (13)

வேறு.

செந்தமிழ்நி லத்தரிம ருத்தனம ருடியொரு தேசிமிசை தேசி
யமித, முந்தவரு மாரியனெ னத்தனிச யிந்தவமி வர்ந்துவரு முக்க
ணிறைவன், தந்தலைய ணிந்தமணி பிஞ்சகமி லங்கிடச டைச்
சிரம றைத்து நுதலிற், சிந்துரமி லங்கவெரி நீக்கணைம றைத்து
முகஞ் சீதமதி போன் மிளிர்தர. (14)

துங்கமொளி ருங்கவச மங்கமுள வெண்பொடிதி ரிந்துமிகு
சோதி நிலவ, அங்கத மணிசசுடிகை மாமணியெ லாம்பகலிதா
மெனு மலங்கள் மிளிர, செங்கைபணி கங்கணமி லங்கவொளி
வாள்சுரிகை சேயகதை சூல மிலக, வெங்கணுடை பாம்புதர
பந்தனம தாகவிடை வீக்கிவரு வீர வனை. (15)

சிரத்துமுது குஞ்சிறு வயிற்றொடு கழுத்தடி திருச்சுழித்
துணைத் துணையதாய், உரத்திரு சுழித்திரு முகத்துமுக வட்டமெ
னொருச் சுழிமி டற்றினிடையே, தரித்தநவ தேய்வமணி
யென்றசுழி நல்லன சனித்தவனி தாளிசெ லுகாற், குரத்துதவ
ளக்குருவி ருத்தலது பஞ்சமகு ணததசுவ மென்ன விலக. (16)

வெண்ணிற வகன்றநுத லொத்தவெயி றுங்கிரவி லோசனம்ச
ரோசவிதழ்நா, திண்ணியவ ளைச்சிரமு ரத்தொருக பூத்துரக
சீர்த்தபட மென்ன விலக, அண்ணலுழை மாந்தளிரி னிலவவளர்
வான்மயிர வைத்தொகைபு ரத்தொளி செய, உண்ணிறந ரம்பு
கள்க ரந்துருதி ரண்டுதசை யுற்றசிறு தாள்கண் மிளிர. (17)

தேம்பதும ஞற்புவிசி ருட்டியிலெ ழுந்ததல சீரியக டற்கடையு
நாள், வாம்புரவி பொன்னவுரு வந்தபரி யேயியெனு மாவினிலெ
ழுந்து வணிக, நாம்பொதித ரும்புறவ நன்குதிரி தந்துவரு வோர்
துணைசெ யுந்திறலி னேம், ஓம்புவமு ளைச்செனெறி யேகெனம
னத்திடமு றுத்தெதிரு வந்த வொருவன். (18)

போமினிது வேபதவை நெஞ்சினொரு சஞ்சலமி ருந்தது
பொருந்தலையி னம்,காமினை வெற்கொருவ ரேவவரு வோமலம்
கருத்துறுதி கோடி யெனவே, ஆமுரைசொ லுஞ்சொன்முடி
வாமுனமு னஞ்செலெரு தந்முடி வோடி புலவி, பாமுடியி ருந்த
பொருளாமெனவி ருந்து[illegible]பொய்பரிந டத்துநனியே. (19)

(இ-ள்.) செந்தமிழ் நிலமாகிய மதுரை மாநகரத்தையாளும் அரிமருத்தன பாண்டியனை நாடி ஒரு குதிரைமேலேறி பல குதிரை முன்னே நடக்க வந்த ஆரிய தேசத்தான்போலும் இன்று ஒரு குதிரைமேலாரோகணித்து வருகின்ற மூன்று கண்களுடைய சிவபிரான் சிரசில் சடாமகுடத்தை மறைத்து மயிற்பீலியாகிய அழகிய தலைக்கோலமணிந்து, எரிகின்ற அக்கினிக்கண்ணை மறைத்து நெற்றியில் திலகப்பொட்டு விளங்க முகமானது குளிர்ந்த சந்திரன் போல் பிரகாசிக்க.—எ-று. (14)

(இ-ள்.) தமது திருமேனியில் பரிசுத்தமாக விளங்கும் திருநீறாகிய கவசமாகிய ஒரு காந்தியே கவசமாக விளங்க பாம்பினது சிரோரத்தினமே பகலென்னும் ஆபரணங்கள் பிரகாசிக்க, சிவந்த கையில் புயங்கமே கங்கணமாக வொளிசெய, அக்கரத்தில் மின்னுகின்ற வாள் உடைவாள் செவ்விய கதாயுதம் திரிசூலம் இவைகள் பிரகாசிக்க, வெவ்விய கண்களுடைய பாம்பே இடையில் கட்டிய கச்சாக விளங்க வருகின்ற வீரனாகிய சிவபிரான்.-எ-று.( )

(இ-ள்.) இச்சிவபெருமான் ஏறிவருங் குதிரையினது இலக்கணமானது தலையில் இரண்டு சுழியும் முதுகில் இரண்டு சுழியம், கழுத்தடியில் இரண்டு சுழியும், மார்பில் இரண்டு சுழியும் அழகிய முகத்தில் முகவட்டமென்கிற ஒரு சுழியும் கழுத்தில் அதிசயிக்கத்தக்க தெய்வமணி யென்கின்ற சுழியும் இபபடி நல்ல விலக்கணம் வாய்ந்து பூமியில் தாவிப்பாய்ந்து போகின்ற நான்கு காலும் வெண்மை நிறமாக பஞ்சலட்சண அசுவமென்று விளங்க.— எ-று.(16)

(இ-ள்.) நெற்றியானது வெண்மையும் விசாலமுள்ளதும் பற்களெல்லாம் ஒன்றிலொன்று மாறுபடாமல் ஒத்துளதாயும் உக்கிரமாகிய கண்களுடையதாயும் தாமரை மலரின் இதழ்போன்ற நாவும், வலிதாய் வளைந்துள்ள தலையானது மார்போடு கழுத்து பாம்பின் படம்போலும் வளைந்து அழகு செய்ய அதன் புறமயிரானது மாந்தளிர்போலும் ஒளி வீச உள்ளே நரம்பு ஒடுங்கி வெளியே தோன்றாமல் திரட்சியாகி தசையதிகமில்லாத சிறிய கால்கள் விளங்க.— எ-று. (17)

(இ-ள்.) மதுரமுள்ள பதுமாசனனாகிய பிரமசிருட்டியில் உண்டானதல்ல பின்னே யாதென்னில் சிறந்த பாற்கடலை கடைந்த காலத்தில் தோன்றி உச்சச்சிரவமென்னும் தாவி செல்லும் அச்சுவமே இதுவென்று சொல்லும் இலக்கணமுடைய குதிரைமேலேறி வந்து சொல்வார்; எ வணிகர் கோமானே? நாம் செழித்த இக்காட்டினிடத்தே திரிந்து இதில் வருபவர்களுக்கு நல்ல துணையாக செல்லும் வல்லபமுடையேம் உன்னை இப்போது காப்போம் நீ போகின்ற மார்க்கமே போவாயென அவன் மனதைத் திடப்படுத்தி எதிரே நின்ற ஒப்பற்ற சிவபிரான்.—எ-று. (18)

(இ-ள்.) நீ போவாயாக இதுவே நல்ல வழி உன்னுடைய மனதில் யாதொரு கவலையுங்கொள்ளவேண்டாம் நாமோ இதுவரைக்கும் நீ போய் காப்பாயென்று ஒருவர் ஏவ வந்தவனல்லேம். இதனை உன் மனதிடமாக வைத்துக்கொள் என்று சொல்லி அந்த சொல் முடிவாகு முன்னமே முன்னே போகின்ற எருதிருக்கின்ற எல்லையளவும் ஒடியுலாவி இலக்கணவமைதியுள்ள பாசுரத்தினது பொருள்போலும் புறம்பே பாய்ந்து செல்லுங் குதிரையை மிகுதியு நடத்துவார்.— எ-று. (19)

வாள்வலம்பி ருந்தவொளி வச்சிரகவ சச்சவிகண் மணிபணிசி ரத்து
சுடர்கள், கேழ்கிளர்த லைக்கணிழல் கண்கண்மதி யாயிரங்கெ ழுங்
கிணரங் கேடி லுருவம், வாளுததி கோடிதின மாமணியெ ழுந்
தவென வந்தவுரு கந்தருவ மாம், நீள்கரநிமிர்ந்துபக லானதட விக்
கணாரு ணித்தியனி ருந்த படியே. (20)

செண்டுவெளி யாயுலவு காலைதர ளத்தருகெ ரிக்குமுனமேகவ
ரிணங், கொண்டவடி வாகுமிட சாரியினு லாவதுவர் கோலவுரு
வாகும் வலமாய், மண்டிவரு கான்மரக தப்படிவ மாமகரிய வச்
சியுரு வாகு மசுவம், உண்டெனவு மின்றெனவும விள்ளமுடி யா
தடவி யோடிவிளை யாடுமிரவே. (21)

வலம்புரிச லஞ்சலமொ லிப்பொரக ளைக்குமுன மாறிசெலு
நேரிவிடப, நலமெபொாரிழற் றுமகராலயம லைக்கணெழு நன்னரவ
மென்ன முரலும், குலம்படுக தமபமறை நாள்குமுற லெனவறிது
குமுறுநட மாடு துரகந், திடமபடமெருக்கொடுசெ லுமபரிச
னர்க்குமுள திக்கொடுதி கந்த மணவ. (22)

வழித்துணையெ னப்பிரிது வந்தசிவ சேவகவ லன்றனது வாய்ச்
சொலமிர்தஞ், செழித்தவச னகதுமவெரு வநதமினி சொனகலை
செயஞ்செயஞ்செ லுஞ்செலு மென, மொழித்தருமிடத்துமுன
மேகியினி ருநதுவரு மூலமுணர் காலைவணிகன், விழித்தனனடத
தினன்விடங்கனலெ ரன்றனது விந்தையறியாது வழியே. (23)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தனையயா னிந்த கானஞ் சரிப்பவ னெனினும் பாந்தா
இனமலா னென்ன வுன்னி யிவ்வழித் துணைசெய் கிற்பேன்
மனமண்ணங் குறுத லென்னீ யேகென சென்ற மார்க்கங்
கனவிரு ளுள்ள நேரஞ் சென்றனன் கடவுட் கூடி. (24)

இரவகன் றந்த கார மிரிந்தகீழ் கதிரொல் சித்த
துரகத மிருந்த வீரன் றேன்றில னேரே மென்னும்
புரவித்தே ரேறு வீரன் போந்தனன் கமல மிந்த
திருமகன் முகம்போ னீரந் தேக்கிட மெங்கும் பூத்த. (25)

(இ-ள்.) வலது கரத்திலிருந்த வாளின் ஒளியும் வச்சிர கவசத்தின் ஒளியும், அழகிய பாம்புகளின் சிரோரத்தினத்தின் ஒளியும் நிறம் பொருந்திய சென்னியின் ஒளியும் சூரிய சந்திரரென்னும் இரண்டு கண்களின் ஒளியும், பிரகாசிக்கின்ற கடனீரில் ஒரே காலத்தில் பல சூரியர் தோன்றியது போன்ற திருமேனியின் ஒளியும், குதிரையின் பிரகாசம் ஒன்றுடனொன்று கலந்து அக்காடு முழுவதும் அருளாளனாகிய சிவபிரானிருந்தபொழுது பகலாகவே விளங்கியது.எ-று. 20

(இ-ள்.) இச்சிவபிரான் ஏறிவரும் குதிரையானது வையாளி வீதியாய் உலாவி வரும்போது முத்துபோன்ற நிறமாகத் தோன்றுப, முன்னே செல்லும்போது செந்நிறமாகத்தோன்றும், இடசாரியாக உலாவும்போது பவள நிறமாகத்தோன்றும், வலசாரியாக உலாவும்போது பச்சைநிறமாகிய காயாம்பு நிறமாகத்தோன்றும இது இருக்கிறதெனவும் இல்லை எனவும் சொல்லவுமிடந்தராமல் ஓடியுலாவிவரும்.—எ-று. 21

(இ-ள்.) வலம்புரி சங்கத்தொனிபோல் கனைக்கும் முன்னே மாறி பின்னே செல்லும்போது, இடபத்தொனிபோல் சத்திக்கும், அதன் பின்னே மழை காலத்து மேகம்போல் சத்திக்கும், இப்படி சத்தித்து எருதுகளின் முன்னே போகும் பரிசனங்கள் உள்ள எல்லையும் அதற்கப்புறமும் ஓடியுலாவி நாட்டு திக்கும் கேட்கும்படி சத்திக்கும்.—எ-று. 22

(இ-ள்.) மார்க்கசகாயமாய் வந்த சிவபிரானாகிய வீரனுடைய வாய்ச் சொல்லாகிய அமிர்தம்போலும் இனிய வசனத்தினாலும், இனி பயமென்பது நினைக்கவேண்டாம் வெற்றியுண்டாமென்பதனாலும் முன்னே சென்று பின்னே கணநேரத்திற்குள்ளே வருங்காரணத்தினாலும் வணிகன் ஒன்றுந்தோன்றாதவனாகியும் சிவபிரான் திருவிளையாடலை யறியாதவனாகியும் பொதி யெருதுகளை அதிசயங்கொண்டு நடத்தினான்.—எ-று. 23

(இ-ள்.) வழித்துணையாக வந்தவர் சொல்வார் ஏ வணிகனே! யானிந்த காட்டினிடத்தில் சஞ்சரிக்கின்றவன் வழிப்போக்கருக்கு நல்ல நேசனாக இருந்து இந்த மார்க்கத்திலே துணை வருவேன் ஆதலால், உன் மனவருத்த நீங்கிப்போவென வந்த வழியில் மிகுந்த இருளுள்ளவிடைக்கும் சிவபிரான் அவனுடன் பிரியாது வந்தார் —எ-று. 24

(இ-ள்) அன்றிராப்பொழுது போய் இருள் நீங்க கீழ்த்திசை வெளுப்ப சூரிய கிரண வாரம்பந் தோன்றின குதிரைமேல் வந்த சிவ சேவகன் அந்தரத்தானமானான், எழு புரவி பூட்டிய இரதத்தில் சூரியன் உதயமானான் அப்பொழுது தடாகங்களிலும் சலசமூகமுள்ள வெங்கும் இந்த செல்வனுடைய முகமலர்ச்சிபோலு தாமரைமலர் மலர்ந்தன.—எ-று. 25

வழித்துணை வந்தா னந்தி வண்ணனென் றிறும்பூ தெய்தி
செழிச்சல நிதியைச் சார்ந்த தேயமக் காய மாறி
கிழிப்பசு வேற்றி யேற்றுக் கேதனப் பெருமாற் கன்று
மொழித்தனந் தருவ லென்ன விரிஞ்சையே முந்தி வந்தான்.(26)

தோன்றிய நிதியொ டக்குஞ் சுதந்திர னுலகுக் கெல்லாஞ்
சான்றெனு மமலன் மார்க்க சகாயனுந் தகைமைச் சொற்றும்
பூன்றமா மதியோய் சந்தி புரப்பணி கேண்மி னென்று
தோன்றிய வருளிற் சொல்வான் சூர்முத றடிந்த செவ்வேள்(27)

திருச்சிற்றம்பலம்.

வழித்துணைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் கருஎ.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவிரிஞ்சைப்படலம்.

தரவிணைக்கொச்சகக்கலிப்பா.

வாரியெனத் திரண்டுமுடை வந்தவிளங் கூர்ங்கோட்டு
தூர்யமு மவைபரித்த சொன்னமுடன் திருவிரிஞ்சை
சீரியமா நகரணுக சிவக்குறிக்கண் டேத்திநறும்
வேரியமா மலர்தூஉய்வி வேகனிது செப்வானல் 1

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எம்மைகாப் பவர்க்குக் காப்பா யிஞ்சிசெய் கிற்ப வென்று
கொம்மையா யெழிலா நல்ல மணிகளாற் குயிற்றி வானந்
தம்மையே யெட்டி முட்டத் தமனியச் சேறு கூட்டி
யிம்மையே கைலைக் கேற வேணிபோற் செய்த மைத்தான். 2

(இ-ள்.) இவ்வற்புத காட்சியால் வணிகனானவன் நமக்கு மார்க்கசகாய மாக வந்தவன் சிவபெருமானே யென்று மனமகிழ்ந்து வளமுடைய கடலைச் சார்ந்த நெய்தலாகிய நகரத்தில் தான் கொண்டுவந்த மிளகைவிற்று அதினால் அதிக இலாபமாக கிடைத்த பொன்முடிகளை முன் மிளகு பொதிபோல பொருட் பொதியேற்றி மீண்டுவரும்போது இடபக்கொடியுடைய ஈசனுக்கு போகும் அந்நாள் நான்சொன்ன பொருளைத் தருவேனென்று திருவிரிஞ்சை மாநகரத்திற்கே முன்னே வந்தான்.—எ-று. 26

(இ-ள்) உண்டாக்கிய விடத்திலேயே ஒடுக்கி இலயமாக்க வல்லசுதந் திரனாகிய சருவ உலகசாட்சி வழித்துணையாகவந்த வரலாறுரைத்தனம் பூரண வறிவுடைய வசிட்டனே வணிகன் திருவிரிஞ்சையில் செய்த திருப்பணி கேட்பாயென்ன தனது இயற்கையாயமைந்த கிருபையால் சூரனாகிய மாவின் முதலைப்பிளந்த முருகக்கடவுள் சொல்வார் —எ-று

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவிரிஞ்சைப்படலம்.

———()———

(இ-ள்) கடல்போலத் திரண்டுவந்த இளமையும் கூரிய கொம்பையு முடைய பொதியெருதுகளும் அவ்வெருதுகள் சுமந்துவந்த தனமும் திரு விரிஞ்சை யென்கின்ற சிறந்த நகரத்தைச்சேர அறிஞனாகிய வணிகன் சிவ லிங்க தெரிசனங் காணப்பெற்று துதித்து நல்ல மணமுடைய மலர்கொண் டருச்சனை செய்வித்து இத்திருத்தொண்டு செய்வானன்.—எ-று.

(இ-ள்.) என்னைக் காவலாகக்காத்து வழித்துணை வந்தவர்க்குக்காவலாக முன்னமதில் செய்துவிடுவேனென்று வட்டமாய் அழகாய் நல்ல இரத்தினங் களாலிழைத்து ஆகாயமளாவி தாவும்படி பொற்சேர் பூற்றி இப்பிறப்பிலேயே கைலாய பதவிக்கேறிச் செல்லவேண்டிய ஏணிபோல செய்வித்தான்.—எ-று.

தவமுடைச் செல்வ னிந்த தலத்திருப் பணிக ளாற்றி
சிவபரஞ் சுடரைக் கண்ட காட்சியே சிந்தை யுந்தி
நவநவ மாகத் தோற்ற நாடலான் மனைவிச் சுற்ற
மிவணொழ வெனவவள் போக்கி யழைத்துவந் திருந்தான் மாதோ.

இவ்வணஞ் சின்னாட் காமக் கிளத்தியுந் தானு மாகச்
செவ்வணப் பரமற் போற்றி செல்வனொன் றளித்தி யென்ன
மெய்வணன் சோமவார விரத நீ பாற்று கென்ன
வவ்வணை மாற்று நாளி லவன்றனை கருப்ப முற்றான். 4

ஐயிரு திங்க ளொன்றன் றூச்செலப் புளிக் குவந்தாள்
மெய்யரும் பொன்னுப் கொங்கை மென்முகங் கருத்துத் துண்
செய்யதா யிமுகம் வெளுத்துத் தினகர னுதய மிந்த [டஞ்
வையமுற் றனனென் கொலென்ன மைந்தனொன் றீன்றாண் மனனே

குழவிவந் துற்ற காலை குதூகலங் கொண்ட செல்வன்
மழவிடை யுடையார் கோவில் வண்ணவா வரணை முற்றும்
விழவினை யாற்றிப் போற்றி வீதியை யணிந்து செம்பொன்
முழவறைந் தவா விறப்ப முப்புரி நூலோர்க் கீய்ந்தான். 6

சுண்ணமே தெற்றி முற்றுஞ் சுகந்த முண் டாகத் தூவி
எண்ணெய் சாந் தொட்டுவர்க்காய் வெள்ளிலை யேலஞ் சேர
தண்ணிய நேயர்க் கிந்து தனையனுக் குரிய வாற்றி
எண்ணிய வெண்ணி யாங்கே யெய்தின மெனச்செம் மாந்தாள். 7

நந்தமக் கிந்த நாத னல்வழித் துணையாய் வந்தான்
தந்தனன் மகவு நெஞ்சச் சாந்தமு மன்புங் கொண்டான்
பந்தமா முடலெ னுவிப் பொருளெனும் பான்மை யத்தால்
அந்தமொன் றில்லா வின்ப மடைந்தன னியானே யென்றாள். 8

ஊதியம் பாதி யென்றன் றுரைத்தது சாத மற்றப்
பாதியு முதலு மாமோ தந்தவன் பாத னாகும்
சோதியே யென்று லெந்த சுதந்தரங் கொண்டிப் பொன்னின்
மீதினை யென்ன தென்றிம் மேதினி வாழ்வி னிற்பேன். 9

(இ-ள்) சிவபுண்ணியமுடைய இவ்வணிகன் மதிலாதிய திருப்பணிகள் செய்து முன்னே சிவதரிசனங்கண்டநினைவே மனதிற்புகுந்து அகக்களிப்பை வெளியேதள்ள அதனல் புதிதுபுதிதாக பலவித சிவகாட்சியின் தோற்றங் காணப்படலால் அதைவிட்டுநீங்க மனமில்லாதவனுகி தன்னுடைய நாயகி முதலிய சுற்றத்தினர் இவ்விடமே வந்துவிடவேண்டுமென்று ஆள்விட்டு வா வழைத்து விரிஞ்சையம்பதியிலேயே வாழ்ந்திருந்தான்.—எ-று. 3

(இ-ள்) இப்படி சிலகாலம் தானுந் தன் மனைவியுமாக அந்திவண்ணனு கிய பரமனை வணங்கி சிவபெருமானே? அடியேங்களுக்கு ஒரு புத்திரன் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டுவருநாளில் ஒருநாள் சிவ பிரான் கனவிலெழுந்தருளி நீங்கள் சோமவாரவிரதஞ் செய்வீர்களாகவென அதையுணர்ந்த அவ்விருவரும் அவ்விரதஞ் செய்துவரும்போது அப்புண் ணியப்பேற்றால் அவன் மனைவி கருப்பமடைந்தாள்.—எ-று. 4

(இ-ள்.) பத்து மாதமும் ஒவ்வொன்றாகச் செல்லச்செல்ல புளிக்கு இச் சித்தாள் சரீரமோ அரிய பொன்போன்ற நிறமானது, முலைக்கண் கருத்தது, முகமாகிய தாமரை வெளுத்தது, பின் ஒரு சூரியன் உதயமானதுபோலும் ஒரு ஆண் மகவைப் பெற்றாள்—எ-று. 5

(இ-ள்.) வணிகன் புத்திரன் பிறந்தவுடனே சந்தோஷமுடையவனுகி தருமவிடையுடைய சிவபெருமான் திருக்கோயில்சூழ்ந்த அழகிய ஆவரணங் கள் யாவும் திருநாள்காலம்போல் சிங்காரமாக்கி அந்நகரவீதிகளையும் அலங் கரித்து பறையறைந்தறிவித்து அந்தணர்க்குள்ள ஆசைகெடும்படி பொன் னனந்தமாகத் தானஞ்செய்தான்.—எ-று. 6

(இ-ள்) மணப்பொடியை வாசல் சித்திரகூடம் எங்கும் நற்கந்தமுண்டா கும்படி யிறைத்து எண்ணெய் சாந்தம் பாக்கு வெற்றிலை வாசனைதிரவியம் இவைகளை நற்குணமுடைய ஆண் பெண் ணிருபாலர்க்குங்கொடுத்து மக னுக்கு சாதக கருமமுதலிய யாவுமுடித்து நமக்கு சிவபெருமான் கருதியபடியே கிருபைபாலிக்கப் பெற்றோமென மனமகிழ்ந்திருந்தான்.—எ-று. 7

(இ-ள்.) எமக்கிபபரமன் வழித்துணையாகவந்து சிவபத்தியும் மகப்பேறுங் கொடுத்து என் உடல் பொருளாவி இவைகளைத் தன் கையிலேற்றுக்கொண் டான், அதனல் அளவில்லாத இன்ப மடைந்தேனென்று மகிழ்ந்திருந்தாள். —எ-று. 8

(இ-ள்.) வருகிற இலாபத்தில் பாதிதருகிறேனென்று அந்நாள் யான் சொல்லியது மெய்யே ஆனாலும், மற்றையபாதியும் அதற்கு முன்னிருந்த முதற்பொருளும் கொடுத்தவன் யாவன் எல்லாம் சிவப்பிரசாதமே என்று சொல்லுமிடத்து யான் எந்த சொந்தங்கொண்டு என்னதென்று பாராட்டி வாழ்வேன்.—எ-று. 9

அந்தகன் கொடிய னாகி யறுதிசெய் கருவி வைத்தான்
பந்தமிக் குடையா ரந்த பான்மைகண் டகல மாட்டார்
சொந்தமன் றிந்த யாக்கை குடம்பைவிட் டெழுந்த புட்போல்
மைந்தரும் பிறருங் காண வைத்துயிர்ச் செலவி னம்மா. 10

உடனசை கொண்டே செல்வ மோம்புத லுலக வாழ்க்கை
மடனக முள்ளார் தம்பின் வளம்பட வேண்டார் யாரே
நடப்படு மீச னவ்வக் கலத்ததே தருவ னீயார்
விடம்படு மாந்த ருப்போல் வெற்றன கிற்ப ரந்தோ. 11

அத்தமிக் குற்ற காலே யாரணத் தறைந்த வண்ணஞ்
சித்தமொத் தனக மாகி சிவபணி யாற்றல் வேண்டும்
தத்தமக் குறிய வாற்றித் தமருட னறமும் பேணாப்
பித்தரிப் பூதலத்தே பிறக் கினும் பிறந்தி லாரே. 12

அவத்தையிற் பிணிப்புண் டின்னே யலமரு மெளிய னேற்கு
சிவத்திருப் பணியொன் றுற்ற கிடைத்ததே தேவ நாட்டம்
தவப்பல னீதே யல்லாற் சான்று வேறில்லை யத்தால்
பவப்பிணி யறவி ரிஞ்சைப் பணிவிடை யின்னுஞ் செய்வேன். 13

என்னநன் கினைவிற் றனே யெண்ணிய சீலன் பன்னாள்
தன்னமும் வஞ்ச மில்லாத் தருமசிந் தையனாய் வைகி
பன்னக வணியி னன்றன் பணிவிடை தன்னி லுள்ளப்
பொன்னெலாஞ் செலவி டற்குட் பொலிசிவா னந்த முற்றான். 14

திருச்சிற்றம்பலம்.

திருவிரிஞ்சைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௭௧.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விடையடைப்படலம்.

:0:

கொடை நடை யனமனாட்குக் கொடுத்துடற் பாதி யானன்
விடை யடைத் தன்பனைகல் விளம்புவன் விதித்த நல்ல
நடை யடைத் தொன்று ளேற்கு ஞானருள் ளின்பவாரி
மடை யுடைத் தூற் றுகந்த வெண்மலர் மகன் மகற்கே. 1

(இ-ள்.) யாவருக்குமிந்த சரீரம் சுதந்தரமல்ல இதுவே முட்டைவிட்டு வெளிவந்த பக்ஷிபோல் மக்கள் மனையவள் முதலிய சுற்றத்தினர் காணும்படி சரீரத்தை இவ்விடத்திலேயே வைத்துவிட்டு போங்கால், இயமன் நமக்கும் பொல்லாதவனாயிருந்து வாத பித்த சிலேத்தும மென்கின்ற பாசக்கயிற்றை வைத்திருந்தே சுருக்குகின்றா னென்பதும் மிகுந்த இச்சையுடையவர்கள் அதையுணர்ந்து நிராசைவந்து தவஞ்செய்து சிவபதம் சேரமாட்டார்கள்.—எ-று.

(இ-ள்) தேகபோசனை நிமித்தமாகவே பொருளைக்காத்தல் இது உலக வழக்கு இதிலும் அறிவீனராயினோர்களில் யான் எல்லாம் அடையவேண்டு மென்று நினையாதவர் ஒருவருமில்லை எல்லாநடத்துகின்ற பரமேசுரன் அவரவர்கள் புண்ணிய பாவவழியே சுகதுக்கங்களைக் கொடுப்பன் என்பதையறியாதவரோ, அவர்கள் ஊர்நடுவிலிருந்த நஞ்சுமாமரம்போல் ஒன்றையும் யாவர்க்கும் பயன்தராமல் தனிமையாயிருப்பர்.—எ-று. 11

(இ-ள்.) தனக்கு செல்வம் வந்தபோது வேதசிவாகமங்களில் சொல்லிய படி மனதொருமித்து சுத்தமாயிருந்து சிவதிருப்பணியே செய்தல் வேண்டும் அப்படிக்கல்லாமல், தம்முடைய மலவுடலைக்காப்பதே கருமமாகக்கொண்டுள்ளார் தன் சுற்றத்தினரை காப்பதுடன் நல்லறமுஞ் செய்யாத அறிவீனர் இந்த பூமியில் பிறந்தும் பிறவாதவரேயாவர் —எ-று. 12

(இ-ள்.) உலகமாயையில் கட்டுண்டு வீணுகச்சுழல்கின்ற அடியேனுக்கு சிவாலயத்திருப்பணி செய்யக்கிடைத்தது எந்த பரமேச்சுரன் கிருபை! இதுவே யான்செய்த தபோபலம், இதற்கு வேறொரு சாக்ஷியும் வேண்டுமோ, அதனால் இன்னமும் என் தேகபதன பரியந்தம் இவ்விரிஞ்சை நகரத்திலேயேயிருந்து பிறவிநோய் கெடும்படி திருப்பணியே செய்வேன்.—எ-று. 13

(இ-ள்) இப்படியாக தனக்குள்ளே எண்ணிய அன்பன் அற்பமுமனதில் வேறொரு கபடமில்லாமல் தருமசிந்தையுடையவனாகி சிலநாளிருந்து சிவபெருமான் திருக்கோயில் திருப்பணியிலேயே தன்னிடத்துள்ள பொருளெல்லாம் செலவிடக்கொண்ட மனம் சிவானந்தம் பொங்கவிருந்தான்.—எ-று. 14

திருச்சிற்றம்பலம்.
முற்றிற்று.

---

(இ-ள்) விண்டுவின் உந்தியங் கமல மலரிற் பிறந்தவனாகிய பிரமனது மானதபுத்திரனுக்கு வேத சிவாகமங்களில் விலக்கியவைகளைவிட்டு இவைகளைச்செய்யென விதித்துள்ள நல்லமார்க்கத்திலே நடந்து சருவகாரணமாகிய ஒரு பொருளையே நாட்டங்கொண்டுள்ள சிவஞானிகள் மனதின்கண் பேரின்ப சாகரமடைதிரந்து சிந்தும் கந்தநாதன், அன்னம்போலு நடையுடைய பரமேஸ்வரிக்கு கொடுத்த ஈகையால் பாதிதிருமேனியாய் விளங்கிய பரமேஸ்வரனுடைய உத்திரவுபெற்று திருவிரிஞ்சையம்பதியைவிட்டு சிவநேசன் செல்லும் சரித்திரம் சொல்வார் —எ-று. 1

சொல்லிய தருமத் துள்ளே துதிசிவ தருமந் தானே
வல்லையி லொன்று நூறாய் வளர்ந்தது வளர மேரு
வில்லிதன் னருளே பொங்கி விட்டது வணிகற் கின்றாட்
புல்லிய வினையு மொத்து மலபரி பாகம் பூத்த. 2

மதிநுத னெடிய வேற்கண் மரகத வல்லி பாகன்
ததியிது பத்தி ஞான்ற தனதனை வலிந்து பற்றி
யதிர்தரச் செய்து நந்த மருளினர் கைலை யென்னுங்
கதிதர வேண்டு மென்னக் கருதிநீ திபற்று வானால். 3

பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை யணங்கு போல்வாள்
தன்னொடும் புதல்வ னோடுஞ் சனித்தநிற் புரம்போய வாழ்தி
நின்னரும் விரத மெல்லா நெருநலை முடிங்க வென்ன
முன்னவன் கனவி லோதக் கண்டவன் மொழிவ னீதே. 4

வேறு.

நாதமுதற் றத்துவத்தி னப்பாலுக் கப்பால்
ஞானவிளக் கொளியாகு மற்புசிற் பரமே
பூதமுதற் றருவாகு மென்னொருநெ சகத்தே
புக்கிரவி லுத்தரும போதனைசெய் தகன்றான்
ஆதலினா லவனருளே யென்செயுமோ வதுவே
யாகவென வெண்ணியெணி யாலயத்துட் புகுதா
காதலினை கையேந்து காதலிபின் னிற்க
கறைமிடற்றெம் பெருமானைப் பரவியிது புகலும். 5

மருமமரும் பொன்னனை திருமகளே யெளியேன்
மலரகத்தே யுற்பவமாம் புலவனெனை லாமே
கருமமெலாஞ் சிவமாக்குஞ் சாமுகனா னமே
கைலாய பதம்போக சாமியுன தரிய
தருமவிடை கண்காணத் தவாழ்னினா னமே
தலைச்சாயுந் தலைச்சாயு மெனக்குடநீ ராட்டும்
ஒருமகனா னமேயன் றென்றுலு மெவ்வா
றத்தமனே யெந்திரத்தா லுனைப்பிரிவ லெந்தாய் 6

(இ-ள்.) வேத சிவாகமங்களில் சொல்லிய தருமங்களுக்குள்ளே யாவருந் துதிக்குஞ் சிவதருமமானது விரைவில் ஒன்றுசெய்ய அது பலவாய் வளர்ந்து பரமேசுரன் கிருபையுண்டானதால் வணிகனுக்கு இந்நாள்வரையும் உள்ள ஒயாத்து மலபரிபாகம் வந்தது.—எ-று. 2

(இ-ள்) பாதி சந்திரன்போலு நெற்றியும் நீண்டவேல்போலுங் கண்ணுமுடைய மரகதவல்லியம்மையாரைப் பாகத்திலுடைய சிவபிரான் இதுவே சமயம் அன்பிற்சிறந்த இச்செல்வனை நாமே வலியப்பற்றி பயமுறச்செய்து நம்முடைய காருண்ணியத்தால் கைலாய மென்கின்ற பதவியைக்கொடுக்க வேண்டுமென்று நினைத்து இதுசெய்வான்.—எ-று 3

(இ-ள்.) பொன்போலும் ஒளிவிடத் தேமல்படர்ந்த தனபாரமுடைய தெய்வமகளிர்போலும் உன் பத்தினி புத்திரனோடும் கூடியெழுந்து நீ பிறந்த தேசமேபோய் வாழக்கடவாய் நீ செய்யவேண்டிய நோன்புகள் யாவும் நேற்றியதினமே முடிந்துவிட்டன என்று பரமேஸ்வரன் வணிகன் கனவில் எழுந்தருளிவந்து சொல்ல அதுகண்டு விழித்து அவன் இது சொல்வான்.—எ-று. 4

(இ-ள்) மார்பினிடத்தில் இலக்குமியை வைத்துள்ள நாராயணனோ அடியேன், அல்லது தாமரையில் பிறந்த பிரமனோ, தான்செய்யும் காரியமெல்லாம் சிவப்பணியாகவே செய்யும் 'காமுகாசுரனோ தான் கைலாயப்பதவிக்குச்செல்ல உம்முடைய அரிய மழவிடையைத்தரிசித்த அந்தணனோ தாதா தலைச்சாயும் தலைச்சாயுமென அபிடேகமாட்டிய ஆதிசைவப் பிள்ளையோ அன்று இவர்களில் யான் ஒருவனுமல்லாதவனா யிருந்தாலும் உன்னை எப்படி பிரிந்துபோவேன் எனது தந்தையுந் தாயமானவனே —எ-று. 5

(இ-ள்.) யான் தோன்றியழியும் புறப்பொருள் பற்றுடையனாகி விதித்த நாளை வீணாக்கி சிவபுண்ணியஞ்செய்வது இன்னதென்றறியாத வேறானவனாலும் மயக்கத்தைச் சேர்ந்தவனாயிருந்து பஞ்சப்புலனாற் கவராடபடும் விடயவாதனையிலகப்பட்டு இலச்சையிலே சிக்குண்டு இவ்வுலகில் அலையும் துக்கமுடையவனானாலும் தெளிவடைந்து உள்ளும்புறம்பும் ஒரு படித்தாய் சுத்தவாதனையால் களங்கமில்லாக்கண்ணாடிபோல் தேர்ந்த சிவஞானபோதசபையையடையாதவனானாலும், உன்னுடைய கிருபாநோக்கத்தால் என்னையுமோர் பொருட்படுத்தி வழித்துணையாகிவந்த என்தாயே உன்னை எந்த எண்ணத்தால் பிறிந்துபோவேன்.—எ-று. 6

பொருட்சார்பி னின்றுரிய நாளவமே போக்கி
புண்ணியமிற் றெனவறியா வன்னியனே யெனினு
மருட்சார்பி லைம்புலனு மாறிவிட யத்தே
வம்பினுழன் றிம்பரலை துன்பமுளே னெனினுந்
தெருட்சார்பி லுள்வெளியுஞ் சுத்தபடி கம்போல்
தேருசிவ ஞானசபை செலவறியே னெனினும்
அருட்சார்பி னுந்தமையோர் பொருட்படுத்தித் துணையாம்
அன்னையுனை யென்னினைவாற் பிறிவுறுவ லெந்தாய்

களிமிகையால் விளையாடுஞ் செல்வர்சிறா ரென்னக்
கனகமணிப் பொறியியங்கு நெடியவாண் முற்று
தளிமுகனின் றில்வண்ணங் கற்றவை விட்ட
தன்னமென நெக்குருகி சந்நிதியை விட்டே
அளிமுகனுய்தந கமரார் சூழ்ந்தவனு மீசன்
ஆணைகட வாதவனுய்ப் பச்சிமப்பா னோக்கும்
வெளிமுகனுப் நின்றவெலை யிப்பிறிவை காணு
மேதினிவியந திதனை யோது முறையான. 8

தரவிணைகொச்சகக்கலிப்பா

பாவிநதி தீரத்தே தமர்நின்றார் பைங்கனக
வேலியிவ னிற்கின்ற வெளியெல்லா முறுகிரண
மாலியொரு சதகோடி வந்துற்றா ரெனுமொளியால்
நாலிசிவி கைப்பெரியோன் மணமெனறார் சிலமாந்தர். 9

மடதிசைமா னவனெல்லாஞ் சிவதரும வழியறிய
திடதிசையா யித்தலத்துச் சேர்ந்திதனைச் செயுமியலாற்
குடதிசைமா னவனென்னக் கூறுமொழி பிழையாமல்
வடதிசையா னிவனென்றா மதியுடைய சிலமாந்தர். 10

பண்டோதக் கடனெஞ்சை யுண்டபரம் பரனுக்கே
தொண்டான ரவனியிலெத் தொகையில்லை யாரேனும்
வண்டாடு சடைமுடியார் வழித்துணையாய் வரப்பெற்றார்
கண்டோமா நாமேனுங் கதையென்றா ரதிற்சில்லோர். 11

(இ-ள்) யான் தோன்றியழியும் புறப்பொருள் பற்றுடையனாகி விதித்த நாளை வீணாக்கி சிவபுண்ணியஞ் செய்வது இன்னதென்றறியாத வேறானவனாலும் மயக்கத்தைச்சேர்ந்தவனாயிருந்து பஞ்சப்புலனாற் கவரப்படும் விடய வாதனையிலகப்பட்டு இலச்சையிலே சிக்குண்டு இவ்வுலகில் அலையும் துக்கமுடையவனானாலும் தெளிவடைந்து உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் சுத்த வாதனையால் களங்கமிலலாக்கண்ணாடிபோல்தேர்ந்த சிவஞானபோதசபையை யடையாதவனானாலும், உன்னுடைய கிருபாநோக்கத்தால் என்னையுமோர் பொருட்படுத்தி வழித்துணையாகிவந்த என் தாயே உன்னை எந்த எண்ணத்தால் பிறிந்துபோவேன்.—எ-று. (7)

(இ-ள்.) சந்தோடமிகுதியால் செருக்கிவிளையாடும் செல்வர் சிறுவர்போல் பொன்னாலு மணிகளாலும் செயதுள்ள சித்திரப்பதுமைகள் சலிக்கும் நீண்டு உயர்ந்த மதிலால் சூழ்ந்துள்ள திருக்கோயிலின் முன்னேநின்று இவ்வாறு கத்துதித்து தாய்ப்பசுவை பிறிந்த கன்றுபோல் மனமுறுகிநின்று அச்சந்நிதியைவிட்டுப்பிறிந்து அன்புடையவனாகவும் தன்னுடைய சுற்றத்தினரால் சூழப்பட்டவனாகவும் பேன்முகநோக்கிய நோக்கமுடையவனாகவும் நின்ற சமயத்தில் அவ்வணிகன் இவ்விரிஞ்சைநகரைப் பிறிந்துபோதலை அந்நகர வாசிகள்கண்டு இதுசொல்வர்கள்.—எ-று. (8)

(இ-ள்.) பாலிநதியின் கரைவரையும் இவன் சுற்றத்தினர் நடந்து நின்றார் இவ்வணிகன் பசிய பொன்னாலாகிய மதில்புறத்தே நின்றான் அப்படி நின்றபோது இதன்மத்தியில் உள்ளயிடமெல்லாம் நூறுகோடி சூரியர்கள் ஒருகாலத்தில் உதயமானதுபோல் ஒரு வொளி தோன்றக்கண்டாரில் சிலர் இது முத்துச்சிவிகையுடைய திருஞானசம்பந்த ஸ்வாமிகள் திருமணந்தானோ வென்றார்.—எ-று. (9)

(இ-ள்.) நல்லறிவுடைய சிலமக்கள், அஞ்ஞானத்தழுந்திய மனிதரெல்லாம் சிவதருமம் செய்வது இத்தன்மைத்தென்ன அறியும்படி மனோதிடமாய் வந்து இந்த நகரத்தில் திருப்பணிசெய்த காரணத்தால் இவனை மேனாட்டு மனிதனென்ன சொல்வது சரியன்று உத்தரதிக்கதிகாரமுடைய குபேரனே யென்றார்.—எ-று. (10)

(இ-ள்.) முற்காலத்தில் தண்ணிய கடலெழுந்த விடமுண்ட சிவபெருமானுக்குத் திருத்தொண்டரென்பவர் எத்தனைபேர் இருக்கின்றார்கள் அவர்களில் யாவராகிலும் வண்டுகள் மொய்த்த மலர்சூடிய சடையுடையாரோ மார்க்கசகாயமாய் வரப்பெற்றார்கள் அல்லது நாமேனும் கதையேனும் கேட்டோமா வென்றார் அவர்களில் சிலர்.—எ-று. 11

விருத்தியிலே பாதிகா வேண்டினதே யல்லாமல்
அருத்தமெலாந் தரவுள்ள மாருக்கா முலகத்தே
ஒருத்தனிவ னுளனென்று மொப்பில்லை யொப்பில்லா
கருந்தன்றன் விளையாடற் காணென்று ரதிசயில்லோர். 12

வர்த்தகனைப் பொன்கொண்டிம் மாநகர்க்கு வந்ததினம்
எத்தனைமா டெத்தனையா ளெத்துணைத்தாம் பொதியென்றே
வைத்தெண்ண வல்லவர்க ளார்மதித்தா ரிலையதனால்
அத்தனுறு கைலாயக் காவென்று ரதிற்சில்லோர். 13

பன்னிறமா மணியென்னப் பன்னிறவா வுறுவலைபங்
துன்னியவிந் நாடெல்லாஞ் சொறபதங்கண் மேலாக
மன்னியசீர் கோவுலக வாழ்வாகி நின்றனவே
என்னினியா மிவனைகி லென்றறைவ ரதிசயில்லோர். 14

நாடியவா டவர்நதப் படிபோத நகரெல்லாங்
கூடியவஞ் சில்லோதி கோமளமங் கையர்தமபின்
வாடியவிப் பாலகனை மடிபெந்த வடிபெயரும
பாடிவளைக் கென்னென்றே பகர்கின்றார் சிலமாதர். 15

மரகதப்பே ரனையென்ன மயிலென்ன செல்கின்றாள்
பரகதிக்கு வித்தாய பாலனொடுங் கேள்வனொடும்
துரகதமா டியவந்த சொன்னதையே ரேறிபலால்
பாகதிக்கு நடவாளென் றொருமாது பகர்கின்றாள். 16

சிற்றினத்து முன்பிறந்த பாலனிளஞ் சேயனவின்
உற்றமரு மலரென்ன வுடனலிய வாடிடுமே
அற்றமிது சரியாமோ வொருமதியு மலவென்ன
பெற்றவளென் னறியாளோ பிள்ளையென்று ளொருமாது. 17

இப்படியந் நகரெல்லா மெண்ணியெணி மதிவந்த
செப்பிடவிப் படிநின்ற தேரேறி யூரகன்று
மைப்படியும் பூஞ்சோலை மருமலரின் மகரந்தம்
மெய்ப்படிய விளவேனில் மெல்லியகால் சுகமுதவ. 18

(இ-ள்.) அவர்களில் சிலர் இலாபத்தில் பாதி மாத்திரம் சிவப்பிரீதியாக்கப் பிரார்த்தித்ததேயல்லாமல் உள்ள பொருளெல்லாம் சிவப்பிரீதியாக்க யாவருக்குதான் மனம் வரும், இந்த உலகத்தில் இவன் ஒருவன் மாத்திரமே இருக்கின்றானென்றால் இவனுக்கு ஒப்பு சொல்ல ஒருவருமில்லை அதுவும் ஒப்புவமையில்லாத பரமேசன் திருவிளையாடலே என்றார்.—எ-று. (12)

(இ-ள்.) சிலர் இவன் வாணிபனாகப் பொற்பொதிகொண்டு இந்த நகரம் வந்த நாளில் மாடெத்தனை அவைகளின் பின் வந்த ஆளெத்தனை அம்மாட்டின் மீதுவந்த பொற்கிழியெத்தனை என்று கணக்கிட்டுப் பார்த்தவர்களில்லை யாவர்தான் வரையறக்கண்டார் இல்லையே ஆகையால் இப்பசுவெல்லாங் கைலாயத்துள்ளதேயென்றார் —எ-று. (13)

(இ-ள்.) பல நிறமாகிய இரத்தினத்தோற்றம்போலும் பல நிறமாகிய இடபங்கள் சூழ்ந்து நெருங்கிய இத்தேசமெல்லாம் சொல்கின்ற சுவர்க்காதி பதங்களுக்கு மேலாகியுள்ள சிறப்புற்ற கோபுர நிலைமையாகவே இருந்தனவே இவன் இந்த நகரம் விட்டு நீங்கினால் இனி எப்படியாமோவென்றார். – எ-று.

(இ-ள்.) இந்த காட்சிகண்ட ஆண்மக்கள் இப்படியாக அவரவர்கள் பேச அங்நகரமெங்குங் கூடிகாணும அழகும் மிருதுவுமுடைய கூந்தல்கொண்ட இளமை பருவம் வாய்ந்த மகளிர்களில் முகவாட்டமாகிய இப்பிள்ளையை மடியில் வைத்து காலால் நடந்துபோகும வருத்தம் இவளுக்கு என்னவென்றார் சில மங்கையர் —எ-று. (15)

(இ-ள்) அவர்களில் ஒரு பெண் நம்முடைய மரகதாம்பிகையாகிய தாய் போலு மயில்போலும் போகின்றவள் கைலாயகதிக்குப்போக வித்தாய் மூளைத்தப் பிள்ளையோடுந்தன் புருடனோடும் குதிரைப்பூட்டிய அந்த பொற்றேரில் போவதல்லாமல் தங்கள் நகரம் நடந்து செல்லமாட்டாளென்றாள்.-எ-று. (16)

(இ-ள்.) ஒரு பெண் சில தினத்துக்கு முன்னே பிறந்த இப்பிள்ளை அனலில் பட்ட மணமலர்போல் உடம்பு வதங்கி வாடுமே இதுதானோ சமயம் இன்னம் ஒரு மாதமாகவில்லையே இதுவென்னப் பெற்றவளுக்குத் தெரியாதோ என்றாள். —எ-று. (17)

(இ-ள்.) இந்த விதமாக அங்நகரத்தாரெல்லா நினைத்து நினைத்து அவரவர்கள் புத்தியில் தோன்றியவாறு பேச இந்த பூமியில் நின்றிருந்த தேரிலேறி அவ்வூரைக்கடந்து மேகங்கள் முடியில் படியும் உன்னதமாகிய பூங்காமணப் பூவின் பூம்பொடி சரீரத்திற்படிய இளவேனிலிலுண்டாகிய தென்றல் சுகங்கொடுக்க —எ-று (18)

பாணதியி லானேற்றுப் படையான தந்நீரப்
பேணதிரை யென்னவடி பெயர்ந்தேகு மாலிரதம்
போனதிரு நாவாயின் பாய்மாமே போற்பிறவி
வானதியைக் கடந்தாங்கு மற்றதனைக் கடந்ததுவே 19

நதிக்கரையோர் பூங்காவிற் புக்கனிக நடந்தேக
மதிக்குறையைச் சூடிபிரான் மலரடியை மறவாத
நிதிக்கரையன் போநதருண நிற்குமரன் றளிரனைதல்
கதிக்கரை நீவாவென்ன கைகாட்டி நெறிபோலும். 20

தண்ணளியாற் பரஞ்சோதி துணைவரமே தவஞ்செய்த
எண்ணளியாக் கின்புறநாம பாடினலா லெரிசடைபூக்
கண்ணளிக்குத் துணையாகே மென முமனங் களிதூங்க
பண்ணளிகண் மருதமெனும் பண்பாடி சூழ்ந்தனவே 21

புனிதவுரு பரிசத்தாற் புனிதமுற மமபயமென்ன
தனிதமறை யுளவெல்லாந் சாற்றுவதா விப்பெரியோன்
மனிதனலப் பரமனருள் வாழுள்ளா னெனக்குபப
முனிதனை மலயக்கால் முன்சென்று வீசுமதே. 22

வான்றளித்து மிக்கரும்பு மலர்தலைய பூஞ்சோலை
ஆன்றவர்க ணம்மகத்து வந்துற்று லாற்றுவதென்
சான்றதென வாய்ந்தறிந்த போன்மென்னத் தலைவணங்கி
தேன்றுளித்து மலர்தூவி திருவடிபூசித்தனவே. 23

சாதமொழி யிதுபக்கிச் சாலமெலாம் வம்மின்காள்
தேசிவ நெறியாளன் வரவறிவா மென்பதுபோல்
காதமணங் கண்ணூரி தாதுகுக்குங் காதுழைந்து
கூதையிற கதுவாறி குயிலினங்கட் கூவினமே. 24

ஒருப்பிணியி லாதவனை யொத்தமனத் தத்தமெலாந்
திருப்பணிக்கே யாக்கிசிவ புரம்போதுஞ் செல்வனென
கருப்பிணியி லானுருவை கண்டுசுக மதுபேசும்
அருப்பணிய தண்டலைய வாசுகங்க ளறிதரவே. 25

(இ-ள்.) பாலி நதியில் இடபப்படைகள் அவ்வாற்று நீரில் உண்டாகிய நுரையோடு செல்லும் அலைபோற் சென்றது அபபெரிய இரதமானது அவ் வாற்றில் செல்லும் மரக்கலம்போல் பிறவியென்கின்ற நதியைத் தாண்டுவது போலும் அதைக்கடந்து கரையேறினது.—எ-று (19)

(இ-ள்.) அந்தவாற்றின் கரையில் ஒரு பூஞ்சோலையில் அவன் படைகள் புகுந்து நடந்து செல்ல குறைமதியை சூடிய சிவபிரான் சரணாரவிந்த மற வாத செல்வன் அவைகளின் பின்னே போகின்ற சமயம அங்கே நின்றிரு க்கு மரங்களின் தளிர்கள் அசைதல் மோகசுவுலகம நீவாவென்ன கைகாட்டி யழைபபது போலும்.—எ-று. (20)

(இ-ள்.) தண்ணிய அன்பால் சிவபிரான் வழித்துணை வரும்படி தவம் செய்தவரென்று நினைக்கும் நேசருக்கு இன்பமுண்டாகும்படி பாடாவிடில் பரமேசுரன் அக்கினி வடிவாகிய வேணியின் பூவிலிருக்கும் வண்டுகளுக்கு நாம் சரியாகமாட்டோம் என்று மனங்களித்து இனிய இசை பாடும் வண்டி னங்கள் மருதப பண்பாடி சுற்றின.—எ-று. (21)

(இ-ள்.) சுத்தமுடைய வடிவின் பரிசத்தினால் புனிதமுண்டாகுமென்ன சத்திக்கும் வேதங்களெல்லாஞ் சொல்வதால் இந்த மகான் மனிதனேயல்ல என்னவெனில் பரமேசுரன் வரபபிரசாதமடைந்தவனென்று அகத்தியரது பொதியமலையுண்டாகி வந்த தென்றல் இவன் மேல் வந்து வீசும.—எ-று ( )

(இ-ள்.) மேன்முகந்தளிருண்டாகி அரும்புகள் அதிகரித்து மலர்ந்த முடியுடைய பூங்காவானவை ஒரு பெரியோர்கள் நாம் இருக்குமிடம் வந்தால் செய்யவேண்டிய தென்னவென சிவாகமங்களை ஆய்ந்தறிந்ததுபோலும் தலை யால் வணங்கி தேமாங்கிய நீராட்டி மலராலர்ச்சித்து அவன் பாதபூசை செய் தன.—எ-று. (23)

(இ-ள்.) யான் சொல்வது சத்தியவசனம் பக்கி கூட்டங்களே வாருங்கள் உண்மையான சிவதருமமுடையவன் இவன் வருதலை நாமெல்லோருங்கண்டு தரிசிக்கவேண்டுமென்பதுபோல் ஒரு காவததூரம் தேனின் மணம் வீசி பூம் பொடி சிந்தும் சோலையுட் புகுந்து அதனாலுண்டாகிய குளிர் அடைந்த இற கை யுலர்த்தி குயில் கூட்டங்கள் கூவின.—எ-று (24)

(இ-ள்.) ஓர்வித துன்பமுமணுகாதபடி மனமொத்து தன் பொருளெல் லாம் சிவ திருப்பணிக்கே உபயோகமாகும்படி செய்து சிவபதம் போகும் புண்ணியன் என்று பிறவிப்பிணியில்லாதவனாகிய சுக முனிவர் உருவுள்ள கிளிகள் பூ அரும்பின் அலங்காரமுடைய சோலையிலுள்ள பறவைகள் அறி யும்படி பேசும்.—எ-று. (25)

மீப்பதங்கள் செல்வார்முன் விண்ணாட்ட ரம்பையர்கள்
பூப்பதங்க ளடிபெயர்த்து நடமாடற் போன்மென்றே
மாப்புனித னென்றவொரு மதிவந்த களிமிகையால்
தோப்புகளிற் பலமஞ்ஞை தோகைவிரித் தாடினவே. 26

இத்தகைய சோலைவளங் கண்டுகண்டங் கெழின்மாட
நத்தமிரு பாங்கருள நலங்கண்டு தூங்கருளி
முத்தமணியார மொடும் பொற்பாடிவ முடியோடும்
சித்திரமா யொருகுன்றந் தோன்றிற்றச் சீருரைப்பாம். 27

திருச்சிற்றம்பலம்.

விடையடைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ககூஅ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செருக்கிரிப்படலம்.

———:0:———

கலி விருத்தம்.

கந்தரங் கந்தரம் படியுங் காமர்பூ
வந்தர மந்தரத் தவருலா வரல்
சுந்தரஞ் சுந்தரக் கிரிக்கா றெருண்டார்வி
டுந்தர முந்தர லுதவு நீரதே. 1

பாதியிற் பச்சிளந் தருமயித் தொரு
பாதியிற் சோதியந் தருவிருப் பிறை
பாதிபெண் ணுருவெனி லல்லில்வ் விறை
பாதியும் பாதியும் பதலையா குமே. 2

பொன்றிரு முடியறு முகமபொருத் தலான்
மன்றநற் குராக்கடம் பலர்ந்த மாலையால்
என்றுநா ளிளந்தளி ரின்றிருந் தலாற்
குன்றனங் குறிஞ்சியிற குமரனென் பவே. 3

(இ-ள்.) சுவர்க்காதி பதவிகளுக்கு போகிறவர்கள் முன்னே தேவலோக அரம்பை மாதர்கள் அழகிய அடி பெயர்த்து நடிப்பதுபோல் இவன் மகா புண்ணியமுடையவனென்கின்ற புத்தியுண்டாகி சந்தோடத்தால் அச்சோலைகளில் அனந்த மயில்கள் கலாபத்தை விரித்து நடிக்கும் —எ-று. (26)

(இ-ள்) இவ்விதமாகிய பூங்காவின் வளங்கண்டு அவ்விடங்களில் இரு பக்கமுமிருக்கும் நகரங்களையும் பார்த்து சிந்தும் அருவியாகிய முத்தமாலையோடும் பொன்னாலாகிய சிகரத்தோடும் அழகாய் ஒரு குன்று காணபபட்டது அதன் சிறபபு அறிந்த வகை சொல்வாம் —எ-று. (27)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செருக்கிரிப்படலம்.



(இ-ள்.) சுந்தரம் சுந்தரக்கிரி, அழகுக்கு அழகு செய்ததுபோலுமுள்ள அம்மலையானது, கந்தரம் கந்தரம்படியும மேகங்கள் படிந்துள்ள கண்டத்தையுடையது, அந்தரத்து அவர் உலாவரல் காமர் பூ அந்தரம், தேவலோக வாசிகள் உலாவிக்கொண்டிருக்கும் அழகிய பூக்கண் மலிந்த இடையையுடையது, தொண்டர் வீடு உந்தரம் கால், அடியார்கள் மோக்க உலகம் போகும் வழியாகிய அடியையுடையது முந்து அரன் உதவு நீரது முன்னே நின்று பரமேசுரன் கிருபை பாலிக்கக்கூடியது.—எ-று (1)

(இ-ள்.) அக்குன்றானது ஒரு பாகம் பசுமையும் இளமையுமுடைய விருக்ஷங்களும் மற்றொரு பாகத்தில் சோதி விருக்ஷங்களும் இருப்பதால் பகலில் உமாதேவியாரைப்போலவும் இராவில் உமையையோர் பாகங்கொண்ட அர்த்தநாரீஸ்வர வடிவமாகவும் தோன்றும் —எ-று. (2)

(இ-ள்.) அக்குன்றம், பொற்சிகரமுடைய ஆறுமுகமிருத்தலானும் மணமுள்ள குராகடம்பு என்னுமலர் அலர்ந்து மாலைபோல் தோற்றலானும், எப்போதும் இளமையாகிய தளிருண்டாயிருந்தலானு நமது குறிஞ்சிக்கிறைவனாகிய குமாரக்கடவுள்போலும்.—எ-று. (3)

பதக்குரு வரும்புடைந் தலர்ந்தபன் மலர்
துதைக்கரு வண்டினம் பாடத் தோகைகண்
மிதித்தடி பெயர்த்துநின் றாடலந் நகர்
சதக்கிரு தனையென சாற்றுநீ ரதே. 4

நறும்பொறை வளைத்தவன் றன்னைநா டியே
வெறும்பொறை யாகிபின் னெடுக்குமெய்ம் மையால்
குறும்பொறை யாயினு நிமிருங்குன் றசிற
றெருமபிறை தன்னின்மிக் கெடுக்குமென் பவே. 5

நீடிய மாம்பாரி லேக்கநின் றக
நாடிய மலர்பறித் தணிந்துலாய் விறை
யாடிய சூரர மகளிரக் கமுன்
வாடிய மானின மருண்டுநிற் குமே 6

சித்திரப் பிண்டிமா லைாநத தேமலா
அத்திரம் வேடுவர் மகளிராய மே
தத்தையங் கோகில சால மிக்கவக்
குத்திர மதன்படை வீடு போலுமே. 7

முடித்த லத்தாரி றுன்முற்று மாமதி
அடுத்துகு தாரையோர் பிலவங்கத்து வாய்
மடுத்தது நிரைமதி மண்டலத் தளி
குடித்த நற்றவ னெழுநகோல முள்ளதால். 8

கடமது கலந்துணக் கானவே டுவன்
உடனொரு கிழங்ககழ்ந் துள்ள பள்ளமா
மிடமொரு மான் மகவீன்ற தேந்துவான்
கொடுமான் வள்ளியங் குழவி யென்னவே. 9

அருவிகள் காஞ்சன வறலை யுட்கொடு
மருவலர் வேங்கை பொன்வாரி பாயுமால்
கிரிதனைச் சூழ்வரு கேடிலூ ரெலாந
திருநலம் பெறவருட் சிந்தை நந்தவே. 10

(இ-ள்.) பருவமும் நிறமுமுடைய பூவரும்புகள் கட்டுடைந்து மலர்ந்த பலப் பூக்களில் நெருங்கிய கரிய வண்டுகள் பாட மயில்கள் சதிமிதித்து நடனஞ் செய்தலால் அம்மலை இந்திரன் சபைபோலுமிருக்கும்.—எ-று. (4)

(இ-ள்.) அம்மலை சிற்றெறும்பானது தனக்கு அதிகப்பட்ட உணவையும் எடுப்பதுபோல மேருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானைக்கண்டு தனக்கோர் கனமில்லாமல் தன் சரீரத்தில் பின்னே சுமக்கப்போகிறபடியால் சிறிய குன்றாயிருந்தாலும் இறுமாந்திருக்கும்.—எ-று. (5)

(இ-ள்) அம்மலைப் பக்கத்திலுள்ள நீண்ட மரங்கள் செழித்த இடத்தை நாடிப்போய் கோட்டுப் பூபறித்து சூடி விளையாடிக்கொண்டிருக்கும் தெய்வப் பெண்களுடைய கண்ணேக்கங்கொண்டு இளைத்து மானினங்கள் மயங்கி யாங்காங்கே நின்றிருக்கும்.—எ-று. (6)

(இ-ள்) அம்மலை அழகிய அசோகு மா இவைகளில் பூத்த மதுமலராகிய பாணமும் வேடுவப் பெண்கள் படையும் கிளி குயில் இவைகளில் கூட்டமுமிருந்திருத்தலால் மன்மதன் பாசறைபோலுமிருந்தது.—எ-று. (7)

(இ-ள்) அம்மலையின் முடியில் பொருந்திய தேன் கூடாகிய பூரணச் சந்திரனிடமிருந்து சிந்தும் அமிர்த தாரையை அங்கொரு தேரை வாயைத் திறந்து அங்காந்து சுவைத்தல் சந்திரமண்டலமிருந்து சிந்தும் அமிர்த தாரையை உண்டுண்டுறங்காதுறங்கும் யோகிபோலுமிருந்தது.—எ-று. (8)

(இ-ள்.) குடத்திலுள்ள தேனைக்கூட்டி யுண்ணவேண்டி ஒரு வேடுவன் அப்பொழுதே காட்டு வள்ளிக்கிழங்கைப் பறித்தெடுத்தப் பள்ளத்தில் ஒரு மான் கன்றீன்று செல்ல அதை வள்ளியென்னுங் குழந்தைபோல் ஒரு வேடுவன் கையிலெடுப்பான்.—எ-று. (9)

(இ-ள்.) அம்மலையைச்சுற்றியுள்ள நகரமெல்லாம் செல்வமடையவேணுமென்கிற மனங்கொண்டு அருவிகள் பொன் மணலை யுள்ளே யெடுத்து மணமுடைய வேங்கைப் பூவாகிய பொன்னை மேலே போர்த்து வாரிக்கொண்டு ஓடும்.—எ-று. (10)

கார்தரு நித்திலம கழைமுத் தாபலம்
வார்கரக் கிரிக்கரி தந்த மௌத்திகம்
சீர்தரு மாசுணச் சென்னி மாமணி
ஏர்பெற விமைப்பன குன்றமா டெலாம். 11

சொல்லிய வளம்பல தோன்று குன்றான
வல்லிய வடிவொரு வரவிருத்த லால்
கல்லுரு வொழிந்தது கைலையா யது
செல்லய னூருவந் தவன் கட்டேறவே. 12

கண்டனன் பரவச னாகிகை குவித்
தெண்டகு திருவரு ளிணைய தென்பதும்
பண்டைநல் வினைதரு பயனுமேவர் தான்
விண்டுரைப் பவரென விமலர்ப் போற்றினான். 13

காணிய வெண்ணருந் தேவர் கூறதாம
பூணிகட் கெப்பரும போதமுற் றவோ
பாணியே யென்னமுற் பதத்தைத் தூக்கியே
வேணியே யென்னவால் வீசிபார்த் தன. 14

துள்ளின வோடின தொடர்ந்து காற்குழம்
பள்ளின பூமிமண் ணலைத்தி றைத்தன
துள்ளின முன்னுளத் தருக்கு லங்களை
யுள்ளின வுவகையா றுகைக்கர்ப் பாலரே. 15

வாளெழுந் தனவென மருப்பெழுந் தசெங்
தூளெழுந் தந்தரங் துலைத்த வக்கடை
நாளெழுந் தநில மேனடக் குமாறெனில்
காளைகள் விஞ்சுமேற் காடு கொள்ளுமே. 19

செந்நிறக் கருநிற சிறந்த வெண்ணிற
பொன்னிற மரகத நிறத்த பூணிகள்
அங்கிலைக் காடெலா மடர்ந்து போதரல்
பன்னிற துகிற்கொடி பறந்தபோ லுமே. 17

(இ-ள்) மேகத்திற் பிறந்த முத்தும் மூங்கிலிலுண்டாகிய முத்தும் நீண்ட கையுடைய காட்டானைகள் கொம்பிலுண்டாகிய முத்தும் சிறந்த பாம் பின் சிரோரத்தினங்களும் அழகுண்டாகும்படி அம்மலைபக்க மெங்கும் பிர காசிக்கும்.—எ-று. (11)

(இ-ள்) இப்படியாக சொல்லிய பல வளங்களும் விளங்கிய குன்றானது பரமேசுரன் புலி வடிவுகொண்டுவர வேண்டியிருப்பதால் கல்லென்கின்ற உருவ நீங்கி வெள்ளியங்கிரிபோல் இங்கே வந்த வணிகன் கண்ணில் விளங் கத் தோன்றியது.—எ-று. (12)

(இ-ள்.) அம்மலையைக்கண்ட வணிகன் பரவசனாகி இருகையும் சிர மேற்கூப்பி அளவுக்கடங்கா திருவருளின் வல்லபம் இன்னதென்பதும் பழ வினையின் விளைவும் யாவர் பகுத்துரைப்பவர்களென்று சிவபெருமானை நினை த்து வணங்கினான் —எ-று (13)

(இ-ள்) அம்மலையைக்கண்ட எண்ணுதற்கரிய தேவர்கள் கூறுகிய இட பங்களுக்கு எவ்விதமாகிய அறிவுபிறந்ததோ அறிகிலேம் இருகையேயென்று சொல்லும்படி முன்னங்காலைத்தூக்கி சடையேயென்று சொல்லும்படி வாலை வீசி சத்தித்தன.—எ-று. 14

(இ-ள்) துள்ளித்துடித்து வோடினபின்னே ஒன்றையொன்று தொடர் ந்து காலின் குழம்பால் தரையிலுள்ள மண்ணை வாரியிறைத்தலு முன்னே நிற்கின்ற மரக்கூட்டங்களை முறித்துத்தள்ளின ஆகையால் அவைகளுக்குண் டாகிய சந்தோடத்தை யாவர் சொல்ல வல்லவர்.—எ-று. 15

(இ-ள்) வாளாயுத மேலெழுந்து மின்னுவதுபோலும் வெள்ளிய கொம் புகள் விளங்கின செந்துளெழுந்து ஆகாயத்தை மறைக்க அந்த கடையூழி காலத்தில் உண்டாகிய காற்றுபோல் நடக்குமென்றால் காளைகள் மிரண்டோ டினால் காடுகொள்ளுமோ கொள்ளா.—எ-று. 16

(இ-ள்.) பஞ்சவர்ணமுள்ள எருதுகள் நெருங்கி யேகின்றவை எப்படி இருக்கிறதென்றால் அந்த நிலக்காடெங்கும் பலநிறமுடைய கொடிச்சீலைகள் பறப்பதுபோலும்.—எ-று.

மாட்டுடை மானவர் மயங்கி யேறெலா
மோட்டெடுத் தனவென வுன்னு முன்னமே
யீட்டமே கட்புலத் தெட்டு மட்டுமாய்
நீட்டமுண் மலைமறைந் தூற்ற நிற்கவே. 18

நாளொடு கோண்முதல் நாக மாறதாய்
நாளெலா நடந்தொரு நாக முற்றுமால்
தாள்கொடித் தூர்வகந் தாணி யாறதாய்
தாழ்கணைத் தொன்றினை தரணி முற்றின. 19

மலைவலம் வந்ததான் குழூஉவ னந்தமும்
தலையழைசத் தம்மலைச் சாரனின் றவந்
நிலையறிந் தவனதி ரேக நெஞ்சின்வே
றலையலை யரன்விளை யாட்டென் றெண்ணியே. 20

தந்தம ராரையும் விளித்திச் சாரலில்
நந்திகட் கணமெலா நின்றயான் பினே
வந்தன னீவிரும் போமென் மாற்றமே
முந்தின ருத்துள முகைப்பின் யாருமே. 21

சேயினஞ் செல்வுழிச் செலுத்தித் தூண்டுவான்
மேயினர் கோல்கொடு வீசியார்த் தனர்
வாயினுங் கூவினர் வம்மினென்று முன்
போயின ரீர்த்தனர் பாசம் பூட்டியே. 22

ஐயநீ வாவென வழைப்பர் பொய்யிலா
மெய்யநீ வாவென விளிப்பர் மற்றுமென்
செய்யினு மரனருள் சிமிழ்ப்புண் டாமெலா
மையமர் முடியுடை வனத்துலா யதே. 23

நிரைநிரை யாயமலை நெருந்தி திக்ககம்
நிரைந்தன செறிந்தன நின்ற வப்பசு
நிரையெலாங் கண்கணீர் நித்திலம் புவி
நிரைந்துக சுகமிகக் களித்தநெஞ் சவாய். 24

(இ-ள்.) அம்மாட்டை யோடிப்பின்னே செல்லுமாக்கள் மயக்கமடைந்து இடபங்களெல்லாம் ஓடுகின்றனவேயென்று நினைக்குமுன்னமே அவ்வெருது கூட்டங்கள் கண்ணுக்கெட்டாத தூரமோடி இவர்கள் நிற்க அந்நெடிய மலையில் மறைந்துவிட்டது —எ-று. 18

(இ-ள்.) அசுவனி முதலிய நாளோடு கிரகங்களுக்கு முதல்வனாகிய சூரியன் ஆகாயமே வழியாகக்கொண்டு ஒருநாள் முற்றினு நடந்து மகமேருவென்னும் ஒரு மலையைச்சுற்றுவன் தங்கள் காலாலே நடந்து இடபொதிமாடுகள் பூமியே வழியாகக்கொண்டு குறைந்த ஒரு கணநேரத்திலேயே இக்குன்றைச் சுற்றிவந்தன. எ-று. 19

(இ-ள்) அந்தமலையை வலமாகவந்த இடபக்கூட்டமெல்லாம் தலையாட்டிக் கொண்டுவந்து அந்த மலைப்பக்கமே நின்றிருந்தன அவையாவுங் கண்டிருந்த வணிகன் அதிசயங்கொண்ட மனதில் இது வேறொன்று சொல்லவேண்டுவதில்லை சிவபெருமான் திருவிளையாடலென்றே நினைத்து.—எ-று.

(இ-ள்) தம்முடைய பரிசனங்களை யழைத்து இந்த மலைப்பக்கத்தில் எருது கூட்டங்கள் நின்றிருக்கின்றன நீங்கள் அங்கே போயிருங்கள் யானும் உங்கள் பின்னாலேயே வந்துவிட்டேன் என்று சொன்னவுடனே அவர்கள் யாவரும் அவ்வெருதுகள் இருக்குமிடம் போய்சேர்ந்தார்கள்.—எ-று. 21

(இ-ள்.) அவ்வெருதுகளைத் தாங்கள் போகவேண்டியமார்க்கம் செலுத்தி ஓட்டும்பொருட்டு அங்கே சென்றவர் கையில் கோல்கொண்டு வீசி சத்தமுண்டாக்கி வாயால் வாருங்கள் எனக்கூவி வாராமையால் கயிற்றைப் பூட்டி அவைகளுக்கு முன்னேபோய் இழுத்தார்கள்.—எ-று. 22

(இ-ள்.) ஐயனே வாவென்று அழைப்பார்கள் உண்மைப்பொருளானவர்களே வாருங்களெனக் கூவுவார்கள் அப்படியல்லது வேறே எவ்விதஞ் செய்தாலும் பரமேசுரன் திருவருளால் கட்டுண்டு இவ்வெருதுகளெல்லாம் மேகம் படியு முடியுடைய அந்த வனத்திலேயே உலாவிக்கொண்டிருந்தது.—எ-று.

(இ-ள்) அந்த இடபக்கூட்டமெல்லாம் கண்களிலே ஆனந்த நீராகிய முத்துக்கள் பூமியில் சிந்த இன்பத்தால் களித்த மனமுடையதாகி வரிசை வரிசையாய் அம்மலையின் நிருதி மூலையில் நெருங்கி நிறைந்தன.—எ-று. 24

சங்கவெண் குழையணி யுடையன் றற்பரன்
சங்கர ளுயலத் தருமவெள் விடை
சங்கமுற் றனவென சைலநோக் கியே
சங்கமிட் டிருந்தன தரையிற் கோவெலாம். 25

கண்டனர் பரிசனர் கணிப்பில் வெந்துயர்
கொண்டனர் மீண்டனர் கோக்கற் போன்மென
மண்டனி னின்றன வந்துகா ணென
விண்டனர் தனதவிவ் வெல்லை மேவியே. 26

ஆதறிந் தவன்விரை நதசுவந் தூண்டியே
போதர மலையொரு புனிதலிங் கமாய்க்
கோதறு விடையெலாங் கோல நந்தியாய்
மாதரி சனமென வநதுகாண் டலும். 27

துப்புடைத் தேவியுஞ் சுதனுந் தானுமாய்
இப்புவிப் பதம்பட விரதனின் றிழிந்
தற்புத நோக்குழி யாதிசைவ மா
விப்பிர குருமுனம விளங்கத் தோன்றினன். 28

பாசவல் வினையறப் பறித்து மும்மல
மாசறக் கெடுத்தெனை யாண்ட சத்திபு
ரேசனை பூசனை யியற்று மந்தண
தேசிக வென்றுகண் டேத்திசெப் புவான். 29

சாமிநீர் வருகையென் றவப்பெருக் கமோ
பூமியுட லத்திது புனித மானதோ
நாமறி தரநவி லென்ன வந்தணன்
சாமிநிற் பிறிவினை தணிப்பவென் றனன். 30

ஈரமிக் குடையறும் மிதயப் பெற்றியைத்
தேருவர் யாவரே திருவருட் கொடெம்
மோரகம் போதர வுற்றவாற் றினிந்
நீரமுற் றனவவை நிகழ்த்தக் கேண்மதி. 31

(இ-ள்.) அவ்வெருதுகள் யாவும் சங்கக்காதணி யுடையவனும் தற்பரனு மாகிய சிவபெருமான் திருக்கோயிலிலுள்ள தருமவிடையின் கூட்டம்போல் அம்மலையைப் பார்த்தமுகமாய் கணைக்காலையும் முழங்காலையும் மடித்து இருந் தன.—எ-று. 25

(இ-ள்.) இப்படியிருப்பதை அப்பரிசனங்கள் கண்டு அளவில்லா துயர மடைந்து திரும்பிவந்து எ செல்வனே? எருதுகள் கல்லைப்போல் அசை வற்றிருக்கின்றன அவ்விடத்தே வந்து பாருமென்று சொன்னார்கள்.—எ-று.

(இ-ள்.) அதையுணர்ந்த வணிகன் குதிரையைத்தூண்டி தேரை நடத் திப்போக அம்மலையே ஒரு புண்ணியமுடைய சிவலிங்கமாகவும் குற்றமற்ற எருதுகளெல்லாம் அழகிய நந்தியாகவுந் தோன்றிய மகா தரிசனம்போல வந்து கண்டவுடனே.—எ-று 27

(இ-ள்.) துணைவியாகிய மனைவியும் மைந்தனும் தானுமாக தரையிற் பாதம்பட இரதத்தை விட்டிறங்கி அந்த அதிசயத்தைப பார்த்துக்கொண்டிருக் குஞ்சமயத்தில் ஆதிசைவராகிய பிராமண குருவானவர் தான் முன்னே காணும்படி வந்தார்.—எ-று 28

(இ-ள்.) பந்தமுண்டாக்கும் வலியவினைகள் முற்றுமறக்கெடுத்து ஆணவ காம மாயையென்னும் மலத்தின் குற்றநீக்கி யென்னையாட்கொண்ட சத்தி புரியீசனை பூசைசெய்யும் அந்தணனே எங்குருவே யெனத்துதித்து இது சொல்வான்.—எ-று 29

(இ-ள்.) என் தெய்வமே தாம் இங்கேவருதல் என்னுடைய தவப் பலனோ அல்லது பூமியிலுள்ள தலஙகளிலெல்லாம் இது சிறந்ததோ அடி யேன் அறியும்படி சொல்லென்ன பிராமணன் பொன்னுடையவனே? உன் னுடைய பிறிவையாற்றாமல் வந்தேனென்றான்.—எ-று. 30

(இ-ள்) அன்புடைய நமது இருதயத்தின் தன்மையை யாவர்தான் கண்டறிவார்கள் யானோ சிவபெருமான் உத்திரவின்படி எம்முடைய தேசம் போகவந்த வழியில் இவ்விதமாகிய துன்பம் வந்துவிட்டது அதைச்சொல்கி றேன் கேளுங்கள்—எ-று. 31

காற்றினுங் கடுகிய செலவிற் போயநம்
மேற்றின மென்னையில் விறும்புகூ ழுந்துள
நீற்றினும் பரமனைத் தெழுத்தினுந் தவப்
பேற்றினும் பெரியையெம் பிரியை யென்னவே. 32

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அந்தணாளன் றனதன்ற னாங்கை கேளா வவன் குணமுஞ், சிந்தை நெகிழ்வுந் திரம்பாத சிவத்தி னன்புங் கண்டிரக்கம், வந்தச்செல்வ னுடன் கொண்டு வனத்தக் காட்சி காண்டுமென, நந்திகணங்கண் முன் சென்றன் னலங்கண் டெடுத்து நவில்கின்றான். 33

சுமையாளாயில் விடை வந்த தென்ன நினையேல்சொல வென்றால், அமையா தெவர்க்குஞ் சிரென்னி லறையும்வேதா கமங்களெலாம், எமையா ளுடையா னருளதனா லதன்சீர் சுருக்கி யியம்புவனீ, கமையாய்க் கேட்டி யெனவரிய கபிலை மனுவை யுன்னினனால். 34

நித்தன்சிவன் சங்கான் பரமன் நிமலன் கருணை லயனுலகுக்
கத்தன் கத்த னொப்புவமை யில்லா னநாதி பாஞ்சோதி
முத்தன் பரிபூ ரணனேகன் முன்னோன் சருவ சங்கார
சித்தனோ ரூழியி லெல்லாஞ் செந்தீயாக்கச் சிந்தித் தான். 35

எங்குஞ் சிவமென்பது தேற்று மியல்பி னின்றவக் கணமே
அங்கி வடிவாஞ் சிவமயமா யாவுமான பெருஞ் சோதி
பொங்கி யண்ட வடுக்கெல்லாம் பொறிந்த பஞ்சின் பொதியென்ன
திங்க ளொளியுந் தினகரன்ற னொளியுந்தீயிற் றிகழ்ந் தனவே 36

அண்ட வகைக்கோ ரிந்திரனும் அயனு மாலுஞ் சராசரமும்
மண்டு கடலெழ் தீவேழு மரமே முட்டகுல கிரியும்
கொண்ட கருமமொவ் வொன்றின் கோலங்கால மைம் பூதம்
எண்டிக் கான்மா மனமென்ப தெவ்வா றென்ன லெற்றுக்கே. 37

நீற்ற வெல்லாம் வெண்ணீறாய் நின்று மொருவ னவனடனத்
தோற்றந் தன்னை சிவகாமி கண்டா ளல்லாத் துணையில்லை
போற்ற வென்ன வவனருளே பொங்கித் ததும்பி பூரணமே
தோற்ற வண்டம் புவனமெல்லாம் பண்டு போலத் தோன்றினவே.

(இ-ள்.) காற்றைவிட அதிவேகமாய்ச் சென்ற நமது இடபக்கூட்டங்கள் என்னகாரணத்தாலோ அறிகிலேன் இந்த மலையை வலம் வந்து இங்கே அசையாநிலை கொண்டிருக்கின்றனவே திருவெண்ணீறிடத்தும் சிவமூலமந்திரத்தும் தவத்தினாலும் பெரியவரே அடியேனுக்கும் அதிக பிரியமானவரே என்று வணிகன் சொல்ல —எ-று. 32

(இ-ள்) யந்த ஆதிசைவன், வணிகன் வருந்தியதைக்கேட்டு அவனுடைய நற்குணமும் மனதின் கசிவும் கெடாதிருக்கும் சிவநேசமும் பார்த்து தனக்கு கருணையுண்டாகி அவ்வணிகனைக் கூட்டிக்கொண்டுபோய் சோலையின் தன்மைக்காண்போமென்று எருதுகளின் முன்னேபோய் அவ்விடைகளின் பெருமையை யெடுத்துச்சொல்வான் —எ-று 33

(இ-ள்) இந்த எருதுகள் உனக்கு சுமையாளாக வந்ததென்று நினைக்க வேண்டாம் அவைகளின் பெருமையை சொல்லவேண்டுமானால் ஒருவருக்கு முடியாது என்றாலும் வேதசிவாகமங்கள் சொல்லியிருக்கின்றன அதில் கொஞ்சம் சுருக்கமாக நம்மையாட்கொண்டவனாகிய சிவபெருமான் கிருபையால் சொல்கின்றேன் நீ பொறுமையாகவிருந்து கேட்கக்கடவாயென்று கபிலை மந்திரத்தை நினைத்தான் —எ-று. 34

(இ-ள்) நித்தன் சிவன் சங்கரன் பரமன் நிமலன் கருணாலயன் உலகுக்கு அத்தன் கத்தன் ஒப்பு உவமையில்லான் அநாதி பரஞ்சோதி முத்தன் பரிபூரணன் ஏகன் முன்னோன் சருவசங்கார சித்துடையவன் என்று சொல்லும் சிவபெருமான் ஒரு ஊழியில் யாவும் அக்கினிமயமாகும்படி நினைத்தான் —எ-று. 35

(இ-ள்) எங்கும் சிவமயமென்று வேதசிவாகமங்கள் சொல்வதைத் தெரிவிக்கும் காரணமாக நின்ற அப்பொழுதே சருவாண்டங்களும் அக்கினி வடிவமாகிய சிவ சொரூபமாய் எல்லாம் தோன்றி பெரியஜோதியே பொங்கி மற்றுள்ள அண்டவடுக்குகள் முழுதும் பஞ்சுபொதிபோல எரிந்து சந்திரன் ஒளியும் சூரியன் ஒளியும் தீயின் ஒளியாகவே விளங்கின.—எ-று. 36

(இ-ள்.) ஒவ்வோரண்டங்களும் இந்திரன் பிரமன் திருமால் சராசரங்கள் நெருங்கிய எழு சமுத்திரம் எழு தீவு மகமேரு அட்டகுலாசலம் என்னும் அங்கமும் அவைகளுக்கு ஏற்பட்ட கருமங்கள் அவ்வவற்றின் வடிவம் அவைகளின் காலம் ஆகாயாதி பூதங்கள் அட்டதிசைகள் இயமானன் மனம் என்று சொல்வதெல்லாம் அவைகளை யுட்கொண்டுள்ள அண்டங்களே எரிந்ததென்றால் அவைகளின் கதியைப் பேசவேண்டுமோ.—எ-று. 37

(இ-ள்.) அவ்வக்கினியில் எல்லாம் வெண்ணீறாய் நீற்றுப்போயின அச்சாம்பராகிய மகா மயானத்து சிவபெருமான் ஒருவனே நின்றான் அவன் திருநடனக்காட்சியை சிவகாமியல்லாமல் கண்டவர் ஒருவருமில்லை பின்னே யாவும் உண்டாக்கி காக்கவேணுமென்கின்ற அவன் அருளே மீட்டும்பொங்கி அதிகரித்த பரிபூரண வியாபகத்தால் சருவாண்டம் புவனங்கள் எல்லாம் பழமையினும் வளத்தோடு தோன்றின.—எ-று. 38

பொடியா டியத்தன் றிருமேனி பூத்தவண் ணத்தறி குறியாய்
படியா ரான்மகோ டியெலாம் பணிந்து கைலைப் பதம்பெறவே
நெடியோ னாதிதே வர்களாற் கடைந்தகிர நிதிமுக மாய்
மடியா வண்ணப் பசுவந்து பிறக்கச்செய் தான்மா தேவன். 39

(இ-ள்.) பரமேசுரன் நீறுபூத்த தனது திருமேனியின் வடிவையறியும் குறியாய் இவ்வுலகிலுள்ள ஜீவர்களெல்லாமதரித்து கைலாயபதவி பெறும் பொருட்டு திருமால் முதலிய தேவர்களால் கடைந்த பாற்கடலில் கெடாத தன்மையுடைய ஒரு பசு வந்து பிறக்கும்படி திருவருள் பாலித்தான்.—எ-று.

உண்டாஞ் சுரபி தனைக்கைலை தருமவிடைக்கோ ருரிய மனைப்
பெண்டா யிருத்தி யதன்பாலிற் பிறந்த வானைந் தானுதி
யெண்டே வதைகட் கபிடேக மினிய நைவேத்திய முதலாற்
றண்டாச் சிறப்பா நோன்புமகந் தானந் தவங்கட் காரமுதாய். 40

(இ-ள்.) இப்படி பிறந்த பசுவை வெள்ளியங்கிரியிலுள்ள மழவிடைக்கு நாயகியாக விருத்தி அதனிடமாகப்பிறந்த பசுவினத்தின் பால் தயிர் கோமயம் கோசலம் என்னும் ஐந்தாலும் சிவபெருமான் முதலிய தெய்வங்களுக்கெல்லாம் அபிடேக நைவேத்திய முதலியவும் கெடாத சிறப்புடையதாய் விரதங்கள் யாகங்கள் தானங்கள் தவங்கள் ஆதிய எல்லாவற்றிற்கு அமிர்தமாகி.—எ-று. 40

இன்றி யமையாப் பொருளாகி யிருந்த சுபிலையுருப் பனைத்தும்
*கொன்றைச் சடையெம் பரமேட்டி யாதிதேவ கூட்டமெலா
மன்றன் மலைமான் திருமடந்தை முதலாந் தேவ மாதர்களும்
துன்றுங் கடலுங் கிருதனலு மாய வாற்றூற் றூய்மையவே. 41

(இ-ள்.) பசுவானது இல்லாமல் ஒரு காரியமு நடவாத பெரும்பொருளாகி இருந்த அதன் சரீரமுழுதும் கொன்றைமலர் சூடிய பரமேசுரன் முதலாகிய தேவகூட்ட மெல்லாமும் மணம் பொருந்திய மலைமகள் இலக்குமி முதலிய தேவப்பெண்களும் நெருங்கிய சமுத்திரம் ஏழும் இருபத்தோரி-யாகமும் இவையெல்லாமாயிருந்ததால் பரிசுத்தமுடையது.—எ-று. 41

---

* சிரசிலே சிவபெருமானும், கொம்புகளின் அடியிலே பிரம விட்டுணுக்களும், அதன் மத்தியில் கோதாவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களும், நுனியில் சராசர உயிர் வருக்கங்களும், நெற்றி நடுவே சிவசத்தியும், மூக்கினுள்ளே வித்தியாதரரும், இரண்டு கன்னங்களி னடுவே அசுவனி தேவர்களும், இருகண்களிலேயும் சந்திர சூரியர்களும், பற்களிலே வாயுதேவனும்,

நாவிலே வருணனும், ஊங்காரமுள்ள நெஞ்சிலே கலைமகளும், மணித்தலத்திலே இயமனும், இயக்கர்களும், உதட்டிலே உதயாத்தமன சந்திதேவதைகளும், கழுத்திலே இந்திரனும், முரிப்பிலே துவாதசாதித்தர்களும், மார்பிலே சாத்திய தேவர்களும், நான்கு கால்களிலும் அநிலன் என்னும் வாயுவும், முழந்தாள்களிலே மருத்துவரும், குழம்பு நுனியிலே சர்பங்களும் அதனடியிலே கந்தர்வர்களும், அதன் மேலிடத்திலே அரம்பை மாதரும், முதுகிலே உருத்திரரும், சந்துகடோறும் அட்டவசுக்களும், அரையிலே பிதிர் தேவதைகளும், யோனியிலே சத்தமாதர்களும், குதத்திலே இலக்குமிதேவியும், வாலிலே சர்ப்பராஜாக்களும், வாலின் மயிரிலே ஆத்திகனும், மூத்திரத்திலே ஆகாய கஙகையும், சாணத்திலே யமுனை நதியும், உரோமங்களிலே மகா முனிவர்களும், முலையிலே சகல சமுத்திரமும் சாடராக்கினியிலே காருகபத்தியமும், இருதயத்திலே ஆகவனியமும், முகத்திலே தக்ஷணாக்கினியமும, எலும்பிலும் சுக்கிலத்திலும் யாகத்தொழின் முழுதும். எல்லா அவயவங்களிலும் கலங்கா நிலையுள்ள கற்புள்ள மாதரும் பொருந்தியிருபபார்கள்.

கூறு கமங்கள் விதிநல்லா வுபலாளன கோமயங் கொள்ளப்
பேறுங் கபிலை மனுவைந்து பேசிவணங்கி மூவகை யாம
ஆறு யேறனைம முகமனுவா லைந்து சலையா லங்கியிலே
நீறு நீற்றை முக்கற்பத தேகந்தி தரித்த னெறியாமால். 42

(இ-ள்.) சிவாகமங்கள் சொல்லிய விதிப்படி நல்ல பசுவின் தூய்தாகிய கோமயத்தை யெடுக்கவேண்டி நற்பேறுடைய கபிலைமந்திரம் ஐந்து சொல்லி சாந்திகமாதிய மூவகையாகக்கொண்டு பஞ்ச பிரம மந்திரத்தாலும் கலா மந்திரத்தாலும் அக்கினியிலே நீறுகிய திருநீற்றை மூன்று கற்பவிதியால் எடுத்து தரித்தல் நன்மையாம்.—எ-று. 42

நல்லா என்பது, கன்று பிரசவித்து பத்து நாள் சூதகமுடைய பசு, கன்று பிரசவியாத கிடாரி, வியாதியுடைய பசு, கிழபபசு, தன் கன்று சாவப் பெற்ற பசு, மலட்டுப்பசு, மலந்தின்னும் பசு ஆகிய இப்பசுக்களல்லாத மற்றய பசுக்களே நல்லனவாம், அவைகளினும் பிராமணருக்கு வெள்ளைநிறப்பசு, க்ஷத்திரியருக்கு செகப்புநிறப் பசு, வைசியருக்குப் பொன்னிறப் பசு, சூத்திரருக்குக் கருநிறப் பசுவும் உத்தமம், அகப்படவில்லையேல் இவ்வரையறையின்றியுங்கொள்ளலாம்,

உபலாளன கோமயம் என்பது, பங்குனி மாதத்திலே பசானமென்னும் நெற்றாளை மேய்ந்த பசுக்களிடத்திலே, அட்டமி பௌர்ணமி, சதுர்த்தசி என்னும் திதிகளில் கோமயங் கொள்ளல்வேண்டும், கொள்ளுதற்கு முன்னர் கபிலை மனுவாறும் பேசியென்பதனுல், ஓம் கபிலே நந்தே நம ஓம் கபிலே

பத்திரே நம ஃ. ஓம் கபிலே சுசீலே நம ஃ. ஓம் கபிலே சுரபே நம ஃ ஓம் கபிலே சுமஸோ நம ஃ என்னுமந்திரங்களில் ஏற்றமந்திரத்தைக்கூறி வணங்கி பாற்கடற்கண் தோன்றி ஆன்மாக்களின் துக்கத்தை போக்கும் பயோதரத் தையுடைய மாதாவே இதனை ஏற்க என்று ஒருபிடி புல்லுக்கொடுத்து கோ சாவித்திரி தோத்திரஞ்செய்து கொள்ளக்கடவர், தான் ஏற்க சென்றபசு கரு நிறமுடைத்தாயின்முதலாமந்திரத்தையும் கருமைசேர்ந்த பொன்னிறமுடைத் தாயின் இரண்டா மந்திரத்தையும் புகைநிற முடையதாயின் மூன்றுமந்திரத் தையும் வெள்ளைநிறமுடையதாயின் நாலாமந்திரத்தையும் தாமிர நிறமுடைய தாயின் ஆறுதிக்கணுள்ளமந்திரத்தையும் சொல்லக்கடவர்.

மூவகையாம் என்பது, சாந்திகம் பௌட்டிகம் காமதமென மூவகைப் படும், அவற்றுள் சாந்திகமாவது, கோமயமிடும்போது பசுவின் பிற்றட்டிலே கைவைத்தேற்பது, பௌட்டிகமாவது சாணம் பூமியில் விழுமுன் தாமரையி லேற்பது காமதமாவது பூமியில் விழுந்தபின் கீழ் மேல் தள்ளியெடுப்பது இவற்றுள் சாந்திகம் உத்தமம் பௌட்டிகம் மத்திமம் காமதம் அதமம், என வறிக

முக்கற்பம் என்பது, கற்பம் உபகற்பம் அனுகற்பம் என்பனவாம் கற்ப மாவது முன்னர் விதித்த பசுக்களுள் ஒன்றனிடத்து பூமியில் விழுமுன் ஓம் சத்தியோ சாதாய வென்று மந்திரத்தை யுச்சரித்து தாமரையிலையி லேற்ற கோமயத்திலே பால் ஐந்து பலம் தயிர் மூன்று பலம் நெய் இரண்டு பலம் கோசலம் ஒரு பலம் சேர்ந்த கவ்வியத்தை ஓம் வாமதேவாய நம ஃ வென்றுவார்த்து, ஓம் அகோராய நம ஃ வென்று உச்சரித்து மெல்லப்பிசைந்து உருண்டைபண்ணி சம்பாநெற் பதரை விரித்து அதன்மேல் ஓம் தற்புருடாய நம ஃ வென்று வைத்து ஓமாக்கினியிலேனும் நித்தியாக்கினியிலேனும் தக னஞ்செய்தல் வேண்டும், அன்றைக்கே எடுத்து உருண்டைபண்ணி உலர்த்தி தகனஞ்செய்வது உத்தமோத்தமம் அவ்விபூதி நன்றாய் விளைந்ததறிந்து கரு கல் முதலியவை தள்ளி நல்லனவற்றைப்பார்த்து ஓம் ஈசானாய நம ஃ வென்று உச்சரித்து எடுக்ககடவர் கருநிற விபூதி வியாதிபுண்டாக்கு மாகலானும் செந்நிற விபூதி புத்தியைப்போக்கு மாகலானும் புகைநிற விபூதி ஆயுளைப் போக்குமாகலானும் பொன்னிற விபூதி சம்பத்தைகெடுக்கு மாகலானும் அவற்றை யெல்லாம் போக்கி வெள்ளைநிற விபூதியே கொள்ளக்கடவர்.

அநு கற்பமாவது, சித்திரைமீ த்திலே பசுக்கள் நிற்குமிடத்திலே போய் உலர்ந்து கிடந்த கோமயங்களை ஓரிடத்திலே சேர்த்து உரலிலேயிட்டு தூளாக்கி அதிலே கோசலத்தை ஓம் வாமாய நம ஃ வென்று வார்த்து கையி னாலே கலந்து ஓம் அகோராய நம ஃ வென்று நன்றாகக்கலந்து பிசைந்து

உருண்டைசெய்து பதரை விரித்து ஓம் தற்புருடாய நம: வென்று அதன் மேல் வைத்து ஓமாக்கினியினாலே தகனஞ்செய்து ஓம் ஈசானாய நம: என்று எடுத்தணிதல் வேண்டும்.

உபகற்பமாவது கோமயங் கிடைக்காவிடத்து காட்டிலே மரத்தோடு மரமுறைந்து தானே வெந்து விழுந்து சாம்பரானதாவது செங்கல் சூளையில் விளைந்த சாம்பலையாவது எடுத்து பஞ்சகவ்வியம் வார்த்து வாமதேவ மந்திரத் தால் பிசைந்து அகோர மந்திரத்தால் உருண்டைசெய்து பதரைப்பரப்பி அதன்மேல் தற்புருட மந்திரத்தால் வைத்து தகனமாக்கி ஈசான மந்திரத்தா லெடுப்பது

அன்றியும் அகற்பமுமுண்டு அது இவைகள் கிடைக்காவிடில் இடிவிடத் திலுண்டாகிய திருநீறும், மலையினுச்சியினும் பூமியினும் யாதொரு காரணத் தினால் விளைந்த திருநீறும் தரிக்கலாம் அவைகளை பஞ்சபிரமமந்திரத்தாவது சிவமூல மந்திரத்தாலாவது தரித்தல் வேண்டும்.

பசிதஞ் சாரம் விபூதிதிரு நீறிரக்ஷை பசுமமெனா
வுசித நாமம் பெற்றதனை யுத்தூளனமே சிவ மநுவால்
பிசிதஞ் சேர் முப்புண்டரமே பேணி யுலக முத்தலைய
நிசித வேலோ னஞ்சரண நீழ லடையு நித்தியமே. 43

(இ-ள்.) பசிதம் சாரம் விபூதி திருநீறு இரக்ஷை பசுமம் என்கின்ற மேலாகிய திருநாமம்பெற்ற அதனை உத்தூளனமாகவும் திருபுண்டரமாகவும் பஞ்சபிரம மந்திரத்தாலும் அங்க மந்திரத்தாலும் இவ்வுலகர் அணிந்து கூரிய சூலாயுத பாணியாகி சிவபெருமான் திருவடி நீழலாகிய நித்தியபத மடைவர். — எ-று.

அத்தா லுலக மரசுகுடி யறமா தியபின் றியங்குவதும்
மெய்த்தா னென்றே யானுயர் விசார சருமர் வீடுற்றார்
ஒத்தாப் பின்னைத் திரிந்தூரலிற் கட்டுண் டாயர் மாதர்களால்
மத்தா லடியுண் டொருகண்ணன் மகிழ்ந்த தாவின் சிறப்பே. 44

(இ-ள்.) அதனால் உலகமும் உலகத்துள்ள அரசும் அறம்பொருளின்பம் வீடென்கின்ற புருஷார்த்தங்களும் நடப்பதும் உண்மையென்றே நினைத்து ஆனாய நாயனார் விசாரசருமர் ஆமேய்த்து பதமடைந்தார் மதமொத்துப பசு நிரைப்பின்னை திரிந்து அப்பசுவின் நவநீதமுண்டு இடையர் பெண்களால் உரலில் கட்டப்பட்டு மத்தாலடியுண்டு கிருட்டிணன் மகிழ்ச்சியடைந்ததும் பசுவின் சிறப்பு நோக்கியல்லவோ —எ-று. 44

அவ்வா வேற்றினினமிந்த வகிலத் துறுமா னவர் துணையாய்
செவ்வே நிற்றி யெனவரனு ராஞ்ஞையாய திரு வருளால்
இவ்வா றுற்ற தீதறியா ரெண்மாடென்ப ரிவை யெல்லாம்
சைவா சார முடையோய் நீ சாமியென்றே சிந்தித்தே. 45

இற்றைக் கிந்த மலைச்சார லிடபத் துணையா யிருந்திரவு
முற்றக் கழிந்த பின்னருளெம் முடிவு காட்டு மதுகண்டு [யரை
பெற்றம் போமேற் போமென்னப் பெரியோன மறைய விவன்று
கற்றைக் கதிரோ னேக்கஞ்சி மறைந்தான் மேற்பாற கண்பொத்தி

நெஞ்ச வஞ்ச மில்லாத நேய னென்றுந் தோன்றாமல் [யாய்
அஞ்சி நின்றான் செருக்கிரிப்பேற றைந்தாண் பேழ்வாய் வெம்புலி
பஞ்ச பாணன் பகையானேன் வந்து பாலன் றனைக்கவ்வி .
விஞ்சி யாடும் விளையாட லுரைத்து மென்றான் வேன்முருகன் 47

திருச்சிற்றம்பலம்.
செருக்கிரிபடல முற்றிற்று.
ஆக திருவிருத்தம் உசரு.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# கருப்புலிப்படலம்.

கலி விருத்தம்.

முகைவிரி யணநறை முளரியி லுறைவோன்
மகவென வவனக மலரொழு பெரியோய்
பகவிலை யுறைவது பதலைய தெனவே
யகநெகு தனதன வவதியி லெண்ணியே. 1

தன்னொடு வருபல தமர்படை கொடுமா
பொன்னரண் மனையென புகழ்திணி துகிலால்
மன்னொரு புதுமனை வணைதர வதிறன்
மின்னொடு மகனொடு மேவினன் னினிதே. 2

இ-ள்.) அந்த பசுவின் ஏறுகிய கூட்டம் இந்த உலகத்துள்ள மக்களுக்கு துணையாய் செவ்வியதாக விருவென்று பரமேசுரன் ஆஞ்ஞையாகிய கிருபா நோக்கத்தால் இவ்விதமாக வந்திருக்கின்றது இது அறியாதவர்கள் என்மா டென்று அபிமானிப்பர்கள் அபபடிக்கல்லாமல் சைவசமய சாரமுணர்ந்த செல்வனே நீ இவைகளை சாமியென்றே நினைந்து.—எ-று. 45

(இ-ள்.) இன்றையதினம் இந்த மலையின் அடிவாரத்திலேயே யிருந்து இந்த எருதுகளையே துணையாகக்கொண்டு இராப்பொழுது நீங்கினபின் திருவருள் எவ்வழி காட்டுமோ அதுகண்டு இடபங்கள் நடந்து போமேற் போவீராகவென வந்த வந்தணன் தோன்றியவண்ண மறைந்தான் அப்பொழுது இந்த வணிகன் இன்றிராப்படுந் துயரத்தைப் பார்ப்பதற்கு பொறாதவனாய் சூரியன் கண்ணை கையால் மூடிக்கொண்டவன்போல் அத்தகிரியில் மறைந்தான் —எ-று. 46

(இ-ள் ) மனதில் யாதொரு கபடமுமில்லாத அன்பன் தனக்கு முன் பின் ஒன்றுந்தோன்றாமல் பயந்து நின்றான் என்கிற செருக்கிரி மகிமை யுரைத்தோம் இனி பெரிய வாயையுடைய வெய்யபுலியாய் மலர்க்கணை யுடைய மதன் பகைவனாகிய பரமசிவன் இவ்வணிகன் பாலனைக் கவ்விக் கொண்டு போய் செய்யுந் திருவிளையாடல் சொல்வோங் கேட்பாயாகவென்று வேலேந்திய முருகநாதன் கூறினான்.—எ-று. 47

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கருப்புலிப்படலம்.

—o—

(இ-ள்.) பூவரும்பு கட்டுடைந்த வாசமுள்ள தேனுடைய தாமரை மலர் வாசனாகிய பிரமன் பிள்ளையென்ன அவன் மனமாகிய தாமரை மலரிற் பிறந்தவனாகிய வசிட்டனே கேள்? மனந்தளர்ந்த செல்வன் பொழுதோ போய் விட்டது தங்கவேண்டிய இடமோ மலைச்சாரலாயிருக்கிறது என்று அவ்விடத்தில்நினைத்து.—எ-று. 1

(இ-ள்.) தன்னோடு கூடிவந்த பரிசனங்களைக்கொண்டு பெரிய பொன்னால் செய்த அரண்மனைபோல் சிறந்த திண்ணிய சிலையால் பொருந்திய ஒரு புதிய வீடு செய்வித்து அவ்வீட்டில் தன் மனைவி மகனுடன் போய்புகுந்தான் —எ-று. 2

பாசொளி தருமா கதமணி பலகை
யாசன மென்மா லணையத னகமே
தூசணி பெறவிரி துகிலிட மெனவே
வீசினன் மனைவியு மதலையு மிளிர. 3

பாம்பின துயிர்மணி பகலென வொருபால்
தாம்பொலி தருமொரு படாணி மணிகள்
ஆம்பல முகமிக வணிபெற வதனை
யோம்பரு நெறிவயி னுரமுள ருலவ 4

பரிசன ருரைதர படமனை யணியாய்
விரிசினை யலர்தரு மிடைபொழி லிடையே
புரிசெறி யவரவர் புடையா ரெனவே
வரிசையி லமர்தர மலர்விழி யுளராய். 5

ர யினுமுய ரறுமுக னிடமாய
முந்தின மலைவள முதிரரு விகள்சார்
சந்தன மரனொடு தருமண மகலா
நந்தன வனமொரு நகரணி பெறவே. 6

கந்தர மணிவிடக் கொடுவரி கணிமேனர்
சிந்துர நபமுறை தேற்றின குடபால்
வந்தா னருடரு மருளறு மெனுமா
சந்திரன் கலையொடு சார்ந்தவன் குணபால். 7

மங்கிய முகமினி வருர்வரு மெனுமா
பங்கய வலரது பரிவொடு குவிய
பொங்கிய சுகமெழு பொழுதுறு மெனுமா
அங்கய வலிமல ரலர்வன மிகவே. 8

உலகிய லறுபர நிலைபம ருறவோர்
நிலைபல குருகொடு மிருகமு நிலவ
மலவிரு ளினிதெனு மதியிலர் கதிபோல்
அலைநர்கள் பறவைகள் மிருகமு மலைய. 9

(இ-ள்) பசிய கிரணங்காந்து மாகத மணியால் ஆக்கிய பலகை ஆசனம் பரிக்கைக்கற்கள் நிறைந்துள்ள அதனுள்ளகத்தில் வத்திரதைதையே அழகு பொருந்தவிரித்த சயனபஞ்சணையாக தன் பிள்ளையும் பெண்சாதியுமிருக்கச் செய்தான் —எ-று. 3

(இ-ள்) சர்ப்பத்தின் சிவாத்தினம் சூரியனைப்போல ஒரு பக்கத்தில் விளங்கும் ஒளிவிடும் வரிசையும் மற்றய இரத்தினங்கள் அதற்கு சூழ்வாவுள்ள விடங்களில் வரிசை வரிசையாக விளங்க அந்த மனையைக்காக்க வாய்தன் முகப்பில் தோள்வலமுள்ள சில வீரர் உலாவிக்கொண்டிருக்கவும்.—எ-று. 4

(இ-ள்.) மற்றய பரிசனங்கள் இருக்கவேண்டி படாம் வீடுகள் நிரைநிரையாய் விரிந்த கிளைகளையுடைய பூமரங்கள் நெருங்கிய சோலையின் நடுவில் உண்டாக்கி நெருங்கிய ஒவ்வொருவரும் பக்கங்களிலேசூழ்ந்து மதில்போலுள்ள விடத்தில் உறங்காத்தன்மை யுடையவாாயமர்ந்திருக்க.—எ-று. 5

(இ-ள்.) பஞ்சதிணைகளினும் உயர்வாகிய அறுமுகப்பெருமான் வீற்றிருக்கப்பெற்று முற்பட்ட குறிஞ்சியிலுண்டாகிய அருவிகள்பாயும் சந்தன மாத்துடன் மற்றய தருக்களின் வாசநீங்காத சோலையானது ஒருநகரம்போல் அழகுசெய்ய.— எ-று. 6

(இ-ள்.) கண்டத்திலே அழகிய விடமுடைய புலியின் கண்போல் செவ்வானம் மேற்றிசையில் தோன்றினது சீழ்த்திசையில் இப்போதுள்ள மயக்கத்தை விட்டுவிடுங்கள் பாமேசன் வந்து கிருபை பாலிப்பன் என்பதுபோல் அமிர்த கிரணத்தோடும் சந்திரன் உதயமானான்.—எ-று. 7

(இ-ள்.) வாடியமுக மிப்போதுண்டாகு மென்பதுபோல் தாமரைமலர்கள் வருத்தத்தோடு குவிய, நாளையுதயத்தே அதிகரித்த ஆனந்தமுண்டாகு மென்பதுபோல் அழகிய கயங்களில் அல்லிமலர்கள் மலர்வன.—எ-று. 8

(இ-ள்.) உலகத்தாசையற்று சிவநிலையில் அமர்ந்துள்ள சிவயோகிகள் போல் அனந்தம் பக்கிகளும் மிருகங்களுமடங்க, மும்மலச்சேட்டையில் ஆடலே சுகமென்றிருக்கும் அறிவிலிகள்போல் பேய்களும் சிலபறவைகளும் மிருகங்களும் அலைய.—எ-று. 9

நன்மையி லொருவினை நனிவரி லறியாப்
புன்மைய தறுமென விருள்தா பொலிய
பின்மய லறவற நெறிபெரு கியபோல்
பன்மையி லவன்முடி பனிமதி யொளிர. 10

வேறு கலிவிருத்தம்.

பாத்திர முகப்பவொரு பாரதட நேரா
தாத்திரியி லுன்னுத றகாதுபர மேசன்
கேத்திர மிதாமிடப கேதன சிவன்றன்
ராத்திரி யிதாமென நவின்றன ரிருந்தார். 11

மைப்படி விழிப்பனியு மைந்தனையு மாங்கே
துப்புடைய தூசனை துயிற்கொள விதித்தே
இப்பட மனைக்கணு ரிருஞ்சிலை யகத்தே
இப்பரி லருந்தவ னிருந்தன னிருப்ப. 12

நண்ணிய தெலாம் பரனடத்து விளைவென்றே
எண்ணுமவ ரேவரெனினு மவர்க ளெல்லாம்
அண்ணலடி யாரவர்க ளாற்றுகரு மத்தாம்
புண்ணிய மிகும்பொழுது பொங்குமரு ளென்ப. 13

வெள்ளிமலை மீமுடி விளங்குபவ ரேனும்
எள்ளிலெணெ யாயுயிர்க ளொங்குநிறை யீசன்
கள்ளிருளி னுடல்செய னன்றென நினைந்தே
தெள்ளிமுக மைந்தனொடு செப்புவ னிதன்றே. 14

தந்திமுக குருடல் சுஃட்டுமெயி றேந்து
நந்தன முனிப்படிவ நண்ணுதி யிகத்தோர்
விந்தமுள யாமுமொரு வெய்யபுலி யாகி
வந்திடுவ லேகரிய வாணிப னிமித்தம். 15

சிவானு பக்கமது செல்லுமமை யத்தே
காவது நமக்குபதி பக்கமது கண்டாய்
நாவரசை கவ்விய நலத்த விளையாடல்
ஆவதிது காணென வரைத்துநி லெடுத்தான். 16

(இ-ள்) தீவினை மேலிட்டபோது ஒருவனுக்கு அறியாமையாகிய அஞ்ஞான மதிகரிப்பதுபோல் இருளுண்டாக, பின்னே தீவினைக்கெடச்செய்த சிவபுண்ணிய மேலிட்டபோது ஒருவனுக்கு ஞானம் விளங்குமதுபோல் ஒருமை பன்மை யில்லாதவன் முடிசூடிய பாணிலா ஒளிசெய்ய —எ-று. 10

(இ-ள்.) இன்றிரவிலோ நமக்கு ஒரு கூடத்தில் மூகபப ஒருகுளமுங் காணப்படாத இம்மலையில் உண்ணுதல் கூடாது; இதுவே சிவபெருமானது தலம் இதுவே இடபக்கொடியுடைய சிவனது இராத்திரியுமிதுவே.யென்று சொல்லி ஆகாரமின்றியிருந்தார்கள்.—எ-று. 11

(இ-ள்) மைதீட்டிய கண்ணுடைய நாயகியையும் மகனையும் அவ்விடத்தோர் சிலையணையில் நித்திரைசெய்யும்படிசெய்து இந்த படாம்வீட்டில் உள்ள ஒரு கல்லின்மேல் வணிகனிருந்தான் அவனப்படியிருக்க.—எ-று 12

(இ-ள்) தனக்கு வந்ததெல்லாம் பரமேசன் திருநடனத்தின் திருக்கூத்தென்றே நினைபபவர்கள் எவர்களானாலும் அவர்கள் யாவரும் சிவனடியார்களே அவர்கள் செய்யும் நற்கருமங்களால் புண்ணியமுண்டாகும் அதனால் சிவானுக்கிரகம் வரும் —எ-று 13

(இ-ள்.) கைலாயகிரியில் எழுந்தருளியிருக்கின்றதொன்றாலும் எள்ளுக்குள் எண்ணெபோல் சீவகோடிகளிடத்தில் நிறைந்துள்ள பரமேசன் இன்றிரவில் வணிகனிடம் திருவிளையாடல் செய்யவேண்டுமென்று நினைத்து யானைமுகப்பிள்ளையோடு இது சொல்வான்.—எ-று. 14

(இ-ள்) கயமுகாசுரன் உடலை வாட்டிய கொம்பேந்திய மகனே? நீ யானைக்கன்றின் வடிவுகொண்டு வாக்கடவாய் பூமியில் ஒரு குன்றிருக்கிறது அதற்கு நாமும் ஒரு புலியாகி வந்திடுவேம் அருமையுள்ள வணிகன்பொருட்டு போவாய்.—எ-று 15

(இ-ள்) சகசீவர்கள் அணுபக்ஷமுடிவில் அவர்களைக்காட்பது நமது சமபு பக்ஷமாதலால் திருநாவுக்கரசை விழுங்கிய ஒரு நல்ல திருவிளையாடல்போல் உண்டாகின்றது பாரென்று அரையிலுள்ள புலித்தோலை கையிலெடுத்தான். —எ-று. 16

தொட்டதொரு தாருவன தூயதவ ரெல்லாம்
கட்டமுற வாடலரு ணக்கனை சினந்தே
மட்டறு வழற்கணெழு மந்திர முரைத்தே
விட்டகொடு வல்லிய வியன்படிவ மான. 17

கோணிய நகத்தது கொலப் பதரிவீசும்
பாணியது வெண்பிறை பலிற்பெரிய தங்கே
காணிய வுயிர்த்தொகை கலக்கமுறு மாறு
சேணியலை பாய்தரு சினத்தது வுறுத்தே. 18

பொங்கிய கனற்குறி பொருந்துபு பொலிந்தே
வெங்கணெ ரிரண்டையும் விழிப்பது வுரைக்கின்
பங்குனி மதிப்பகலி னுச்சிபரு வத்தே
செங்கதி ரிரண்டுடைய தேலவை பொருந்தும். 19

பாதுவரு முன்னெடிய வால்படிய வாடும்
ஞாயமென வாடிய நடத்ததுரு சித்ர
காயமுள தைந்துவண காத்திர முடைத்து
வாய்வழி புலால்கமழும் வாகையுள தாமால். 20

இத்திர மெழுந்தபுலி யீசனை வணங்கி
அத்தவெனை யென்செய வழைத்ததெவை யென்ன
புத்தனொரு பாலகனை பற்றியவ னஞ்ச
அத்தியொடு போதிநக தாலய மிருத்தி. 21

என்னுமொழி யுற்றவய மாவவ னெழுந்தே
முன்னவனு முன்செலு முகத்தொரு கணப்போ
தன்னமலை மேவியத னுச்சியி லமர்ந்தே
பின்னிது செயுங்கய முனித்தனை பிறித்தே. 22

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அந்தா முகப்பது படரென வெடிப்பசுர
ரஞ்ச தரு வஞ்சமதிர
கந்தா கருக்கலைய திக்கொடு திகந்தகதி
மாரமதி வேறு பெயா
தந்திமுக மாமுனியு முக்திபினிதே றெறவி
தருக்குமெழு காலி னுரமாய்
விந்தமுடி கின்றகொடு வேங்கைபினை கற்சனை
விடுக்கு மொருபேரொலியரோ. 23

(இ-ள்.) கையில் தொட்டது தாருவன முனிவர்கள் தாங்கள் அபசெய மடைய அருளாடலுடைய சிவன்மேல் அளவில்லா யாகாக்கினியில் மந்திர மோதிவிட்ட கொடிய ஒரு புலி வடிவமானது.—எ-று. 17

(இ-ள்.) வளைந்த நகமுடையது கொல்ல விரைந்து வீசும் முன்காலை யுடையது வெள்ளிய பிறைபோல் பல்லுடையது கண்ட சீவர்கள் பயங்கொள் ளும்படி தூரத்தே கோபித்து பாயும் அதிகோபமுடையது.—எ-று. 18

(இ-ள்.) சுவாலித்த தீக்குறியுண்டாய் அவை அதிகரித்த வெவ்விய கண்கள் இரண்டையும் விழிப்பதை சொல்லுமிடத்து பங்குனிமாதத்தில் நடு பகலில் இரண்டு சூரியர் உண்டாயின் அக்கண்களுக்கு சரியென்று சொல்லக் கூடும்.—எ-று. 19

(இ-ள்.) ஒரு சீவர்களைக்கண்டு பாயவருமுன்னே வாலை பூமியில் அடித் துக்கொண்டிருக்கும் ஒரு காரணம்போல் நடனமுடையது அதன் சித்திர காயமாகிய வடிவம் பஞ்சவர்ண்ண முடையது, வாயின் வழியாக புலால்நாற்ற நாறும் வீரமுடையது.—எ-று. 20

(இ-ள்.) இப்படியாக உற்பவித்தெழுந்த புலியானது பரமேசனை சரண மடைந்து ஸ்வாமி அடியேனை யாதுசெய்யும்படி யழைத்தது என்ன சிவபெரு மான் பூலோகத்தில் நமது பத்தனுடைய பிள்ளையை அவன் பயங்கொள்ளும் படி வாயிற்கடித்து நமது சிவாலயத்தில் இருப்பாயாக இந்த யானைக்கன்று டனே போவாய்.—எ-று. 21

(இ-ள்.) என்று கூறிய திருவருளை மேற்கொண்ட புலியானது அங்கி ருந்தெழுந்து விநாயகர் முன்னே செல்லுமிடத்து நாடி ஒரு கணநேரத்தில் அம்மலையின் உச்சியில்போய் நின்று பின்னே யானைக்கன்றை தன்னினின் றும் வேறாக்கி இதுசெய்யும்.—எ-று. 22

(இ-ள்.) ஆகாயத்தின் முடியில் பனீல் என்கிறதாக வெடித்ததுபோலும் ஓசையுண்டாகவும் தேவர்கள் பயங்கொள்ளவும், கற்பகத்தருக்கள் அதிரவும், மேகத்தின் கருவானது கலைந்துவிடவும், திக்கோடுதிக்கின் அந்தமும் கதி மாறிவிடவும், சீவர் புத்தி வேறுபடவும், யானைக்கன்று முன்னே பிளிறும் பேரொலிசெய்து செருக்கும், எழுகின்ற காலில் வலமாய் மலையின் முடியில் நின்றிருக்கும் கொடிய புலி அதன் பின்னே பேரொலி யுண்டாகும்படி கற் சிக்கும்.—எ-று. 23

அட்டகுல மாமலை யடுக்கழிய பொன்மலை
யழன்று முடிநின்று முருக
வட்டமணி வாரிதி கொதித்தழல நாகமு
மணிப்பல முகத்து முமிழ
நட்டமிடு கோலமொடு துன்றமுடி யெங்கணு
நடந்தன தொடந்தன பரன்
எட்டின பறித்தன பிடித்தன சிலைத்திரள்
எறிந்தன புரிந்த கொடிதே. 24

செண்டென வெழுந்தன வுருண்டன பறந்தன
சிலைப்பல விடத்து மதிர
மண்டுக ளெழுந்தன கொழுந்தென செழிந்தன
மலைக்கணொரு காத வகலம்
தண்டென விழுந்தன மாஞசினை முறிந்தன
சரிந்தன விருந்த தெவையும்
வண்டென பறந்தன மதக்களிறு கன்றுமுறு
வல்லிபமு மொல்லை யுலவ. 25

ஓடின நடந்தன குரங்கென குதித்தன
வுறுத்தன வுவாவை யுழுவைத்
தேடின விரைந்தொரு கணத்துமலை சாரலிற்
றிரிந்தன வெதிர்ந்து பொழிலில்
கூடின பிறிந்தன வெறிந்தன கலின்றிரளை
கூவின வுறத்த வொலியால்
சாடின மலர்ச்சிலை தரித்தன வுதிர்த்தன
தனித்தவ னிருக்கு மிடமே. 26

ஊழியிது வோவென ஞெரேலென வொலித்தவொலி
யுற்றவெலை யிந்த வுலகம்
வாழுமுயி ரேவையு முறக்கம தகன்றுகண்
மலர்ந்தன வெருண்டு திசையந்
நாழியி லுணர்ந்தில மனத்திட மொழிந்துட
னடுங்கின வொடுங்கின வெனில்
ஏழைமதி யாயவொரு செல்வனு மலைத்திட
மிருந்திரவி லென்படுவனோ 27

(இ-ள்) அட்டகுலாசலங்களும் அமைந்துள்ள நிலைபெயர்ந்து அழிவுபடவும், மகாமேரு அனற்கொண்டு உச்சியிலிருந்து உருகி கொதியுண்டாகி வெதும்பவும் பூமியைத்தாங்கும் ஆதிசேடன் ஆயிரம் வாயினும் சிவமணியின் கிரணங்களை உமியவும் நடஞ்செய்யும் ஆரவாரத்தோடு அந்தமலையின் முடியெங்கும் நடந்தன பின்னே ஒன்றையொன்று தொடர்ந்தன மரங்களைத்தாவி பறித்தன கற்றிரளைக் கையில்பிடித்து எங்கும் வீசின மற்றும்பல கொடுமைகளும் செய்தன.—எ-று. 24

(இ-ள்.) மதயானையின் கன்றும் கூடிவந்த புலியும் விரைந்து உலாவலால் அம்மலையிலுள்ள கற்கள் பலவிடங்களிலும், செண்டுபோல எழுந்துபறந்தன அம்மலைச்சூழ்ந்து ஒரு காதவழி தூரம் வரையும் மண்ணின் துகள் எழுந்து அனற் கொழுந்துபோல் மேலோங்கின, மரங்களின் கிளைகள் முறிந்து தண்டம்போல் விழுந்துகிடந்தன, அங்கேயிருந்தன யாவும் சரிந்து வண்டுபோல் பறந்தன.—எ-று. 25

(இ-ள்.) இச்செல்வ னிருக்குமிடத்து வந்து ஓடி நடந்தன குரங்குபோல் குன்றிலிருந்து குதித்தன, யானையைப் புலியானது கண்டு கோபித்தது ஒன்றையொன்று தேடின சீக்கிரமாக ஒரு கணநேரத்தே திரிந்து கண்டன சோலையில் ஒன்றோடொன்று கூடின மீட்டும் பிறிந்தன கற்களின் குவியலை வாரியெறிந்தன உறத்த சத்தத்தால் கூவின மலர்களை சாடின கல்லைப்பிளந்து உதிர்த்தன.—எ-று. 26

(இ-ள்) இது கடையூழி காலமோவென்று சொல்லும்படி ஞேரலென்கின்ற சத்தமுண்டாக சத்தித்த சத்தமானது கேட்டபொழுதே இந்த பூமியில் வாழ்கின்ற சீவகோடிகளெல்லாம் நித்திரைகெட்டு கண்விழித்து பயங்கொண்டு இந்தவிடத்தில் நாமிருக்கின்றோமென்பது அறியாமல் மனவலி கெட்டு சரீரம் நடுங்கி யொடுங்கினவென்றால் அற்ப தைரியமுடைய ஒரு வணிகன் இருப்பதோ மலைச்சாரல் காலமோ இராப்போது அதிலிருந்து என்னபாடு படுவனோ அறிகிலேம்.—எ-று. 27

கொற்றவளி யான்மலை மூடித்தலை மிருந்துடன்
குதிக்குமணி காலறி ஞானே
யெற்றவரு மன்னவன் விடைக்குழு தனைக்கவி
யெடுத்தெறியு மக்க ளுடலைப்
பற்றவரு மோடவு மிடந்தா வொணுதனை
படுக்குமெழு மந்த மலையைச்
சுற்றிவரு முன்சர ணெடுத்துமணி லெண்முறை
துவைத்தொரு துடுக்கு புரியும். 28

பாயுமொரு கல்லிட மிருந்துமொரு கல்லிடைப்
பலைப்பிறை யெனத் தெரியவே
வாயொரு கணத்தொரு முறைப்பட திறக்கும்வெறு
வாயினை யதுக்கு மிகவே
காயுமிரு கண்ணனல் வெளிப்பட புகைத்திரள்
கருக்க வனையும் மனைபடாம்
சாயுமனை மைந்தனொ டிதென்னென வுறும்பதி
தழீஇக்கொள தருக்கு முழுவை. 29

அக்கிரி யிருந்தமத வேழமுனி மத்தக
மடித்தது துடித்து வயமா
கைக்கிரி கனன்றதிது வென்னென வுரைப்ப
வொருகைக் கொடுமுழவைப் பெரியவால்
மிக்கிரி தரப்பிடி பிடித்தொரு குரோசவழி
விட்டெறிய வெய்ய புலியோ
சக்கிரி யெனப்பினை யெழுந்துவினை
யாடுமது சண்டையென மைந்தாலைய. 30

பயமிக வடைந்தன தன்னினி பிழைப்பதிலை
பாய்புலி காத்து மடிய
அயனெழுதி ஞன்மனைவி மைந்தனுற வாளருட
ஞவின மதற்கு மெனுமோர்
நயமொழி தராதுமன தெண்ணியெணி புண்ணொடு
நடுங்கு நலிவாள னெதிரே
கயமுனி தனைப்பிடர் பிடித்தது கடித்தொரு
கலகமுதி தாருமது போல். 31

(இ-ள்) வெற்றியுடைய வல்லபத்தால் குன்றின் தலையிலிருந்து குதிக்கும் இந்த வைசியனைப் பயமுறுத்தும்படி அவனது இடபக்கூட்டங்களை வாயாற் கவ்வியெடுத்து தூரத்தே போய்விடும்படி வீசும் ஆங்குள்ள மனிதர் சரீரத்தைப் பிடிக்கவரும் பயந்து ஓடிப்போவோமென்றாலும் இடங்கொடுக்காது கற்பாறைகளை அணையாகக்கொண்டு படுக்கும் மீட்டும் எழுந்திருக்கும் அந்த குன்றைச் சுற்றிச்சுற்றி யோடிவரும் முன்னங்காலைத் தூக்கி பூமியில் பலமுறைததட்டும் இன்னும் அநேக சேட்டையும் செய்யும். 28

(இ-ள்) ஒரு கல்லின் மேலிருந்து மற்றொரு கல்லின் மேல்பாயும், ஒரு கணபபோதுக்கு ஒரு கணப்போது பல்லாகிய பிறை தோன்றும்படி வாயைத திறக்கும், வெறுவாயை மெல்லும், தன்னிரண்டு கண்ணினின்றும் அக்கினி வெளிபபட்டு புகையுண்டாகும்படி கோபக்குறி காட்டும், ஆங்குள்ள படாம் வீட்டின் அருகேசார்ந்து அதிலுள்ள வணிகன் மனைவி இதென்ன விபரீதமென்று தன் பிள்ளையுடன் நாயகனைத் தழுவிக்கொள்ளும்படி சாய்க்கும் — எ-று. 29

(இ-ள்.) அந்த மலையிலிருந்த மதமுடைய யானைக்கன்றின் மத்தகத்தில் புலியடித்தது, யானைக்கன்றோ கோபங்கொண்டு இதென்ன ஆரவாரமென்று கேட்டவர் சொல்லும்படி தன் துதிக்கையைக்கொண்டு புலிவாலைபபற்றிப் பற்றி மிகவுமது அஞ்சும்படி ஒரு கூப்பிடுதூரம் போய்விழும்படி விட்டெறிய மீட்டும் அப்புலியானது செக்கின் பின்னே சுற்றும் செக்கான்போல் சுழன்று இதுகண்ட மக்கள் சண்டையேயென்று பயங்கொள்ள விளையாடும்.—எ-று

(இ-ள்) இதனால் மிகவும் அஞ்சிய வணிகன் இனி நாம் பிழைக்கிறதே இல்லை இன்றையதினத்தில் இந்த புலியின் கையால் மாளவேண்டியது நமது பெண்டு பிள்ளை யுறவினர் எருதுகள் இவைகளோடுமென பிரம்ம தேவன் எழுதியனுப்பினனென்று வாய்விட்டு சொல்லாமல் தனக்குள்ளே நினைந்து நினைந்து மனது புண்ணாகி வாடுகின்ற இவன்முன்னே; அப்புலி யானைக்கன்றின் பிடறியைபபிடித்து இது ஏதோ பெரியகலகம் உண்டாகப் போகின்றதென்று சொல்லும்படி கடித்தது.—எ-று. 31

பின்னிய முனைந்தது சினந்தது துதிக்கையிற்
பிடித்தெதி ருந்தி யதனைத்
தன்னொரு வலங்கொடு தனித்தனி நிமிர்ந்தது
தறுப்பெரு மறைச்சொ னெறியே
சொன்னமலை யோடுமொரு சித்ரமலை யானது
தொடர்ந்தமர் புரிந்த படியே
இன்னது வியாக்கிரமா வின்னது மதாவளமா
வென்ப தறியாது சுழலும். 32

வாரிவரு மாறென கடங்க லுழவேகரி
வரும்வல மிடத்து மொருகால்
சாரிவரு மூகமது வேகமொடு பின்னடி
தனைப்பெயரு முன்னடி கொடே
வாரிபெறி யுமபிணை வரிற்பொருது மாறது
மலிற்பெரிய வீர னெனவே
தேரியெதி ரும்பல திரத்துவிளை யாடலை
செயுஞ்சமப முற்ற தறைவார். 33

கலிநிலைத்துறை.

களிமிக் காற்புய வலியுள ராடலின் கதியாலே
எளிபச சிவர் தமக்குயிர் போமெனு மியல்போலே
அளியிற் போதரு குயவரி போதக மடலாலே
துளியிற் கண்பனி சிந்தின வங்குயிர் தொகையாலோ. 34

உற்றொரு காலி லுதைந்தெழு போதி லுருண்டோடி
கற்றுக ளாகி பறந்தன மாமலர் காவெல்லாம்
மற்றது போத விருஞ்சினை பஞ்சென வலியற்றே
சற்று நிலாது மரம்பல வேரொடு சாய்ந்தப்பார். 35

உந்து நகத்து முரங்கொடு மூன்று முரற்காலால்
செந்துக ளாகி யெழுந்தன மண்டுகள் சேணிற்போய்
பந்த ரெனும்படி மூடின மிக்குபரா கத்தால்
சந்திர னாதிய தாரகை சோதி தனைப்பற்றி. 36

(இ-ள்.) அதன் பின்னே யானைக்கன்றானது தன் துதிக்கையால் பிடித்து பொருது கோபங்கொண்டு எதிரில் புலியைத்தாழ்த்தியேறி தன்வலி கொண்டு தள்ளித்தள்ளி இறுமாந்து அதன்பின்னே தநுவேதப்படி மல்யுத்தம் புரிவதுபோல் பொன்மலையோடே ஒரு சித்ரமலை தாக்கியதுபோல் மலைந்து இதுபுலி யென்றும் இது யானைக்கன்றென்றுங் கண்டறியக்கூடாத படி சுழல்வன —எ-று 32

(இ-ள்.) சமுத்திரசலம் புரண்டு வருவது போல் கடசலம் சிந்தும்படி யானைக்கன்றானது வலமாகவு மிடமாகவும் சுழன்று உலாவரும் அதன் பின்னே புலியானது அதிவேகமாய் பின்னேபோய் மெல்லநடந்து முன்னடி வைத்துப்பாய்ந்து வாரியெறியும் மீட்டும் அது எழுந்துவந்தால் தாக்கும், யானைக்கன்றும் மல்யுத்தத்தில் சிறந்த வீரனென்னும்படி நேரியெதிர்த்து இவ்விதமாக பலவித விளையாடல் செய்யும் சமயத்தில் விளைந்ததைச் சொல்வாம் —எ-று. 33

(இ-ள்.) மனச்செருக்கும் தோள் வலியுமுள்ள சிறுவர் விளையாட்டால் அற்ப சீவர்களுக்கு உயிர் போகும் என்பதுபோல் அன்பினால் வந்த புலியும் யானைக்கன்றும் விளையாடுவதால் ஆங்குள்ள சீவன்கள் யாவும் கண்ணீர் துளி துளியாகவிட்டன.—எ-று. 34

(இ-ள்.) நோக்கி ஒரு காலைவைத்து மற்றொரு காலை உதைந்து எழும் போது உருண்டு ஓடி கற்களாதி பறந்து பெரிய பூங்காவெல்லாம் போதலால் மரங்களின் கிளைகளெல்லாம் பஞ்சுபோல் வலிகுறைந்து நிற்கமுடியாமல் பல விருக்ஷங்கள் பூமியில் வேரோடு சாய்ந்தன.—எ-று. 35

(இ-ள்.) யானைக்கன்றின் மேலுள்ள நகத்தாலும் வலியாக பூமியில் ஊன்றிய உரல்போலும் காலாலும் மண்ணினது துகள் செந்துகளாகி யெழுந்து ஆகாயத்தேபோய் சந்திரன் தாரகைகள் இவைகளின் ஒளியை மறைத்து பந்தரிட்டதுபோல் மூடிப்பாவிக்கொண்டன.—எ-று. 36

[illegible]ருள்பக்கி கணங்கள் விலங்குவிலங் கிப்போய்
திக்கு திசைத் தெரியாது பறந்து திரிந்தப்பார்
இச் கெனலூரி செலும்பணி யாதிய திரளெல்லாம்
எக் கதியாயின வென்ப தறைந்திட வெளிதாமோ. 37

வெங்க ணெறுத்தல் புலால்கமழ் வாசனை மேவுற்றால்
செங்க ணெருத்து வெருண்டிடு மென்பது சீரறால்
அங்க ணிருந்த பசுத்திர ளிற்சில வாவிப்போய்
மங்கிய தென்ன விழுந்து புறண்டன மண்ணுற்றே. 38

காலைப் பூமி புரண்டு மருண்ட கணப்போதே
வாலைக் காலி லடக்கி முடக்கி மயக்குற்றே
ஓலச் சித்திர காயச்சேவையி லொரு நாலு
மூலைக் கேபல மூலைக்கோடின சில மூரி. 39

வாயிற் போதரு நீரற்றாயின சில மாடு
சேயிற் போயொரு சேவைக்கூவுவ சில வேறு
மாயப் போதக மேயப் போதுதன் வளமான
தேயத் தேபல தேயத் தோடின சிலவேறே. 40

வேங்கைத் தும்பி மலிந்த விலங்கலி தென்றுத்தம்
பூங்கைக் கொட்டி பிசைந்து வயிற்றை புரம்பேக
பாங்கிற் றென்னது செய்குவ மென்ன பயங்கொண்டே
தூங்கிக் கண்ணை விழித்து பறந்தனர் சோர்வுற்றார். 41

தருமத் தேசிவ தருமப் பாலன தவருக்கே
வருமிப் பாடென சொலுமெக் காவியம் வாய்விட்டே
அருமைத் தாமென வவணுற் றார்சொலி யாலித்தே
பொருமிக் கோவென முறையிட டாருறு புலமட்டே. 42

உண்டிலை யோவெனு முயிருட னின்றது வொன்றல்லால்
கண்டன ரன்றது மானமிலாது கலக்குற்றார்
தொண்ட னலாத தொகைத்தமரார துயர்க் கொண்டே
செண்டென வோடி விழுந்தனராகி தியக்குற்றார். 43

(இ-ள்.) அவ்விடம் அதிகமாக விருந்த பக்ஷிகூட்டங்களும் விலங்கின் கூட்டங்களும் அங்கிருந்து எழுந்துப்போய் திசைகள் இன்னவெனவறியாது பறந்தன திரிந்தன பூமியில் ஊர்ந்து செல்லும் சர்ப்பமுதலிய சீவர்கள் இப்படியானது என்றுசொல்வது அருமையே.—எ-று. 37

(இ-ள்.) வெவ்விய கண்ணையுடைய புலியின் புலால் நாற்றம்பட்டால் சிவந்த கண்ணுடைய இடபங்கள் பயங்கொள்ளுமென்பது யுண்மையானபடி யால் அங்கேயிருந்த எருதுகளில் சில உயிர்நீங்கி கிடந்ததென்னும்படி பூமி யில் விழுந்து புரண்டன.— எ-று. 38

(இ-ள்) பூமியில் காலைப்புரண்டி பாய்ந்தவுடனே பின்காலில் வாலை முடக்கி மயங்கி கர்ச்சனைசெய்யும் புலியின் காக்ஷியாலேயே சிலமாடு மூலைக்கு மூலை யோடிப்போயின. —எ-று. 39

(இ-ள்.) சில மாடுகள் வாயில் தண்ணீரில்லாமல் வாண்டன, சில மாடு தூரத்தே ஓடிபபோய் மற்றய மாடுகளையும் அழைப்பன மாயாவிலாசமாக வந்த யானைக்கன்றை கண்டபோதே வளம்பொருந்திய தன்னூருக்கும் பிறவூருக் கும் ஓடிப்போயின. — எ-று. 40

(இ ள் ) இந்த காடு யானை புலி மலிந்ததாயிருக்கிறதென்று தங்கள் அழகிய கையைத்தட்டி வயிற்றைப்பிசைந்து இதைவிட்டு போய்விடுவோ மென்றாலும் சரிவராது இனி யெது செய்வோமென்பதாக பயந்து தூங்கிக் கொண்டிருந்து கண்விழித்து வாட்டமடைந்து அவ்விடம் விட்டுப்பிறிந்து போனார் —எ று 41

(இ-ள்.) தருமங்களிலே சிறந்த சிவதரும பரிபாலனமுடைய இத்தப சிக்கே இப்படிப்பட்ட வருத்தந்தான் வருமென்கிறதாக எந்த சிவபுராணம் அருமையாக வாய்விட்டுபேசும் எனக்கூவி ஆங்குள்ளவர் வருந்தி அவ்விட மெல்லாம் கோ கோ வென்கிறதாக முறையிட்டார்கள் —எ-று 42

(இ-ள்.) அநுமானமில்லாமல் காட்சிப்பிரமாணமாகக் கண்டவர் உயிர் இருக்கிறதோ இல்லையோவென்று சொல்லும்படி உடன்மாத்திரமாக நின்ற [illegible]ாமல் வணிகனல்லாத மற்றவர் கலங்கிவிட்டார்களாகி செண்டுபோல் [illegible] ஓடிவிழுந்து தியக்கமடைந்தார். — எ-று. 43

கண்ணை மறைத்திரு கைம்முக மாவரதிற் சில்லோர்
மண்ணை யறைந்துயிர வாய்வழி யாவரதிற் சில்லோர்
நண்ணிய துட்ட விலங்கிவை யென்ன நடுக்குற்றே
அண்ண லடித்துணை யேகதி யென்பரதிற் சில்லோர். 44

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐங்கரத்தெந் தவமுனியுந் தசக்கரத்தெஞ்
சிவக்கனியி னரையின் றோலும்
அங்கணுளா ரிக்கோலத் தச்சுறவித்
திருவிளையாட் டயர்ந்து பின்னர்
துங்கமதக் கரிப்புலியோ டமராடன்
முடியாமற் றோற்ற தென்னப்
புங்கமிகுந் தனதன்றன் படமாட
மவன்வெருவப் புக்க தன்றே. 45

கன்றோடப் பின்றொடர்ந்த புலியோடப்
படமணையின் காவ லாளர்
இன்றோடே யுடலிருந்த வுயிரோடு
மெனத்துணுக்குற் றெண்ணி யோட
சென்றோடி தனதன்ற னிளஞ்சேயை
வாய்கவ்வி திரும்பிற் றாகி
மன்றாடு மீசனருட் கிலக்காகு
மகப்புனித மதிக் கற்பாற்றோ. 46

தடித்தெழுந்து மறைந்ததெனக் கருவடிவை
சார்த்தூலத் தந்தங் கவ்வி
கடித்தெழுந்த படிகண்டார் பெற்றவர்க
டம்முயிரைக் காணா ராகி
படித்தலத்திற் கிடந்தார்கள் தொந்தியையிற்
றெந்தையவர் பக்க நின்றார்
எடுத்தபவப் பயனுங்கட் கின்றோடே
கைவந்த தென்ப தோத்தே. 47

(இ-ள்.) அவர்களிற் சிலர் கண்ணை மறைத்து இரண்டு கைகளையும் முகத்தில் வைத்தவராவார்கள், சிலா கையினாற்பூமியை யறைந்து சுவாசத்தை வாயவழியாக விடுவார்கள் சிலர், இங்கே வந்த மிருகங்கள் துட்டவிலங்குக ளென்ன நடுநடுஙகி இனி நமக்கு பரமேஸ்வரன் திருவடியே கதியென்பார் கள் —எ-று. 44

(இ ள்.) ஐந்து கையுடைய விநாயகக்கடவுளாகிய கன்றும் பத்து கை யுடைய சிவபெருமான் அரையிற்கட்டிய தோலாகிய புலியும் அவ்விடமுள் ளவர் பயங்கொள்ள இவ்வித விளையாடல்செய்து அதன்பினனே சுத்தமாகிய மதமுள்ள யானைக்கன்று புலியோடே சண்டையிட முடியாமல் தோற்றது போல் புண்ணியமிருந்த வணிகனுள்ள படாம் வீட்டில் அவனஞ்சும்படி போய் புகுந்தது. —எ-று. 45

(இ ள்.) யானைகன்று ஓட அதை தொடர்ந்த புலி பின்னே யோட அப்படாம் வீட்டின் காவலாளிகள் இன்றுடன் நம்முடலிலிருந்த உயிர் ஓடிப் போய்விட்டதென்று பயந்தோடும்படி புலிபோய் வணிகனுடைய அதிக இளம் பருவமுடைய குழந்தையை வாயிலே கவ்விகொண்டு திருப்பிபபோய்விட் டது என்றால், பொன்னம்பலத்தில் ஆனந்த நிருத்தஞ்செய்யும் சிவபெருமான் அருளுக்கே பாத்திரமாகிய அப்புத்திரன் புண்ணியத்தை இவ்வளவென்ன யாவரால் மதிப்பிட்டறியக்கூடும். — எ-று. 46

(இ-ள்.) மின்னல் தோன்றி மறைந்ததுபோலப் பாலனை புலியின் பல் லானது கவ்வி கடித்து எழுந்ததை அப்பிள்ளையைபெற்றவர்கள் கண்டார் கள் கண்டவுடன் மரண மூர்சசையடைந்து பூமியில் விழுந்தார்கள் அவர்கள் பக்கலில் விநாயகக் கடவுளானவர் நீங்களெடுத்த பிறவியின் பலன் இன்றோ கூடிவந்தது என்பதுபோல் நின்றார்.—எ-று. 47

மாட்டடுத்து வந்தநமக் கிவ்வண்ணம்
வந்ததென மாழ்கி நொந்து
ஓட்டெடுத்த பரிசனங்கள் புலியோடி
சென்றதெனு முண்மை யோர்ந்து
காட்டடுத்த மலைச்சாரல் தனதன்றன்
மனைவியொடுங் கணபதித் தன்
வீட்டடுத்த சாணா விந்தமலர்
வீழ்ந்திருப்ப வியந்து கண்டார். 48

இன்றிர வெலாமலைத்து மாதங்க
மொருவேங்கை யிவரைக் கொன்று
சென்றன மற்றவர்க ளிளஞ்சேயில்லை
பாமனொரு சேயாந் தம்பிக்
கன்றுளது காண்மின்கள் சேவைசெய
வைமின்கா ளென்று கூவி
துன்றிபமா னவரெல்லா மொருங்கோடி
வந்திதனைச் சொல்ல தானா. 49

அநதோவீ தென்னையிவர்க் குயிருண்டோ
வெனவிரங்கி யருகி லேகி
செந்தாமரைப் புரையு முகநோக்கி
மூச்சுவருஞ் செயலுங் கண்டு
சந்தேகமில்லை யிவர்க் குயிருண்டு
தேகதோ தடிப்பில் லென்றே
வெந்தாப மகலவிளங் காலசைய
வீசுவித்தார் விசிறி கொண்டே 50

தண்ணிய பன்னீர் தெளித்து
சுகந்தமணச் சுண்ணமிழைச் சாந்தந்தூவி
பண்ணிய வினனிய மொலித்துத்
தெளிவிக்கக் கண்விழித்துப் பார்த்தான்செல்வப்
புண்ணியனு மக்கணமே யன்னவன்றன்
சதியாய புனிதை யென்னும்
பெண்ணமுத மயர்வாறி மைந்தவோவெனக்
கண்ணீர் பெருகிச் சோர்வாள் 51

(இ-ள்.) இவ்வெருதுகளை யடுத்துவந்த நமக்கு இப்படிப்பட்ட துன்பம் வந்துவிட்டதே என வருந்தி மனநொந்து புலி ஓடிப்போய்விட்ட தென்பதை யுண்மையாக வறிந்து காட்டைச்சார்ந்த மலைப்பக்கத்தில் வணிகன் தனது மனைவியோடும் விநாயகருடைய மோக்கத்துக் கணித்தாகிய திருவடி நிரு மலரைச்சார்ந்து வீழ்ந்திருப்பதை அதிசயித்துக்கண்டார்கள்.—எ-று. 48

(இ-ள்) ஒரு யானைக்கன்றும் ஒரு புலியும் கூடிவந்து இன்றிராவெல் லாம் நம்மை வருத்தி இவர்களைக் கொன்றுவிட்டுப்போயின இவர்கள் பால கனே காணப்படவில்லை இவ்விடத்தில் பரமேசுரன் புத்திரனாகிய யானைக் கன்று மாத்திர மிருக்கின்றது வந்து பார்த்து தெரிசியுங்கள் வாருங்களென ஒருவரை யொருவர்க்கூவி அங்கே நெருங்கிய மக்களெல்லாம் வந்து இது சொல்வார்.—எ-று. 49

(இ-ள்.) ஐயோ இதென்னகோலம் இவர்களுக்கு உயிர் இருக்கின்றதோ இல்லையோவென்ன நெருங்கிப்பார்த்து தாமரை மலர்போலு முகத்தையும் சுவாசம் வருகின்ற தன்மையுங்கண்டு இனியோர் ஐயமுமில்லை உயிரிருக்கின் றது சரீரத்திலும் ஒருவித காயமுமில்லை என்ன அவர்கள் ஆயாசம் தணிய வேண்டி இளங்காற்றுவரும்படி விசிறியைக்கையிற் கொண்டு வீசுவித்தார்கள். —எ-று. 50

(இ-ள்.) குளிர்ந்த பன்னீர்கொண்டு தெளித்து நல்ல மணமுடைய வாசப்பொடி கலந்திழைத்த சந்தனக்குழம்பை வாரியிறைத்து பண்ணுடைய இனிமையாகிய சுரங்களை ஒலிப்பித்து அவர் சோகந்தெளிவிக்க அதனால் வணிகன் பார்த்தான் அவன் பத்தினியாகிய பெண்ணிற் கமுதம் போல்வாள் சோகந்தீர்ந்து மகனே என்று அலறி கண்ணீர் பெருகிச் சோர்வாள்.— எ-று.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கையைப் புடைத்து முகமீ தறைந்து கண்ணைப் பிசைந்து பலகால்
மெய்யைத்துவைத்துமண்மேல்விழுந்துவிம்மித்திகைத்துமெலிவாள்
தெய்வத்தைநொந்துவினையைச்சினந்துசேயிங்குறங்குமெனவே
ஐயுற்றுநங்கைபின்னுந்தெளிந்துமழுவாள்வருந்திமொழிவாள். 52

பாயிற் கிடந்து தூங்கப் பெறாது பதமுந்தி யுந்தி யெரியுந
தீயிற் பதைத்து பலகா லழுந்த சிறுவா செறுக்கு வயமா
வாயிற் கிடந்து பல்லா லதுக்க வறுமோ வுறக்க மினிதாய்த்
தாயிற் சிறந்த பரமேச வெந்தை தயவிற் பிறந்த மகனே. 53

என்னைப் பிறித்து பாமன் றுணைக்க ணின்பாகி யன் பினரிய
மன்னைப் பிறித்து முனைபெற் றெழுந்த மகிழ்வைப் பிறித்து கொடி
முன்னைப் புரிந்த வினையாகி வந்த மூரற் றுணித்த பிறையா [யேன்
னுன்னைப் பிறித்து புலிவாய் கடிக்க வுறுமோ வெனுசை மகனே.

காயா திருந்த மரமாகி னுள்ள கசிவேது காய்த்து மலடா
நாயேனை யந்த புலிதா னுணற்கு நஞ்சோ வெனங்க மறியேன்
நீயே யதற்கு மமுதோ வலாது நிதியே நிறைந்த மதியோ
தாயா மெனக்கு முன்னோடி வந்து சாற்று மெனுசை மகனே. 55

பொன்னை மேனி படியத் தவிழ்ந்து போதற் கறிந்து மகிழ
உன்னைத் திரத்து குதலைச் சொலற்கு முரியே யிருந்து மகிழ
மின்னோர் நடந்து சிறுதே ருருட்ட விடவில்லை யுன்னை யெனினும்
என்னே புலிக்கு பசியாகி லாறு மிதனை யுறைத்தி மகனே. 56

வெண்ணைக் கிரிக்க ணெரியுற்ற தென்ன வெந்துள்ள முருகி யுருகி
கண்ணைக் குரித்து வழிநீரு குத்துக் கழலுங் கிளத்தி யவனோர்
உண்ணெக்கு நெக்கு தானுங் கலுழ்ந்து மொருவாறு தேரி தனதன்
பெண்ணிற்குதித்தபிள்ளையில்லையீசன்பிள்ளைகாணியென்றுபுகல்வான்

மருளா மனத்து வசமா யுறங்கு மதியே னகத்து வருமுன்
னருளேது முன்னை யெதுநான்புரிந்ததறைவாய்மறைக்கணொளியாம்
பொருளேயெவைக்குமுன்னின் றமுறுபோக்கும்புராணபுனிதத்
தெருளேவெனுசைமகவெங்கிருக்குஞ்செப்பாய்கணதிபதியே.58

(இ-ள்) ஒரு கையை மற்றொரு கைமேலடித்து அக்கை கொண்டே மூகத்தின் மேலடித்து கண்ணைப்பிசைந்து பலமுறை சரீரத்தின் மீதும் மோதி பூமியில் விழுந்து தேம்பி மயங்கி சோகமாவாள், பாழுந்தெய்வமே யென்செய்தாயென நொந்து வினையே உன் வல்லபமிதுவோ வெனக்கோபித்து நமது பிள்ளை இங்கே துயிலுமென்ன சந்தேகங்கொண்டு பார்த்து இல்லாமையால் அப்பெண் பின்னும் தேரி அழுவாளாகி மனம்வருந்தி இது சொல்வாள் —எ-று. 52

(இ-ள்.) பஞ்சணையிலே படுத்திருந்து தூங்குவதற்குப் பொறுக்காமல் காலை மேலே உதைத்துதைத்து தீயிற்பட்ட புழுபோல் பதைபதைத்து பலமுறை யுமழுத குழந்தாய், களிப்புடைய புலியின் வாயிலிருந்து அதன் கூரிய பல்லினால் அதுக்குவதால் உனக்கு நித்திரை நன்றாக வருமோ தாயினும் தயவுடைய சிவபெருமான் திருவருளால் கொடியவளாகிய எனக்குப் புத்திரனாகப் பிறந்த மகனே.—எ-று. 53

(இ-ள்.) உன்னினின்றும் என்னை வேறாகப் பிரித்து சிவபிரானை வழித்துணைவா இன்பமாகியும் அரிதாகியுமுள்ள உன் தந்தையினின்றும் வேறாகபபிரித்து உன்னைப்பெற்ற காலமுதல் எங்களுக்குண்டாகிய சந்தோடத்தைப்பிரித்து கொடியவளாகிய யான் முன்பிறப்பிலேசெய்த வினையுருவாகிவந்த புலியின் பல்லாகிய நடுவே துண்டித்த பிறையால் உன்னைப் பிரித்து வாயிற்கடிப்பது தகுமோ என்னாசையுள்ள மகனே.—எ-று. 54

(இ-ள்.) காய்க்காமலிருந்த மரம்போலிருந்தால் புத்திரசோகமே வாராது காய்த்து மலடாயிருக்கும்படியான நாயேனை இந்த புலி உண்ணுவதற்கு என் சரீரம் விடமோ அறிகிலேன், நீ தான் அப்புலிக்கு அமிர்தமோ அல்லது தேவநிதியே நிறைவாகிய உணர்வோ உனக்குத்தாயாகிய என்முன்னே எழுந்தோடிவந்து சொல்வாய் என்னாசையுள்ள மகனே.—எ-று 55

(இ-ள்.)உன் பொன்போலுந் திருமேனி பூமியில் படியும்படி தவழ்ந்து போதலைக்கண்டு சந்தோஷிக்கவும், உன்னுடைய அழகிய வாயைத்திறந்து பேசுந்தத்திய வார்த்தைக்கு உரிமையுடைய யாங்கள் கண்டு சந்தோஷிக்கவும் மின்னலைப்போல் நீ மெல்லநடந்து சிறுதேர் உருட்டவும் உன்னை விடவில்லை யென்றாலும் சரியே இதென்ன இந்த புலிக்கு பசிப்பிணியாகிலும் உன்னை யுண்ணுவதால் தீருமா சொல்வாய் என்னாசையுள்ள மகனே.—எ-று. 56

(இ-ள்.) வெண்ணைக்குன்றில் தீப்பட்டதுபோலும் நெஞ்சங்காய்ந்து அது நீராகவுருகி கண்வழியாகச்சொரிய வழுந்தாள் வணிகன்மனைவி அவள் போலவே உள்ளமுடைந்து வணிகனும் அழுது ஒரு விதத்தால் மனந்தேரி சொல்வான் ஏ பெண்ணே? உன்னிடமாகப்பிறந்த பிள்ளையோ இவ்விடயில்லை பரமேசுரன் பிள்ளையாகிய பிள்ளையார் மாத்திரமே யிருக்கின்றார் அதோ அவ்வைக் காண்பாயாகவென்று இதுசொல்லி விநாயகரைத் துதிக்கின்றான்.—எ-று. 57

(இ-ள்.) மருண்ட மனத்தின் வசப்பட்டு மயங்கிக் கிடக்கும் புத்தியுடையேன் உள்ளவிடத்து எழுந்தருளிவரும் உமது கிருபை இருந்தபடியென்னே, முன்னே யான் எபுண்ணியம் செய்துள்ளேன் சொல்வாய், வேதத்தின் முதலாகிய பிரணவப்பொருளே யாவுக்கும் முன்னேயிருந்து இடையூறு நீக்கும் புராதனனே புனிதனே தேற்றமுள்ளவனே என்னுடைய ஆசைப் புத்திரன் எவ்விடமிருப்பான் சொல்வாய்.—எ-று. 58

பளகேதி வேழை முன்னம் புரிந்த பாவந் திரண்டு விளையும்
விளைவேது பாயப் புலியானை வந்து விளையாடு போரின் மகனைக்
களவேது செய்த திசையா கிலேக கைகாட் டலா தவற்றின்
உளவே தெனுசை மகவெங் கிருக்கு முரையாய் கணுதி பதியே.

என்பானனந்தமுறைமுற்றிமுற்றியெழுவான்விழுந்துதொழுவான்
முன்போய்தனுதுமுடியாற்புடைப்பன்முட்டிப்பிடித்தவிரலால்
அன்பாலிவன்றனகவேதையுற்றயானைத்துதிக்கையதனால்
தேன்பாலின்மேலைமூலைக்குறித்துதெளியென்றுகாட்டியருள. 60

இல்லா திருந்து புலிவாயின் மைந்த னிறையான பின்ன ரிறைமா
கல்லா யிருந்து மேழைத் துதிக்க கைகாட்டி நின்ற வகையில்
அல்லா யிருந்த பொழுதேனு மேக லறமந்த நெறியி லெனவின்
சொல்லா யிருந்த சதியோடு மற்ற துணையோடு மேகு மவனே. 61

வலியான் மிகுத்த விடதாரி யானும் வாயிற் பிடித்து கொலுமா
புலிவாயிலுண்டபிள்ளைப்பிழைததல்புதுமைத்துபுதுமையெனவே
கலிகால விஞ்ஞை யுரையல்ல நல்ல கதையீது சொல்ல வினிநாம்
சலியாத நெஞ்ச முனிகேளு மென்ன சாற்றுங் குமார வேளே. 62

திருச்சிற்றம்பலம்.

கருப்புலிப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௱௭.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவகாட்சிப்படலம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கதுமெனச் செல்வன் செல்லும் காலையிற் பக்கி சாலம்
முதுமறை யவர்க ளெல்லா மொய்த்தொரு வனத்திற் சேர்ந்து
பதியருட் பொங்கு கீத வேதமே பகருமா போல்
புதுமது பிலிற்று வாசப் பூம்பொழிற் கலித்த வன்றே. 1

(இ-ள்.) சிவகணங்களுக்குப் பதியானவனே? அடியேன் முன்னே செய்த குற்றமென்ன அப்பாவங்கள் திரண்டு விளைந்தவிளைவென்ன, பாயும் படியான புலியும் யானையும் இங்கேவந்து ஆடும் விளையாட்டாகிய யுத்தத்தில் என்பிள்ளையை எடுத்துக்கொண்டு போகவேண்டியதென்ன, அது போன திக்காகிலும் யான்செல்ல உன்னுடைய துதிக்கையையாகிலும் காட்டும் அல்லது இக்காரியமானதின் இரகசியமாகிலும் சொல் என்னுடைய ஆசைப் புத்திரன் எவ்விடமிருபபான் சொல்வாய்.— எ-று. 59

(இ-ள்.) இப்படியாகத் துதித்து பலமுறை வலமாகச்சுற்றிச்சுற்றி வந்து வணங்கியெழுந்து கைகூப்புவான் சந்நிதிமுன்னே போய் முட்டியாகப் பிடித்த கைவிரலால் தன்கன்னத்தில் குட்டிக்கொள்வான் தன் மெய்யன்பினாலே இவன் வருந்தியதை யறிந்த விநாயகக்கடவுள் நிருதி மூலையில் துதிக்கை நீட்டி தெளிவாயாக வென்னும்படி காட்டியருள.— எ-று. 60

(இ-ள்) நாம் இவ்விடம வந்து படாம் வீடமைக்கும்போது காணப்படாமலிருந்து புலியின் வாயில் பிள்ளைபோன பின்னே நமது கடவுளாகிய விநாயகக்கடவுள் உருவமாகிய கல்லாயிருந்தும் அடியேன் துதிக்கிரங்கி தன் துதிக்கை நீட்டியபடியால் இது சத்தியமே நன்மையே யுண்டாகுமென்னத் தேரி இபபோது இருளாயிருந்தாலுங் குறைவராது அம்மார்க்கம் போகவேண்டியதே நல்லதெனா இனிய மொழியுடைய தன் பத்தினியோடும் மற்றவர்களோடும் போவான் — எ று. 61

(இ-ள்.) வல்லபத்தால் மிகுந்த விடந் தீர்ப்பவனாலும் கொல்லும் பெரிய புலியின் வாயிலகபபட்ட பிள்ளை பிழைக்குமென்பது அதிசயத்திலே அதிசயமென்கிற கலிகாலவித்தையல்ல இது நல்ல அற்புதம் விளைய சிவானுக்கிரகமுண்டாகிய நல்ல சிவசரித்திரமதனால் சொல்லச்சொல்ல இனிமையே யுண்டாக்கும் கேட்பாயாக அசையாத மனமுடைய வசிட்ட முனிவரே யென்று அறுமுகப்பெருமான் சொல்வார்.— எ-று. 62

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவகாட்சிப்படலம்.

—o—

(இ-ள்.) இவ்விதமாக வணிகன் அதிசீக்கிரமாகப்போகும்போது பக்ஷிக்கூட்டங்கள் பழயவேதமுணர்ந்த அந்தணரெல்லாம் ஒன்றாகச்சேர்ந்து பதியிலக்கணமோது சாமவேதம் அத்தியயனஞ்செய்வதுபோல் அன்றாண்டாகிய தேன் துளிக்கும் மணமுள்ள பூஞ்சோலையில் சத்திக்கும்.— எ-று. 1

பன்னிறச் சித்ர காயப் பாய்புலி பதாகை யேந்தி
சொன்னிரை யண்ட மாண்ட சூரிரு கூறி லொன்றாஞ்
செந்நிறச் சூட்டு முட்டாட் சேவல் கூவினக் களிப்பாற்
பொன்னிற வண்டு கிண்டிப் பூம்பொடி யுதிர்த்த வன்றே. 2

விண்ணகத் தெங்கு மோங்கி மிடையுடு கணத்தின் காந்தி
தண்ணிய வமுதங் நாலுஞ் சந்திரன் காந்தி மாற
புண்ணிய ஞான மோங்கப் போயவஞ் ஞானம் போலத்
திண்ணிய விருளின் கூட்டஞ் சென்றபோந் திசைதோன் றாமல்

மலஞ்செறி யுலகப் பற்றான் மாழ்கிய மதியீர் வம்மின்
தலஞ்சிறந் துளது காண்மின் றரிசனஞ் செய்மி னென்ன
சலஞ்சல முழங்க வாற்றிற றருவெலாங் காள கண்டக்
குலஞ்சொலி கூவத் தோகை கூட்டமிக் ககவு மாதோ. 4

ஆதனத் திருந்து கைகாட் டைங்கரத் தெந்தை பாதப்
போதக மலர வெல்லிப் புலரவாண் டருள வெண்ணுந்
தோதகப் புலியு மத்த துடபியு மாடல செய்யுஞ்
சேதக மலரிற் சேநத செருக்கிரி யகன்று போந்து. 5

மருந்தினு மினிய தென்றே மற்றுளத் திணைவண் டெல்லாந்
திருந்தரும் புடைய மோதித் தேனுணச் செறிந்த பூவார
குருந்தடி புக்கங் கேறு கோட்பறை செவியிற் கேட்டுப்
பொருந்திய முயலு மானும் போதர லோடல் கண்டான். 6

அன்றுல களந்த மாய னரற்கனு தினமும் பூசைக்
கென்றெணி வைத்த போலு மிருந்தபைங் தளிர தளிர்த்து
மன்றசெந் தாதளைந்து மலர்ந்து பொன் போர்வை போர்த்த
கொன்றையிற் சிவலுங் கானங் கோழியுங் கூவக் கண்டான். 7

ஆனிரை மேய்ப்ப ராய ராய்ச்சிய ரானுக் கென்றே
பானிரைக் குடங்கட் சென்னி பரித்தன ராகிச் செல்லும்
பூநிறை நெறியின் மெல்ல போம்பொழு திழிந்து செல்லுங்
கானிரை யாற்று நீரங் கட[illegible]ளச் சேரி கண்டான். [illegible]

(இ-ள்) பலநிறமுடைய சித்திர வுருவுள்ள பாய்புலிக் கொடியேந்தி சொல்லால் நிறைந்த ஆயிரத்தெட்டு அண்டமாண்ட சூரபதுமன் பிளவுபட்ட இருகூற்றில் ஒருகூறாகிய சிவப்பு நிறமுள்ள உச்சிக்கொண்டையுடைய கோழி கூவின, சந்தோடத்தால் பொன்போலும் வண்ணமுள்ள வண்டுகள் குடைந்து பூந்தாதை யுதிர்த்தன. 2

(இ-ள்.) ஆகாயமெங்கு மதிகரித்து நெருங்கியுள்ள தாரகைகூட்டத்தின் ஒளியும் குளிர்ந்த அமிர்தகிரணங்கக்கும் சந்திரன் ஒளியும் நீசக புண்ணியத் தாலுண்டாகிய மெய்ஞ்ஞானமேலீட்டால் நீங்கிய அஞ்ஞானம்போல் நெருங் கிய இருட்கூட்டம் போனதிசை தெரியாமல் போய்விட்டன.—எ-று 3

(இ-ள்) மும்மலத்தால் நெருக்கும் உலகத்திச்சையில் கட்டுண்டு வருந் திய புத்தியுடையீர் வாருங்கள் இத்தலமோ சிறப்புடையது வந்து தெரிசியுங் களென்ன கௌண்டிஞ்ச நதியிலுள்ள சங்குகள் முழங்கவும், மரங்களிலெல் லாங் குயில்கள் சொல்லிச்சொல்லிக் கூவவும், மயில்கூட்டங்கள் அகவும்.— எ-று. 4

(இ-ள்.) தானிருந்த தானத்தேயிருந்து கைகாட்டிய விநாயகக்கடவுள் திருவடியாகிய மலரானது நெஞ்சம் பூப்ப இரவுவிடியத் தன்னைத்தடுத்தாண் டருள திருவுள்ளங்கொண்ட வஞ்சமுடைய புலியு மதயானையும் திருவிளை யாடல் செய்யும் சிவந்த மலரால் செந்நிறங்கொண்ட செருக்கிரியை நீங்கி வணிகன் நடந்து. - எ-று 5

(இ-ள்) தேவாமிர்தத்தினும் இனிமையுடையதென்ன வேறு திணை களிலுள்ள வண்டுகளெல்லாம் திருத்தமாகிய அரும்புகள் கட்டவிழ வீழ்ந்து கள்ளுண்ணும்படி அதிகரித்த பூ நிறைந்த குருந்தமரத்தின் அடியிற் புகுந்து அங்கே ஏறு கோட்பறை யொலியைக் காதிற்கேட்டு முயல் போகின்றதை யும் மான் ஓடுவதையும் கண்டான் —எ-று. 6

(இ-ள்.) அக்கால் உலகத்தை ஓரடியால் அளந்த திருமால் பரமேசுர ருக்கு அநவரதமும் பூசைசெய்ய வேண்டுமென நினைத்துவைத்து வளர்த்தது போலும் இருந்தலைகள் பசிய தளிருண்டாகி மணமுள்ள சிவந்த மகரந்த நிறைந்து பூத்து பொன்னாகிய போர்வை போர்த்துள்ள கொன்றை விருக்ஷத் தில் கௌதாரியும் கானங்கோழியும் கூவக்கண்டான். - எ-று. 7

(இ-ள்) அங்கே இடையர் பசுமேய்ப்பார் அவர்கள் மகளிர் சிவபெருமா னுக்கென்ன பால்நிறைந்த குடங்களை தாங்கிய தலையுடையவராய்ப் போகும் போது ஒழுகியேகும் யாற்று ஜலத்தைத்தாண்டி பக்கமுள்ள சிற்றூர் களையுங்கண்டான் —எ-று. 8

கொல்லையில் விளைந்த சாமை குறைக்குநர் வரகு மேய
வெல்லையிற் குழலி னூது மிசையினர் தம்மைக் கண்டு
முல்லையைக் குறித்த பண்ணு முல்லையைச் செவியிற் கேட்டு
மொல்லையின் மைந்தற் கானு முளத்தனு யதனை விட்டான். 9

கருதிய தெல்லா மன்பர் கைவரக் கொடுக்கு மீசன்
ஒருதுகின் மைந்தற் கௌவி யோடின துறைகொ னென்ன
கருதுணர் முடியில் வந்துப் படிந்துறக் காய மேய
மருதணி நீழல் போந்து மற்றத னடியைக் கண்டான். 10

வஞ்சியை யிடையாற் சேந்த மரைதனை முகத்தாற் சூலுண்
மஞ்சியைக் குழலால் வென்ற மடந்தையர் குரவைக் கூத்தின்
விஞ்சிய படியை யந்நாள் மிளிர்நடை தன்னைத் தாரா
வஞ்சியிற் கூடி கண்டு மகிழ்வுறு காட்சி கண்டான் 11

செந்நெலின் குவையிற் சாரற் றிரண்டிரு பானு நிற்றன்
மன்னிய பதும சங்க மாநிதி யென்ன வெங்குந்
துன்னிய வையின் குப்பைச் சூழலைக் கனக நாடாய்க்
கன்னலைக் காஞ்சி தன்னை கற்பக மாகக் கண்டான். 12

எங்கணு மேடேகி லுன்னை யெம்மிறை யாயப் பாய்மா
தங்கையா லறையச் செய்வே மென்றுகூற் றறியச் சாற்றி
யங்கவ னேறியூரு மான்ற கூர்ங் கோட்டு மோட்டு [டான்.
செங்கணேற் றெருமை கொண்டே செய்செய்வார் போலுங் கண்

மடையுடைத் தோடு நீர மறிக்குன ரமலை சேறு
மிடைபுல முழுநர் சும்மை வித்துன ரோதை நாறு
முடியுடைத் தழற்றி நாற்று முழக்கமங் கிலத்தி லென்றுங்
கடியுடைத் தெய்வ மோம்பு கம்பலை கண்ணிற் கண்டான். 14

எட்பக வன்ன தன்ன மெண்ணினு மிருத்த லாகா
வுட்பகை யென்பர் கலமோ ருழத்தியர் கருவித் தங்கட்
கட்பகை யாம்ப னீலங் கமலமென் றங்கைப் பற்றி
நட்பகல் களைக ணீக்கு நன்னிலங் கண்டு சென்றான். 15

(இ-ள்.) காட்டில் விளைந்த சாமையைக் கொழுத்துபவர்களும் வரகுள்ள விடத்தில் வேய்ங்குழலினால் ஊதும் இசையுடையவர்களையுங்கண்டு, முல்லை நிலத்தைக்குறித்தப் பண்ணாகிய முல்லைபபண்ணைக் காதிற்கேட்டு அரிவிரை வில் தன் பிள்ளையைக் காணவேண்டிய மனமுடையவனாய் அங்கிலத்தை விட்டு நடந்தான்—எ-று. 9

(இ-ள்.) எண்ணியவெல்லாம் அடியார்கள் அடையும்படி திருவருள் செய்யும் சிவபிரானது ஒப்பற்ற ஆடையாகிய புலிவந்துத் தன் பிள்ளையை வாயிற கௌவியோடிய மார்க்கம் இதுவோவென்ன ?யுற்றுவந்து மேகங்கள் பூங்கொத்துள்ள தலையிற்சூழ்ந்து பொருந்த ஆகாயமளாவிய மருதமரத்தின் அழகிய நிழலில் புலியின் காலடி யிருக்கக்கண்டான்.—எ-று. 10

(இ-ள்.) வஞ்சிக்கொடியை இடையினாலும் செந்தாமரை மலரை முகத் தினாலும் நீருண்ட மேகத்தைக் கூந்தலாலும் வெற்றிக்கொண்ட மகளிர் குரவைகூத்தின் மேம்பட்டுள்ளதையும் அவர்கள் அழகிய நடையையும் தாராவென்னும் பக்கிகள் வஞ்சிமரத்தில் சேர்ந்திருந்தது கண்டு சந்தோடங் கொள்ளும் காட்சியைக் கண்டான்.—எ-று. 11

(இ-ள்.) நெற்போரின் மலைகள் அனந்தமாகச்சேர்ந்து இருபாரிசத்திலு நின்றிருப்பதைப் பொருந்திய பதுமநிதி சங்கநிதியாகவும் எவ்விடங்களிலு நெருங்கியுள்ள வைக்கோலின் பெருமிதத்தைப் பொன்னுடாகவும், கரும்பை யும் காஞ்சி மரத்தையும் கற்பக விருக்ஷமாகவுங் கண்டான் 12

(இ-ள்.) எங்களுடைய நாட்டுக்கு நீ வருவாயாகில் உன்னை எஙகட் கடவுளாகிய கருப்புலியின் கையாலடித்துக் கொல்லச்செய்வோமென்று இய மன் அறியும்படி சொல்லி அவன் ஏறி நடத்தும் மாட்சிமை தங்கிய கூரிய நுதியுடைய கொம்பும் இறுமாப்பும் சிவந்த கண்ணுமுடைய எருமைக்கடாக் களைக்கொண்டே கழனிகளை உழவு செய்கின்றவர்போலும் உழவர்செய்யும் கருமங்களைக் கண்டான்.—எ-று. 13

(இ-ள்.) நீர் பாயக்கட்டிய மடைகளை யுடைத்தோடுகின்ற தண்ணீரை மீட்டும் போகவிடாமல் கட்டுகின்றவர்கள் ஓசையும் குழைச்சேறுடைய நிலத் தில் உழுகின்றவர்கள் ஓசையும் நாற்றின் முடியை யவிழ்த்து சேற்றில் நடு கின்றவர்கள் ஓசையும் அம்மருத நிலத்தில் காவல்பூண்டுள்ள தெய்வமாகிய இந்திரனை பூசிக்கின்றவர்கள் ஓசையும் கண்ணுற்கண்டான்.—எ-று. 14

(இ-ள்.) எள்ளின் பாதி பிளவு மாத்திரம் அற்பமாகியதேனும் உட்பகை இருத்தல் கூடாதென்று மேலோர் சொல்வார் இங்கே உழத்தியர் வைரங் கொண்டு தங்களுடைய கண்ணிற்கு பகையானது ஆம்பலும் நீலோற்பலமும் தாமரையு மென்றே நினைத்து கையிற்பிடித்து நேசமின்றி களை களையும் நிலத் தையும் கண்டான.—எ-று. 15

தந்திகட் பிளிறெ ஞாலை சாறடு பாவிக் காலை
சந்தியின் மறையோ ராற்று சத்திரத் தூமங் கண்டு
மந்திகண் மரத்தி னுச்சி யேறின மழையொன் றஞ்சுஞ்
செந்திறத் தாது சிந்துந் தண்டலைக் கண்டு சென்றான். 16

பரங்கணிற் காணப் பெற்ற பதக்கெளண் டிஞ்ச னல்ல
வரம்பெற பூசை யாற்று வாநதி யென்னப் போந்த
தரங்கிணி யிடையிற் பாயக் கண்டன னதனைத் தாண்டின்
வுரங்கொடு மகனைக் கெளவு முழுவைகாண் குதுமென் றெண்ணி

இறங்கின னிறங்க நீர மெறிதிரை யெழுந்து பின்னிக்
கறங்கெனச் சுழித்து நந்தங் காயநேர் குமிழ ரும்பி
பிறங்குவெண் ணுரைகண் மேவி பொரிதிறைந் திருகை மோதி
மறங்கொடு வந்த தென்ன வரவறிந் திதுசொல் வானால் 18

இழித்தெனை யகல விட்ட வீசவோ விவ்வா றுக்கிப்
பழித்தனை சுமந்த னன்றோ பாந்தனாய் வந்த காலை
வழித்துணை யாகி வந்தாய் மறந்தனை யிந்த வுந்தி
வழித்தரச் செய்வா யென்ன மலர்க்கணீ ரறைத்துச் சொற்றான்.

நாரின்மிக் குடையான் கொண்ட நலிவறிந் தனையின் வெம்மை
நீரினுட் டண்மைபோலு நிரைந்தவ னருளா லாற்று
நீரமற் றவனைப் போக விட்டது நின்ற தெந்த
நேரெனச் சென்றான் செல்வன் நெடுங்கரை யிவர்ந்தா னன்றே.

மங்குலை முடியாற் றாங்க வைத்தபொற் றம்ப மாறுந்
தெங்கினொண் கனியாற் பூகக் குலைபலச் சிதறிப் பாகு
பொங்கியதீ மெங்கும் போர்த்த பைம் பொழிலான் முற்று
வங்கனோர் நகரங் கண்டா னதிசய முளத்திற் பூப்ப 21

தோரண மன்ற மாடத் துவசநின் றாடச் சொன்னப்
பூரண கும்ப முன்றிற் பொலியுமிந் நகரான் வெள்ளை
வாரணர்க் கல்ல னீக்கி வான்குடி யேற்று மாற்றாற்
சீரணி நல்லூ ரென்னச் செப்பபி தான முண்டால். 22

(இ-ள்.) யானைகள் பிளிறுவதுபோலும் சத்திக்கும் ஆலையின் கருப்பஞ் சாற்றை காய்ச்சுகின்ற புகையும், காலை சந்தியில் அந்தணர் செய்யும் ஓமாக்கினியின் புகையும் பார்த்து, குரங்குகள் மரங்களின் முடியிலேறி மழை மேகமென பயந்து பார்க்கும் சிவந்த பூம்பொடிகள் சிந்தும் சோலைகளைப் பார்த்துச் சென்றான்.—எ-று. 16

(இ-ள்.) சிவபெருமானைத்தனது கண்ணாற் காணப்பெற்ற புண்ணியனாகிய கௌண்டிஞ்ச முனிவன் சிந்தித மனோரதமடையவேண்டி கங்காநதியே யென்று சொல்லும்படி வந்தயாற்றை தான்போகும் வழியின் முன்னர் பாய்ந்துப் போவதைப்பார்த்து இந்த நதியைக் கடந்தால் வலியோடும் வந்து என் மகனை வாயிற் கௌவிக்கொண்டுபோன புலியைப்பார்ப்போமென்று நினைத்து —எ-று 17

(இ-ள்.) அவ்வாற்றில் இறங்கினான் இறங்கினவுடனே நீரானது வீசுகின்ற அலையெழுந்து பின்னி காற்றுடிபோலச் சுழிகளுண்டாகி நமது சரீரம் போல் குமிழ் அனந்தந்தோன்றி விளங்கிய வெள்ளிய நுரைகள் அதிகரித்து மிகவும் சத்தித்து இருகரையிலுந் தாக்கி கோபங்கொண்டு வந்ததுபோல் வருவதைக்கண்டு இது சொல்வான்.—எ-று. 18

(இ-ள்.) என்னை இவ்விதமாக்கிக் கீழ்ப்படுத்திவிட்ட ஈசனே நீ பழி சுமந்துகொள்வது நல்லதோ யான் வழிப்போக்கனாக வந்தபோது எனக்கு மார்க்கசகாயமாய் வந்து காத்தனையே அதனை மறந்து விட்டனையோ இந்த நதி இப்போது வழிகொடுக்கச் செய்யவேண்டுமென்று மலர்போலுங் கண்ணீர்விட்டு விட்டுச்சொன்னான்.—எ-று 19

(இ-ள்.) அன்பினால் அதிகரித்துள்ள இவ்வணிகன் அடைந்த வருத்தமறிந்து தீயின் வெம்மையும் நீரிற்றண்மையும்போல் எங்கு நிறைந்துள்ள சிவபெருமான் திருவருளால் அவ்வாறு வழிவிட்டது உடனே அவன் அவ்வாற்றைக்கடந்து புலிபோய் நின்றது எந்த மார்க்கமெனத் தான்போய் நீண்ட கரை யேறினான்.—எ-று 20

(இ-ள்) மேகபடலத்தைத் தலையில் சுமக்கவைத்து பொற்றூணம்போலும் வளர்ந்துள்ள தென்னமரத்தினெற்றுக்களால் கமுகக் குலைகள் பலவும் சிதறி அதிகரித்து அவ்வாற்றின் கரையெங்கும் போர்வையாகப் போர்த்துள்ள சோலைகளால் சூழப்பெற்ற அவ்விடத்திலேயே ஒரு ஊர் இருப்பதை அதிசய மனதிலுண்டாம்படிக் கண்டான்.—எ-று. 21

(இ-ள்.) பூந்தோரணங்கள் கட்டியுள்ளதால் வாசம்வீசும் மாடங்களில் கொடிகள் அசைய பொன்னாலாகிய பூரண கும்பங்கள் வாய்தன் முகப்பில் அதிகரித்துள்ள இந்நகரத்தவனாகிய பரமேசுரன் இந்திரனுக்குண்டாகிய துன்பம் போக்கி விண்குடியேற்றின காரணத்தால் இவ்வூர் நல்லூரென்னும் பேருண்டு.—எ-று. 22

விடியன்முன் கடிகை யைந்தின் மின்னனார் துயிலை நீத்து
கடிமனை வாய்தன் முற்ற மலகிடுங் கருமமாற்றி
வடிநறுஞ் சாந்தி லானின் மயங்கொடு மெழுகிக் கோலப்
பொடியிற் சித்திரித்துத் தூமங் காட்டுவ ரகிறபொடித்தே. 23

தூவணை மாக்கித் தீற்றுஞ் சுதைவெயில் விரிக்கு மாட
மாவணக் கந்த மாக்கு மணிமணிக் காலின் மேயக்
காவணப் பரப்பிற் பச்சைக் கவின்மணிப் பன்ன மேய்ந்து
பூவணத் தொங்க லூற்றிப் பொலிந்துள வென்று மாலோ. 24

சந்திர காந்தக் கல்லாற் றமனிய சேற்றிற் சேர்ந்த
சுந்தர மாடத் தும்பர் சுடர்நிலா முற்ற நின்றே
சிந்துவ பனிநீ ரென்னச் செல்லுந ரயர்வு நீங்கி
இந்திர நகரமேயா மென்றவர் வியந்து பேச. 25

நாகிள வன்ன மின்னார் நடைநலங் கவர வென்றோ
கோகிலங் கிள்ளைப் பூவை மொழிநலங் கொள்ள வென்றோ
தோகைக ளவர்கட் சாயற் சுந்தரந் தேர வென்றோ
மாகமட் டுயர்ந்த மாட மேனிலை வதியு மின்னே. 26

நற்றவ முயன்று மாயை நடலையை யவித்து முற்று
மற்றவர் வருத்த நீங்க வனங்கொடுத் துதவி யன்னார்
பெற்றபுண் ணியத்தை யெல்லாம் பெற்றருச் செல்வ மோங்கி
சுற்றமுந் துணையு மேவி வாழ்வரிந் நகரத் தூயோர். 27

ஊனுண வளற னுத்தல் செயப்பெறு தென்ன வூனைத்
தானுணு விரத முள்ளார் தமையுல கிறைஞ்சு மென்ப
வானதால் விதித்த வாற்றி யறநெறி நடப்ப ரிந்த
மாநக ருள்ள மாக்கள் மகிமையாம் வரைதற் பாற்றோ. 28

கண்ணிதி யுண்ணுச் சீலங் காப்பவ ரரச ராகி
யொண்ணிதி யுளராய்த் தேகத் துலப்பிலா வாணு ளெய்தி
பெண்ணிதி தழீஇ மாலைப் புரிதவர் போகந் துய்த்து
தண்ணிதி யடைவ ரென்னுஞ் சாத்திரத் தொழுகு நீரார். 29

(இ-ள்.) அந்நகரத்தில் சூரியோதயமாதற்கு ஐந்து நாழிகை முன்னெழுந்து நித்திரைவிட்டு மகளிர்கள் மனமுள்ள வீடுகளின் வாய்தல் முற்ற முதலிய விடங்களிலும் அலகிட்டு வடித்தெடுத்த நல்ல சுண்ணச்சாந்தினாலும் கோமயத்தாலுமெழுகி கோலபபொடிகொண்டு சித்திரித்து அகிற்பொடியால் புகையூட்டுவார்கள் —எ-று. 23

(இ-ள்) பரிசுத்தமாகச்செய்து பூசிய சுண்ணத்தின் ஒளிவீச மாடவீதிகளுக்கு அழகு தரும்படி நிரைநிரையாய் இரத்தினக்காலுடைய பந்தல் மேற்பரப்பில் மரகதமணியால் இலைபோர்த்து பூவால் தொடுத்த மாலைகளைவிட்டு எத்தினமு மங்கலம்போ லிருக்கின்றன.—எ-று. 24

(இ-ள்.) சந்திரகாந்தக் கற்களால் பொற்சோபூற்றிச் செய்த அழகிய மேன்மாடத்துள்ள நிலாமுற்றமிருந்து அவ்வீதிகளிலே போகின்றவர்களின் சோகநீங்கி இது தேவர்கள் வசிக்கும் பொன்னுலகமே யென்று புகழ்ந்து பேச பனிநீர் தெளிப்பதுபோல் சிந்துவ.—எ-று. 25

(இ-ள்) இளமை பொருந்திய அன்னங்கள் அந்நகரப்பெண்கள் நடையலங்காரங் கற்றுக்கொள்ளவேண்டியோ, குயிலுங் கிளியும் அவர்கள் இனிய சொல்லடையவேண்டியோ, மயில்கள் அவர்கள் சாயல் அழகை யறியவேண்டியோ ஆகாயமளாவிய மாடங்களின்மேல் அனந்தமிருக்கும்.—எ-று. 26

(இ-ள்.) நல்ல தவஞ்செய்து மாயையின் வஞ்சனையைக்கெடுத்து சருவசங்கப்பரித்தியாக முற்ற துறவிகள் பசிவருத்தநீங்க அன்னபானாதிகள்கொடுத்து வேண்டிய மற்றுள்ளனவும் கொடுத்து அவர்கள் சம்பாதித்த புண்ணியத்தைத் தாங்களடைந்து ஒன்றாலும் கெடாத செல்வமுண்டாகி தமது சுற்றத்தினரும் மனைவிமக்களும் கூடி வாழ்வார்கள்.—எ-று. 27

(இ-ள்.) புலாலை யுண்டவர்களை நரகமானது உண்டு மீண்டுங் கக்கமாட்டாதென்ன அப்புலாலை தாங்கள் எப்போதும் உண்ணாத நோன்புடையவர்களை இவ்வுலகம் வணங்கும் என்று மேலோர் சொல்வர் ஆனபடியால் விலக்கியவை நீக்கி வேதத்தில் விதித்த வழியாலே நடக்கின்றவர்கள் இந்நகரத்துள்ளார் அவர்கள் சிறப்பை யாம் சொல்லும் பகுதி யுடைத்தல்ல — எ-று. 28

(இ-ள்) கள்ளென்பதை யுண்ணாத விரதம்பூண்டு மீட்டும் அதைக்காக்கின்ற புண்ணியத்தால் அடுத்த பிறவிகளில், செல்வமுடையவர்களாய் அதை யனுபவிக்கச் சரீரத்தில் ஒருவித நோயுமில்லாமல் ஆயுளும்பெருகி வேனிற்கால மாலைப்போதில் பெண்ணென்கின்ற செல்வத்தைத்தழுவி அவர்கள் சுகபோகத்தை யனுபவித்துப்பின்னே சாந்தமாகிய சுவர்க்காதி பதமுடைவார்களென்னும் சாத்திரங்கற்ற வழிநடக்கு நெறியுடையார் இந்நகரமாந்தர்—எ-று.

பைப்பணி யணியன் வேணி பரித்துமைக் கஞ்சி வைக்கும்
மைப்பணி மரபிற் றோன்று மாண்புடை யவர்கண் மாழை
செப்பணி முலைமி னாருஞ் சிவசினந் தாங்கி யீசன்
மெய்ப்பணி தம்முன் மூவர் விதிப்பணி யாற்று மன்பர். 30

மேழியஞ் செல்வர் கோட்டம் விளம்பிரு பத்து நாலின்
ஊழியு மிருப்போ ரேற்போர்க் குறுபக டுழுதுண் டாய
கூழிடு காத்தர் நல்ல குணமுடைக் களம ரென்றும்
வாழணி மாடப் பந்தி வனப்புறு நியமங் கண்டான். 31

மாயிரும் புவியி லாற்று வக்குமா முனி மகத்தி
னாயிர மாக்க ளாகி யவனியில் வந்தோ ரெல்லைச்
சேயரு ளடைந்து பொங்குஞ் செம்பொனா ரிம்மை வாழும்
பாயிரு டுமிக்கு மாடப் பந்திகட் பலவுங் கண்டான் 32

தெருணிலை வதனாற் பாவஞ் சிறிதுறா கருமம் பூண்டு
பொருணிலை வாற்ற வேற்றப் புனிதமே லீட்டா லீசன்
அருணிலை வடைய நோற்கு மன்புமெத் தவர்க்கு நண்பாங்
கருணிகர் மாட வீதி கண்டது கடந்து சென்றான். 33

புண்ணியத் துயர்ந்த தென்னப் புகழ்சிவப் புனித னாரக்
கண்ணியன் றொண்டை நாடன் கால்வரு மதிபர் செப்பம்
கண்ணுதற் பாகத் தம்மை கால்வரு மதிப ரென்ன
வெண்ணுமா யிரத்துத் தொள்ளா யிரத்தவர் வீதி கண்டான். 34

ஓதலிற் சிறந்தன் றென்ன வொழுக்கநின் றெங்கு மாய
சோதியா கமங்க ளெல்லாந் துகளறத் தேர்ந்த தூய
வேதியர் செயுமுத் தீயும் விமலனென் றியற்று மேலோர்
வீதியைக் கண்டவ் வீதி மேலொரு மரத்தைக் கண்டான். 35

செந்தளிர் மிடைந்து நீண்ட சினைவிடு கொடிகள் பச்சைப்
பந்தரிற் றூங்கு தாமம் பந்தியிற் பக்க மெல்லாம்
அந்திணை யரும்பி பைங்கட் டவிழ்ந்துதேன் றுளித் தலர்ந்து
வந்தளி முரன்று பாடும் வன்னியொன் றிருந்த தாங்கே. 36

(இ-ள்.) படமுடைய அரவாபரணன் சடையில் உமாதேவியாருக்குப பயந்து வைத்திருக்கும் வைப்பாகிய கங்கை குலத்திலே பிறந்தவர் பொன் செய்யுபோலு முலையுடைய மகளிருந் தாங்களும் விபூதி உருத்திராக்கமணிந்து பரமேச்சுரன் உண்மையாகிய திருத்தொண்டினிடத்தும் தங்களுக்குமுன் மூன்று வருணத்தார்கள் ஏவிய தொழிலையும் பிழைவராது செய்யுமவர்கள். —எ-று. 30

(இ-ள்) இவர்கள் மேழிச்செல்வ முடையவர் காமக்கோட்டமாதிய இருபத்துநானகு கோட்டத்தும் என்றுமுளளவர், யாசிப்பவாகளுக்கு எருமையேற்றால் உழுது உண்டாகிய கூழை அன்புடன் கொடுக்கும் கையும் நல்லகுணமுமுடையகளமர்வாழ்கின்றஅழகியமாடவரிசைகளின் தோற்றமுடைய வீதிகளைக்கண்டான்.—எ-று. 31

(இ-ள்.) பெரிய பூமியில் செய்யும் வக்தமகா முனிவர் யாகாக்கினியில் ஆயிரம் பிள்ளைகளாகி உலகில் வந்து வேலேந்திய முருகக்கடவுள் கிருபையுண்டாக்கபெற்ற பொன்னையுடையவர்கள் இப்பொழுது வாழ்ந்திருக்கும் புதுமையான பரந்த இருளையோட்டும் ஒளியுள்ள மாடவரிசைகள் அனந்தமிருக்கக்கண்டான் — எ-று. 32

(இ-ள்) தெளிவாகிய சிந்தனையால் அற்பபாவமும் சேராத தொழில் செய்து மெய்ப்பொருளின் பாவனையால் ஏறிய புண்ணிய விசேடத்தால் பரமேசுரன் கிருபையடையச் செயயும் அன்பும், எவ்வித தவசிகளிடத்து நேசமுமுடைய கருணிகர் வாழ்கின்ற மாடவீதியைக்கண்டு அதைக்கடந்து போனான்.—எ-று. 33

(இ ள்.) புண்ணியங்களிலே உயர்வானது சிவபுண்ணியமென்றே புகழும் ஆத்திமாலை யுடையவனும் தொண்டைநாட்டை யுடையவனுமாகிய சோழன் மரபினர் வீதியும் நெற்றிக்கண்ணுடைய சிவபிரான் ஓர்பாகத்துள்ள உமாதேவியார் காற்சிலம்பிலுதித்த செங்குந்த மன்னவரென்ன மேலோர் நினைக்கும் ஆயிரத்துத் தொளாயிரவர் வீதியையுங்கண்டான் —எ-று. 34

(இ-ள்.) வேதமோதுதலினும் சிறந்தது ஒழுக்கமுடைமையே யென்ன வழங்கு அவ்வொழுக்கவழியே நின்று அகண்டமாயுள்ள சிவபெருமான் அருளிய வேதசிவாகமங்களனைத்தும் குற்றமறக்கற்று கற்றவழி தேர்ந்த சுத்த [illegible] அந்தணர் செய்கின்ற மூன்றக்கினியும் சிவபிரானென்றே செய்யும் வீதியைக்கண்டு அவ்வீதிக்கு மேற்புறத்தில் ஒரு மரத்தைக்கண்டான். 35

[illegible] அந்தமரம் சிவந்த இளந்தளிரால் நெருங்கி நீண்ட கிளைகள் [illegible] பாலும் சவளங்கள் பச்சைப்பந்தலில் தொங்கவிட்ட மாலைவரிசை [illegible] நாற்புறத்தும் அழகிய அரும்புண்டாய் அதன் செழிய முருக்[illegible] தேன்சிந்தி வண்டுகள் வந்து சத்தித்துப்பாடும் வன்னிவிருக்ஷ[illegible] இருந்தது எ-று. 36

வாலினைக் குழைத்துத் தூக்கி மண்மிசைப் புடைத்து நாலு
காலினை மடக்கி முன்னங் காலினி லழுந்து மாறு
பாலனை யணைத்து வைத்துப் படுத்திரு விழியும் பானு
போலொளி காந்த நோக்கு புலிதனைக் கண்டு கொண்டான். 37

மாமல ராயன் செங்கண் மால்பல கலைகள் வேதந
தாமளந் தின்னங் காணுத் தனிமுதல் சம்ப ராரி
சாமளத் தேவி பாகன் தரிசனந் தருதல் காண
கோமளக் கிரண மாலி குணகடல் குளித் தெழுந்தான். 38

பண்டைவல் வினையா னந்தம் பாலனை வாயிற் கௌவி
கொண்டுவந் துண்ண வென்றே கொடும்புலி யுளதென் றெண்ணி
கண்டகண் ணருவி பாய கறையழிந் துளங் கலங்கி
விண்டநாக் குளரமேனி வெயர்த்திது விளம்ப லானுன். 39

கலி விருத்தம்.

பொங்கரா வணிபாய்ப் புண்ணிய புனித
அங்கரா கந்தா லழகிய வடிவோய்
அங்குரா வணியா னத்தநீ யலையோ
சங்கரா யெனையிச் சதிசெயத் தகுமோ. 40

தெள்ளிய செங்காட் டங்குடிச் சிறுவன்
பிள்ளையைக் கொன்று பெரிதருந் தினையோ
வெள்ளியங் கிரியாம் வீடுதந் தனையோ
விள்ளொணுன் முடியா வினைசெயத் தகுமோ. 41

இழித்தவென் றனக்கோ யிழித்துரை யியல்பே
செழித்தநின் மலநீ தீங்கிலா னலையோ
வழித்துணை வந்தான்மகன் கொலப்படு மென்
பழித்துனை யுலகம் பகர்வது நலமோ. 42

கோளரி யெனினுங் குறையிரந் தவரை
தாளரி யாவென் றுருகா வுடையார்
வாளரி புகிரார் வல்லியும் விடுத்தார்
வேளொளி விழியாய் வேங்கையி னுருநீ. 43

(இ-ள்.) வாலைத்துவளத்தூக்கி பூமிமேலடித்து நான்கு காலுமடக்கி முன்காலில் அழுந்தும்படி பாலகனை அணைத்துவைத்துப் படுத்து இரண்டு கண்ணும் இரண்டு சூரியோதயம்போல் பிரகாசிக்கப்பார்க்கும் புலியைக் கண்டுகொண்டான்.—எ-று. 37

(இ-ள்) அந்த சமயத்தில் தாமரைமலருற்பவனாகிய பிரமனும் சிவந்த கண்ணுடைய திருமாலும் அனந்தங் கலைகளும் வேதங்களும் தம்மால் அளந்தளந்தறிந்தும் இன்னமுங் காணப்படாத ஒப்பில்லாதவரும் முதல்வரும் சம்பராரியும், பசுமை நிறமுள்ள உமாதேவியாரை யோர் பாகமுடையவருமாகிய பரமேசுரன் சொரூபதரிசனங் காணவேண்டி பாலசூரியன் கீழ்கடலில் ஸ்நானஞ்செய்து எழுந்தான். – எ-று. 38

(இ-ள்.) முன்னே யான்செய்த தீவினையின் கொடுமையால் என்பிள்ளையை வாயிற்கடித்துக் கொண்டுவந்து உண்ணவேண்டியோ இந்தகொடிய புலி வைத்திருக்கின்றதே யென்று யெண்ணி யெண்ணி பார்த்த கண்ணிலிருந்து நீர்த்தாரை சிந்த வலிகெட்டு உள்ளங்கலங்கி பேசுநாக்கு உளரவும் சரீரத்தில் வெயர்வுண்டாகவும் இதுசொல்வதானான் —எ-று. 39

(இ-ள்.) கோபங்கொண்ட சர்ப்பபாபரணனே புண்ணிய வுருவனே புனிதமுடையவனே விபூதிபபொடியால் அழகுபொருந்திய வடிவுடையவனே குருமாலையணிந்த குமாரக்கடவுளின் தந்தை நீ யல்லவோ ஏ? சங்கரா, பரமா என்னை இந்த சதிசெய்வது சரிதானோ.—எ-று. 40

(இ-ள்) அறிவுடையவராற் சிறந்த திருச்செங்காட்டங்குடி சிறுத்தொண்டன் பிள்ளையாகிய சீராளனைக் கொன்றுதின்றனையோ அல்லது கைலாய பதவி கொடுத்தனையோ சொல்வாயாக யானோ இதந்துன்பம் படமுடியாதவனாயிருக்கின்றேன் காக்கவேண்டும்.—எ-று 41

(இ-ள்) இழிந்தோனாகிய எனக்கு இழிவுபடுதல் இயற்கையே நீயோ ஒரு குற்றமுமடையா நிருமலன் அல்லவா அப்படிப்பட்ட நீயே கருணைகூர்ந்து அடியேனை யாண்டவன் உன்னை உலகத்தார் இவனுக்கு மார்க்கசகாயமாய் வந்தானே இப்போது அவன் பிள்ளையை யோர் புலி கொல்லவிடப்படுமோ என்னும் பழியைச் சுமப்பது நின பெருமைக்கு அடுக்குமோ.—எ-று.

(இ-ள்.) சிங்கமென்றாலும் தன்னை வணங்கினவரை அதன் காலால் அரிந்து கொல்லாதென்று தாருகாவன இருடிகள் உன்மேல் வாள்போலும் நகாயுதமுடைய புலியை யல்லவோ விட்டார்கள் மதனனைத்தகித்த நெற்றிக்கண்ணுடைய பரமனே இதுசமயம் என்னை கைவிடலாமோ.– எ-று 43

கலித்துறை.

பன்னி யின்னணம் புகன்றன னின்றனன் படிவர்
பொன்ன னன்னையாள் புலிவடி லிங்கமாய்ப் பொலிந்து
பின்ன ரன்னதோர் பேரொளிப் பிழம்பதாய்ப் பெருகித்
துன்னி யோங்கிய கண்டமட் டிகமெலாந் துதிக்க. 44

(இ-ள்) இப்படி சொல்லிச்சொல்லி பரம்பொருள் பெருமையும் தன் சிறுமையும் பேசி வணிகன் நின்றான், இப்பால் பரமேசுரனும் பொன்போலுந் திருமேனியும் என்னை யாள்பவனுமாகிய புலிவடிவே ஒரிலிங்கமா யங்கே தோன்றி அதன் பின்னே அவ்விலிங்கமே ஒரு பெருஞ்சோதிப் பகுதியாக அப்புண்ணிய பூமிமுதல் அண்டமுகடுவரை உலகத்தாரால் துதிக்கும்படி விளங்கியது.—எ-று. 44

நின்ற பேரொளி யப்பதி நிலவிமுக் கடிகை
சென்ற சென்றவத் தேசினிற் சிவகணந் திருமால்
மன்ற மாமலர் வானவன் வானவர் வணங்க
மன்ற வாணனம் மனையுட னிடபமேல் வந்தான். 45

(இ-ள்) அப்படி தோன்றிநின்ற அருட்பெருஞ்சோதியானது அங்காமெங்குமூடி மூன்று நாழிகை வரையிலுமிருந்து அத்தேசுமறைய வச்சோதியிலேயே சிவகணங்கள் திருமால் மணமுள்ள மலர்வாசியாகிய பிரமதேவன் தேவேந்திரன் முதலிய தொண்டர் தற்சூழ்ந்துவணங்க கனகசபாநாயகனாகிய சிவபிரான் உமாமகேசுர சொரூபமாய் இடபாரோகணனாக வெழுந்தருளி வந்தார்.—எ-று 45

அந்த ரத்திய மார்த்தன வமரர் பூமாரி
சிந்தி னர்ப்பல தேவர்கண் முனிவரர் திகழ
சந்த மாமறை பேசின முழங்கின சங்கம்
அந்த காக்ஷியா லவசனைய்த் தனதனீ தறைவான். 46

(இ-ள்.) அப்பொழுது தேவதுந்துபி முழங்கின தேவர்கள் பூமாரி பெய்தார்கள் அனந்தமகா இருடியரும் கீதவேத மோதினர்கள் சங்கவாத்தியந் தொனித்தன அப்படிப்பட்ட திருக்காக்ஷியால் வணிகன் பரவசமுடையவனாய் இப்படிச்சொல்லித் துதிப்பான்.—எ-று. 46

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அகரமுத லைம்பத்தோ ரக்கரமா யோரஞ்
சக்கரத்தி னுட்பொருளா யாவையினு மிலதாய்ப்
பகரமா ரோலமிட வாலமிட றடக்கிப்
பயந்தீர்த்து மற்றவருக் கமிர்தளித்து சந்தி
நிகரினடஞ் செய்தருளி காட்டியநின் கருணை
நிலையிருந்த படியென்னே நெஞ்சவல முடையேன்
புகரிலுன பாதார விந்தமது காண
போநதவருட் கென்புரிவே னந்துணையாஞ் சிவமே. 47

பஞ்சமலக் கொத்தாகி மலபாசந் தன்னாற்
பன்னுமிரு வினையிட்டு போகமது நுகரத்
தூஞ்சுமுடற சுமையாகி யின்னுயிராய்க் காணத
தொகையாகி மற்றவையாற் சுகதுக்க மளிப்போய்
அஞ்சுமுகத் தெம்மானே சிறுமானை யேந்து
மம்மானே யிமயமலைத் தவமானோர் பாகா
நஞ்சணியு மிடற்றானே நின்னிலையை யுணரேம்
நாளவமே போக்குமெனை யாளவரு நிதியே. 48

சொல்லாகிப் பொருளாகி யளவைகளுந் தானாய்ச்
சுட்டாகிச் சுட்டிறந்த சுயஞ்சோதி யாகி
யல்லாகி பகலாகி போக்குவர வாகி
யகமாகி புறமாகி யப்பாலப் பாலாய்ப்
பல்லா யிரங்கோடி யண்டவகை யாகி
பார்ப்பவனு மாய்ப்பார்க்கப் படுபொருணீ யானால்
நில்லாத வாக்கையுளே னெத்திறத்தா லுந்த
நிலையுணர வலனென்னை யாளுடைநின் மலனே. 49

விண்டமருங் கூர்பாண்ட முனதுதிரு வடியே
மேனின்ற பிரமாண்ட முனதுதிரு முடியே
கண்டதிசை யோரெட்டு முனதுபுயா சலமே
கடலாடை கடலுறுதீக் கண்ணுதற்றீ காற்றே
கொண்டெழுமுச் சிருசுடரு மிருவிழியே யாமுன்
கோலமெனி லெங்கிறைஞ்சி யெங்குவலம் புரிவேன்
எண்டகுசீ ருடைமுவி லைச்சூலப் படையா
யென்செயலே துன்செயலா மெங்குநிறை சிவமே. 50

பதியாகிப் பசுபதியாய்ப் பசுபாசந் தானாய்ப்
பரமாய பரமாய்ப் பரம்பரமாய்ப் பசுவின்
மதியாகி மதியாற்று மிருவினையாய் வினையால்
வருமரண பவமாகி பவத்திரயத் திரய
விதியாய வைப்பொசிக்கு மெய்யாகி யுயிராய்
வினைமலங்க ளில்லாத சத்தினிபா தத்தால்
கதியாகி சிவானந்த வடிவாகி நின்ற
கத்தவுனை யெத்திறத்தா கண்டறிவ லெந்தாய். 51

நாதமாய் விந்துவாய் நாதாந்த மாகி
நவநவமாய்த் தோன்றுபரா மானந்த மாகி
வேதமாய் வேதநதி னுபனிடதப் பொருளாய்
விரிந்தமறை யாறங்க மாகிசிவ ஞான
போதமாய் நிற்றியெனி னெப்பொருளி னுன்னை
போந்தறிவ தறிவாகி யுட்புலத்துக் கெட்டாய்
ஆதலா னுபடியேன் கட்புலத்திற் றோன்றி
யறிவித்தா யறிவுறுவ லல்லதிலை யெந்தாய். 52

காண்பதுநின் னுருவென்றாற் சடமென்றே புகல்வார்
காணாத பொருளென்றாற் பொய்ப்பொருளென் றுரைப்பார்
மாண்புடைய சமயமெலாம் பல்பெயரிட் டுன்னை
வாதிட்டு முடியாது மாறுறுவ ரதனால்
ஆண்பிறப்போ பெண்பிறப்போ வல்லதலி பிறப்போ
யாதெனநின் றிருவுருவை யறிவுறுவ லெந்தாய்
பூண்பணியா யம்புலியா றணிவேணி முடியாய்ப்
புலியுடையாய் யெனையுடையா யென்றடியைத் தொழுதான்.

அக்கணமே யப்புனிதன் புண்ணியவேற் றத்தா
லாயவிமா னத்தேற்றி யன்னவனை யங்கள்
மைக்கணுடை யில்லாளைப் புலிவாயின் மீண்ட
மைந்தனையு நம்பதமாங் கைலாய கிரிக்கே
மெய்க்கணங்காள் கொடுபோவீ ரென்னவா னோத
விண்ணவர்பூ மழைபொழிய வின்னியங்க ளார்ப்பச்
சிக்கெனவே கொடுபோந்தா ரிவ்வுலகம் வியக்கச்
சிவனந் தாத்தாள மாயினனப் பொழுதே. 54

(இ-ள்.) [அப்புனிதனுகிய வணிகன் சிவபெருமான் திருக்காட்சிப்பேற்றைக்கண்டு கண்டுவந்து வாழ்த்தி வணங்கினன்] அந்த கணப்போதிலேயே அவன் புண்ணிய மேலீட்டால் உண்டாகிய புட்பக விமானத்திலே அவ்வணிகனையும் அவன் பத்தினியையும் அவன் பிள்ளையையும் நம்முடைய பதவியாகிய கைலாயமலைக்கு நமது சிவகணங்களே நீங்கள் ஏற்றிக்கொண்டுப்போவீர்களாகவென்று பரமேசுரன் கூறியவுடனே தேவர்கள் பூமாரிபெய்து அந்தர துந்துபி முழங்க இவ்வுலகத்தார் அதிசயிக்கும்படிக் கொண்டு சென்றார்கள். அந்த கணப்போதிலேயே சிவபெருமான் அந்தரத்தானமாயினர்.—எ-று. 45

பல்லுகமு நந்தாத சிவபுரத்தே யமர்ந்தான்
பண்டையடி யவரோடுந் தொண்டனெனச் சேர்ந்தான்
அல்லலொன் றுமில்லாத சிவஞான போதத்
தறிவாறி யற்புத சிவானந்த முற்றான்
நல்லவொரு தைத்திங்கட் பூரணையா திரைநா
ணந்நாளி லந்நாளி லிப்புவனத் தடியார்
வல்லியகைக் கருவுருவை சிவகாட்சி தன்னை
வைகறைக்கண் டேத்தினர்க ளையனருட் சேர்வர். 55

(இ-ள்.) அனந்தவித யுகமுடிவினும் அழிவற்றுள்ள சிவபுரம்போய் பழய அடியார் கூட்டத்தி லொருவனுகச் சேர்ந்து உபசாந்தமடைந்து ஒருவித துக்கமுமில்லாத சிவஞானபோதத்துண்டாகிய தான் முன் கண்டறியாத அற்புதமுடைய சிவானந்தங்கொண்டிருந்தான். அவன் அப்படியடைந்தது தைமீ பூர்வபக்கம் திருவாதிரை நாள் அந்தநாளில் இந்த உலகத்துள்ள சிவநேசர் பாலனைபபுலி முன்காலில் அணைத்துவைத்திருந்தபடியும் பின்சிவபிரான் காட்சி தந்தபடியும் சூரியோதயத்தில் கருப்புலீச்சுரர் கோபுரவாயிலிலெழுந்தருளக்கண்டு தரிசித்து வணங்குவார்களாகில் அவர்கள் அப்பரமேசுரன் திருவருளைப்பெற்று வாழ்வார்கள்.—எ-று. 55

ஈதுரைத்தாம் வழித்துணையாய் வந்ததலாற் புலியாய்
எடுத்தவனைத் தடுத்தாண்ட காதைவகை யென்ன
தாதவிழுஞ் செங்கடப்ப மாலையணி முடியெம்
சாமியருள் செய்தலுமே சரணமலர் வணங்கி
காதளவு மோடுகணும் வேலுடைய சாலி
கணவனெனி னித்தலத்தை முன்னமெவர் கண்டார்
ஓதெனவே வோங்காரத் துட்பொருளை யீசர்க்
குரைதந்த குருபரனு ரைதன்மே யினரால். 56

(இ-ள்.) பரமசிவன் வணிகனுக்கு மார்க்கசகாயமாய் வந்ததல்லாமல் புலியாகவந்து அவன் பிள்ளையை வாயிலெடுத்துக் கொண்டுபோய் வலியவந்து தடுத்தாண்டுகொண்ட சரித்திரத்தின் பகுதியை உரைசெய்தோம் என்று முருகக்கடவுள் சொல்லக்கேட்ட காதளவுந் தாவும்படி நீண்ட கண்ணுடைய அருந்ததி நாயகனாகிய வசிட்டமுனிவர் அம்முருகக்கடவுள் திருவடியை வணங்கி ஸ்வாமி இச்சரிதம் இப்படியாகில் இத்தலத்தை முன்னே யாவர் பூசித்தவர்கள் அநாதியிலுண்டான காரணம் சொல்லியருள வேண்டுமென்ன பரமேசுரனுக்கே பிரணவ இரகசியப்பொருளை யுபதேசித்தருளிய குமரகுருபரன்சொல்லத்தொடங்கினன்.—எ-று 56

திருச்சிற்றம்பலம்.

சிவகாட்சிப்படலமுற்றிற்று

ஆக படலம் ௭-க்கு திருவிருத்தம் ௩௬௫.

பூர்வகாண்டமுற்றிற்று

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## 2-வது உத்தரகாண்டம்.

# விண்குடியேற்றுப்படலம்.

---

விநாயகர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கன்னித் தேறன் மாந்திமது காங்கண் முரல வலாலரோன்
முன்னித்தேரி தந்த நலார் மோக னறுகு மந்தாரம்
வன்னித்தோந் தர்ச் சித்தார்க்கு வாதன்சரத சுருதி மணி
சென்னித் திருமந் திரவுருவன் ஏவ னவன்றாட் சிந்திப்பாம்.

ஆந்தன் றொழுூர்பர்க் கின்பளிப்பா னரியா சனத்திற் றருநீழல்
வேந்தனாதி சுரர் முனிவர் வீரரெவரும் வாழ்த் தெடுப்ப
சேந்த னொருமான் றருமடமான் றெய்வ யானை யென்னமுத
காந்தனினிது வீற்றிருப்பக் கண்டான் கமல னகத் துதித்தோன்.

வேறு.

கண்மணி யதனுட் டோன்றுங் கருமணி கோள்கண் மூல
விண்மணி பகலிரா வின் மிளிர்மணி யுலக மீன்ற
பெண்மணி யகட்டுட் காந்து பெருமணி யெழுதாக் கேள்வி
சொன்மணி மணிகட் கெல்லாஞ் சுப்பிர மணியே போற்றி. 3

தொழுதகு பொருளா ரென்ன தோய்ந்தறிந் தாசை நீத்து
கொழுத்தசத் துவங்க ளாற்று கோட்டமுட படுத்தி தாணு
யழுத்திய சிவமாய்ச் சத்தா யன்பர்தந் நனவிற் போந்த
சுழுத்தியிற் பழுத்த சோதி சுப்பிர மணியே போற்றி 4

இன்னணம் வழுத்தி யெந்தா யீங்கவுட் கரித்தோ னஞ்சம்
பன்னகம பரித்து வாளின வாங்குவள் ளுகிர்ப்ப தத்த
புன்னை முரிவை வீக்கு புனிதன்மற் றுழுவை யாகி
மன்னர்பின் னவர்க்குத தந்த வாழ்வருள செய்த தோர்ந்தேம்.5

அக்குடி யேற்ற நல்லூ ராதியை யணுதி யாக
வெக்குடி பிறந்தார் பூசித் தெப்பதத் துய்ந்தா ரால
மைக்குடித் தமரர் காத்த வாதனுக் கிருக் கிருக்கு
முற்குடி லைப்ப தார்த்த மொழிந்தனை பொழிதி யென்ன. 6

கற்பினின் மாண்ட சாலி காதலன் றெழுதெங் போல்வார்க்
கெய்ப்பினில் வைப்பேயென்ன விருகரங் கூப்பக் கந்தன்
செப்புறழ் தனப்பா லாரற் றிருந்திழை யவர்க ணல்க
கைப்பிடித் துண்ட செவ்வாய்க் கனிகனிந் திதனைக் கூறும். 7

மாயைபே சுத்தா சுத்த மல்லதோர் மானென் கின்ற
மாயைவா னவர்க ளாற்று வருபழி வாங்க வந்த
மாயைபே யதி விராம மானினி யாகிப் பூவின்
மாயையை கடந்த காசி பப்பிர மாமுன் வந்தாள். 8

மண்பொது தந்தை வேத னெனச்சுரா சுரமக் கட்கே
முன்பொது தந்தை யானும் மோகமுற் றவர்க்க ணங்கார்
பெண்பொது காண்டி யென்ன பேசினள் பேதை யையன்
கண்பொது நோக்க நீப்பப் போயினக் காணக் கொள்ளா. 9

தோதக நெஞ்ச வஞ்ச சுந்தர மகளிர் தங்கள்
காதொடு பொருது நீண்ட கண்வலைப் பட்டார் மீளார்
மாதவ ரெனினு மென்று மறைமொழிக் குறை வாராமற்
போதனம் மடந்தை கொங்கைப் போகமுட் பட்டா னம்மா. 10

கலவியிற் றிளைத்த மாயைக் கருப்பமுற் றுயிர்த்தாள் தெய்வப்
புலவரும் வெருவச் சூர பதுமனென் புதல்வன் றன்னை
வலியவந் தணைந்த நங்கை மாதவன் சுகத்தாற் பின்னுங்
குலவுகே சரியாய்ச் சிங்க முகனெனுங் குழவி யீன்றான். 11

மீட்டிப மாகித் திக்கு விசைபனுந் தாருகப் பேர்
கோட்டுடை மகவைத் தந்து குதூகலக் காமக் கண்ணாள்
வேட்டுரு வலிபூ வாளி மெய்யெலா முருவிப் பாய
ஆட்டுரு வாகிப் புல்லி யசமுகி தன்னைப் பெற்றாள். 12

காசிபன் றெருட்ட மக்கட் கடுந்தவக் கனனீ ராக
ஆசுசு முகப்பெண் ணேற்ற வருந்தவத் தமலன் போந்து
பேசின னுய்ந்தா ரீந்தான் பிறங்குமா யிரத்தெட் டண்டத்
தீசனும் வண்ணம் பெற்றா ரெண்ணிய வெண்ணி யாங்கே. 13

வாரணத் திடையிற் பூத்த மகேந்திரத் தகண்ட போக
தாரண னாகிச் சூரன் றனையனு லனலிற் கண்ட
ரூருண வளித்துப் போகி யொருமக னுதி தேவர்
காரண விதியோ வென்னக் கடுஞ்சிறைக் கண்டா னன்றே. 14

மாபதந் தணந்திந் த்ராணி தன்னொடு மகவான் பானு.
கோபனுக் கிரிந்து சோர்நது குவலயம் பூத்த பதம்
நாபனே முதலாந் தேவ கணத்தொடுங் கைலை நண்ணி
காபரம் பொருணீ யென்ன வணங்கின னுடலக் கண்ணன். 15

நந்தனு வாய வோங்க னுடுமெண் கிரியின் மஞ்சு
விந்தமன் மகளை வேட்ட நாளெழுங் கந்த வேளா
னுந்தமக் கிடுக்க ணுற்று சூரக நூறி நும்மூர்
தந்தருள் செய்வ லென்றான் றாழ்ந்தவிர் திரார்க்கெம் மையன். 16

போகிகேண் மதிநீ கன்ம பூவுல கடைந்து காழி
யேகிநங் குறியைச் சின்னா ளேத்தியத் தலந் துதக்கு
நாகிளந் தருவான் மிக்கு நந்தியஞ் சார லுண்டாய்
வாகினின் மாண்டபாலி வளத்தரங் கினிமை நோக்கும். 17

மீக்கவுண் டிஞ்ச வுந்தி சங்கமாம் வேணித் தீர
மாக்கலி சந்தேன் பொங்கு மரநிழ லார்ந்த நந்தந்
தூக்கன விலிங்க பூசைத் தூவினை யாற்றப் போதி
நீக்கமி லன்ப வென்று னிமலனு துணர்சு ரேசன். 18

மீண்டுசெந் தமிழ் முனூலான் மெய்புழு வலன்பின் செந்தேன்
பாண்டவத் தநும்பிச் சிங்க பாடுழு வடிகட் பாடற்
பூண்டாற் றலத்தி னென்றும் பூந்தரா யாதி யேத்தி
காண்டகு நல்லூர் வன்னி நிழலமர் கடவுட் கண்டான். 19

கண்டகண் பனிப்ப வந்த கரணமுட் களைகண் மீற
விண்டநாக் குளர யாணர் மெய்யெலாம் புளகம் போர்ப்ப
பண்டய வசம்போ யன்பிற் பரவச னாகிப் பூவிற்
றண்டெனப் படிய வீழ்ந்து பணிந்தெழுந் திதனைச் சாற்றும். 20

கலிநிலைத்துறை.

கடலேயலை யதுவாரிய கனமே யெழு மனமே
படராதொரு வகையா யுனைப் பணிவேன் வருதுணையே
பிடரானது விடவே யெனக் கின்னாளருள் பண்ணாய்
சுடரேதிரு நல்லூராபரஞ் சோதி யுனக் கபயம். 21

தரையாய்ப் புன லனலானய வளிதானய
பரையாம் வரை தருமானிட பங்கா பவபங்கா
புரையாதொழி கின்றேனுனை யல்லால் கதி யில்லேன்
துரையேதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 22

காயாமல ரன்னானடி காணா மலை யானாய்
சேயாயெமக் கெளியாய்பர சிவனே யருள் பவனே
தாயாய்வரு வாயேயிது ததியே தருங் கதியே
தூயாதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 23

இகமேவிய சுகமேபர வின்பே யென தன்பே
நகமாதொரு பாகாவர நதிபா யிள மதியா
மகமேசெய வல்லார்தொழும் வள்ளா லருள் விள்ளாய்
சுகமேதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 24

கணையேவிய மதவேடனை கன லாக்கிய வனலே
மணியேமா கதமே யொளி மன்றாடிய வொன்றே
யிணையாருனை யெனை யாதிரி யீசாபர மேசா
துணையேதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 25

வில்லாமலை யெடுத் தேந்திய விமலாவரு நிமலா
கல்லாதவ ருடனாயினன் கலவா வகை யலவா
நல்லாரென லதுநான்பெறு ஞானஞ் சுக மோனஞ்
சொல்லாய்திரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 26

பெரியோனென மறையோதிய பெம்மா னொரு கைம்மா
வுரியாமறி மழுவேந்திய வொன்றே குணக் குன்றே
விரியாமன முனதாளொளி மீதா தலை யோதா
துரியாதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 27

கதியேவரு மதியேயிளங் காவே யலர் பூவே
விதியேதுணை யல்லான்மன விரும்பே நறு கரும்பே
தகியேயிது தாயேனயருட் டாயே யென நாயேன்
துதியேதிரு நல்லூர்பரஞ் சோதி யுனக் கபயம். 28

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தீதில வியற்றி முன்னஞ் செய்கரு மத்தா லிந்த
பூதலத் துதித்து சைவப் புனிதரா யறமெண் ணான்குங்
காதலி யுடன்வ ழாது கண்டுவா னுறையுந் தெய்வ
மாதவத் திருந்த தேவர் மற்றெது புரிந்தார் கொல்லோ. 29

பதக்கருத் துடைய னாகி பாரர சாண்டு மேனாள்
மதக்குறும படக்கிச் சொன்ன மட்டில வழங்கி செய்யுஞ்
சதக்கிரு தத்தாற் றெய்வத் தலைவனா யிருந்தே னெந்த
கதப்பாவம் புரிந்தே னோரன் கண்ணுதற் பெரும விந்நாள். 30

அசுரகோ மகனுற் பொன்னு டனற்கிறை யானதந் நாள்
வசமென தரிய மைந்தன் வானவர் பட்டார் மற்றோர்
உசிதமா மலைக்க னுற்று ரொருவன் யானுனை யடைந்தேன்
சசியணி சடில நின்றாட் சரண்சர ணெனத் துதித்து. 31

நந்தியங் கிரிநின் றோடு நதியறற் படிந்து நீற்றை
மந்திரத் தொடுமெய்ப் பூசி மலர்க்கொடச் சமிநன் னீழல்
சுந்தர விலிங்க பூசைத் துகளறப் புரிந்து சின்னாள்
இந்திர னிருந்தான் பின்னை நிகழ்ந்தவா றியம்பக் கேண்மோ. 32

வேறு.

கோசச் சிமிழ்ப்புண் டெடுத்தபவங் குறையா தோங்கு மநாதிமல
வாசத்தந்த கரணமதன் வசமா யறுதி யறிய வொணு
பாசத் தருக்கை யகன்றொழிந்த பசுவுட் டதும்பும பரமசுக
நேசத்தமல னுலகின்ப நினைந்தே மலைமா னுடனிருந் தான். 33

நறவ மமுத மெனத்தூற்று நாட்பூஞ் சினைய தருநிழலை
யறவுந் தரும நெறியில்லா வசுரர் மாமாங் கல்லெறியாற்
றுறவு பூண்ட பக்கியின்வெந் துயராற் றுறந்த வமரேசன்
புறவுட் டெய்வ முதலமரா ருடனே கைலைப் பொருப்படைந்தான்

ஈர மனத்தா னன்புடையார்க் கின்பங் கருதுங் கைலையதி
கார நந்தி வானவன்றன் கருணைக் கிலக்காய் முற்றால
நீர விலிங்கக் கடையடைந்து நிமலன் றிருமுன் னிரைநிரையாய்
ஆர வணங்கு மும்பருள மறிந்தா னெல்லா மவனுனன். 35

ஐந்துமுகத்தோ டதோமுகஞ் சேர்ந் தாறுமுகமா யறு நுதற்றீ
சிந்தும் பொறியே கடையனலாய்த் திசைக ளண்ட மூடுருவி
யுந்தவஞ்சிப் புகவிடமெங் கென்ன வண்டர் ரோட் டெடுப்ப
விந்தமகட்கா லணிமணிக ளுதிர வெருவிப் புரம் போந்தாள். 36

பரமனதனைச் சுருக்கியன லகிலக் தாங்கப் பணிப்ப வவர்
கரமார்ந் தேகி சரவணத்தில் விடுப்பவாறு கான் முளையாய்
விரவியறுமீ னமுதூட்ட விசாகன் வளர வாங்க ரன்பாற் [தால்.
றருமச்செல்வி யுறுவெளியே யொன்பான் மணியுட் டதும்பிய

சுரும்புமொய்த்துண்டாட்டயருஞ்சுரிமென்குழன்மீர்வருகவென
அரும்பி யகலமிடங் கவர்ந்த வம்ம மையுண் ணரிமதர்க்கண்
கருப்பின் கிளவி மாணிக்க வல்லி முதலாங் கன்னியர்கள்
விரும்புஞ் சிவத்தாழ் கருவுயிர்த்தார் வீரவாகா தியர் தம்மை. 38

முத்தி முதலா யண்டவகைக் குழுவ லன்பின் முன்னிற்கும்
சத்தி சிவம்போய்ச் சரவணனைத் தாங்கியயில் வேற் கையுதவி
வித்தி மூல மனுத்துணையாய் வீரங் கேளாய்க் கைவாகென்
சித்தி வாய்ந்தார்க் கீட்டியெனுஞ் செங்குந்தந் தந்தது புதல்வர்

எவரேவை சிந்திக்கி னில்லை யென்னு துக வைந்து
காவினீழற் றணந்தின்னற் கண்ணுர்ந தெம்மை யபய மெனும்
தேவ சேனு பதியாகி செறிசூர பதும னகம
மேவுமும்பா சிறைமீட்டி யென்றான் விசாக னது நேர்ந்தான். 40

வாசங் கமழுங் குலலையந்தார் மருமம் பொன்வாழ் தருவானேன்
மாசி லன்னே னுந்திதிரு மலரோன் கனக வளநாடன்
பூசற் கருதும் புலவரொடும் புறம்போந் தறுமா முகப்பெருமான்
தேசி னிந்த்ர ஞாலமெனுந் தேர்முன் னிற்கச் சிவமதலை. 41

வீர ரிலக்கத் தெண்மரொடும் வெள்ளியசலக் கண்ணுதற் றூய்
சார விடைகொண் டொருகுருகு நாமக் கிரியைத் தாரகனை
பார வடிவேற் கொடுகடிந்தங் ககன்று செந்திற் பதியணுகி [ன்.
சூர னகங்காண் கெனமொய்ம்பற் றூதுவிடுத்தா னவன் முன்னே

கலிவிருத்தம்.

-த்தர மளித்தவிறை யொண்டிரு மலர்த்தாள்
த்தமக லாதுமலை சென்னியி லிருந்தே
ரத்தமிறை யாரலமு ழுங்குபெரு நீர
த்தியுண் மகேந்திர மனன்சவை குதித்தான். 43

ழிநடு வுண்ணம தவைக்கணொரு வைவேல்
ாழியென வந்தவா வைச்சொலென வள்ளல்
ாழியபு ரத்தசுர பண்ணவர் சிறைக்கிந்
ழிவிடு வில்லெனி னடச்செரு [illegible]றற்கே. 44

என்னவசு ரேசனக முங்கணு மெரிந்தே
அன்னவனைப் பற்றெனுமு னுயிர விலக்கச்
சன்னத நிசாசரர் தருக்கநம தையன்
உன்னுமு னமன்புர முயிர்ச்செல வொறுத்தான். 45

அக்கண மெழுந்தசுர னுருயி ரெனச்சொன்
மக்களிற் சிலர்ப்பொருத மண்டமர் கடந்தே
மிக்கவெழு வச்சிர சுவாகுவெ னெடுத்தா
துக்கவொரு கோபுர முறுத்ததி னடித்தான். 46

டாசிலையு குந்தவடி வேல்கொடு பகைத்தார்
நாசமுறு மாவெருளி நகர்ப்பொடி படுத்தே
வீசலைய வேலையிலி றைத்துவெளி மீள
காசக முடைக்கனக னைப்பய முறுததான் 47

வந்துநம தாறுமுக வள்ளலை வணங்கா
பந்தமுடை சூருமை பகைத்தன னெனச்சொன்
முந்துமுன் மகேந்திர முதுப்புர மறிந்தே
விந்தைமிகு பாசரை விதித்ததி லிருந்தான். 48

ஆதறி தருங்கொடிய னுயிர மடங்கல்
போது விரதந்தலை பொருந்துபு வெழுந்தே
கோதுறு பறந்தலை குதித்தனன் மதித்தின்
றேதரு முகப்பிளை யெதிர்த்தனை சொலென்றான். 49

செய்வதறி யாய்நெறி திறமயினை நடுக்காண்
டெய்வத மொறுக்குமென வேறிலை மறந்தாய்
வைவதரி தாசமர் வளர்த்தனை பிழைப்பே
துய்வதிலை யென்றன னுயிர்க்குமுயி ரானான். 50

கற்றவர் மனக்க ணகலாதருள் கருத்தா
சொற்றநெறி யேபகை சுரக்கவ சுரேசன்
விற்றொடை தொடுத்தமர் விளைப்ப பலபூத
முற்றரி தாக்குநன் முனைந்த வனைமோத. 51

ஐயனம ராடலி னயர்ந்தசுர னந்நாள்
உய்யவய ஞளினி லுருண்டிடபல னீகம்
நையுமலை விற்றருவ னந்தன ரிமந்தார்
செய்யநவ வீரரை சினந்தவர் காத்தே. 52

மொய்ம்பனை முனைந்தனலி கோபனொரு முந்நாள்
வெட்பினி லனந்தவித மாயையிலு மாள
அம்பிலு மலிற்பொரு தகங்கைசிக ரம்போய்
இம்பரி லுடற்கதி யெழுந்ததுயி ரிற்றான். 53

கலித்துறை.

துறக்க மாரழ லூட்டிய சூர்மகன் வீரம்
சிறக்க வாகைவேய் செய்யகுந் தந்தத்தவன் காத்தால்
இறக்க வாற்றொணு பழங்கணுற் றிகற்பொரக் கருதி
மறக்க ஞளிமா முகவனுக் குறைப்பனிம் மாற்றம். 54

பாலரு தவாய்க் கந்தவே ளெனும்பசுங் குழவி
பாலரு துறழ் வாறறிட நொந்தபல் லனீகம்
கோல நம்மகார் மொய்ம்பனு லொழிந்தனர் குகனை
ஞால வாய்க்கரும் பொனச்செயப் போதிநீ யமர்க்கே. 55

என்ன வேவரை பகவெறிந் தோன்றிர மெண்ணி
பின்ன வன்சொலுஞ் சிவன்றரு மதலையாம் பிள்ளை
சொன்ன வண்ணமிச் சுரர்சிறை விடற்றருஞ் சுகமே
முன்ன வாவெனச் சூரறமுனிய மொய்ம் முயன்றான். 56

ஆயி ரத்திரட் டியகரத் தம்புவான் பெய்து
சேய கக்கிருத் திமப்பெருந் திரளைவாய் மடுத்து
பாய செங்களம் வெறுங்கள மாக்கினன் பகவன்
காய யிற்கொடு பொருதவந் தனகனக் களத்தே. 57

ஒற்றை ஞான்றரி முகத்தவ னெதிர்த்தனற் பிழம்பா
உற்ற வத்திரம் பொழியமற் றவன்சிர முருள
வெற்றி வேல்விடுத் தத்தமு மீட்டெழா விளையாட்
டுற்ற மாடின னிறைசுர ரகமகிழ்ந் சிறப்ப. 58

களமு ருண்டனன் சிங்கமா முகனெனுங் காளை
இளவ னென்றகங் கொதித்தெழுந் தெண்ணில்கோ ளரிகள்
பளகு வையமேல் வந்தசூர் கண்டனன் பலந்தீர்ந்
துளர கத்தறி சாமியை யுறைப்பதென் னவன்சீர். 59

காண்டி யாண்டவன் பிள்ளையென் கைவல மெனக்கோல்
தூண்டி முற்பொரு பாரிடந் துடிதுடித் தயர
மாண்ட வாருடை வீரரைப் புரந்தர வாட்ட
ஆண்ட லைக்கொடி பண்ணவ னம்புவிட் டார்த்தான். 60

அண்ட பித்திகைக் கப்புறத் தண்டமுள் ளனீகம்
எண்டொ கைப்படை யுமிழ்வன வென்னவந் தழிந்த
புண்ட யங்ககத் தசுரனுன் மற்றவற் பொருது
விண்டி றித்தனன் முருகவேள் பின்செல விரைந்து. 61

சத்த சாகரந் தீவமட் டக்குலா சலங்கள்
புத்த லர்த்தரு நீழன்மாற் புரமயன் புரமெண்
ணத்தி லாவகை யண்டமும் படர்ந்தம ராடி
இத்த னைக்கணே யிருண்முத லுருவெடுத் தொழிந்தான். 62

புக்க மர்க்களம் புதைந்தசூர் நடுவறு வரத்தால்
மைக்க டற்றலை சடையலைந் திணரிலை வளர
செக்க ரந்தளி ரீன்றபற் சினையுடைத் தெவ்வாங்
கொக்கைச்|சட்டியிற் சுட்டனன் சுரர்நக குமரன். 63

இரு பெயர்ப்பெற வொருசடங் தாங்கிய விகலோன்
கரு விருந்தகம் பரையுரு வாயவேற் கடக்க
தரு விரண்டெனத் தகர்த்ததின் மஞ்ஞையா யொருகூ
றுரு வருந்திர மறிந்தறு முகப்பிரா னூர்ந்தான். 64

அந்திற் போழ்படக் கிடந்தகூ றண்டலைக் குருகாய்
வந்த தைக்கரத் தேந்தினன் றுவசமாய் வள்ளல்
அந்த ரத்தவர் கற்பக மலர்மழை யமிதஞ்
சிந்தி வாழ்த்தினர் சேயர விந்தவஞ் சரணே. 65

பாக சாதன னாதிய பண்ணவர் குழுமி
தோகை மாமயில் வாகனப் பரமனைத் துதிக்க
மாகதிர்ப் பகை பகைமுதல் வீரர்கண் மன்ன
மோக மாறிய முனிவரா வாழ்த்தநம் முருகன் 66

ஆழி நாப்பணெவ் வத்தமும் பொலிதரு மஞ்சூர்
பாழி யுட்புகா சயிந்தனு தியர்சிறைப் பறித்தந்
நாழி யேகினன் பொன்னுல கத்தக நணுகி
ஊழி யுள்ளபோ லாக்கினன் வளமெலா மொருங்கே. 67

கண்ண கன்புவி மேருமால் வரைகடற் கணக்கில்
புண்ணி யத்திடந் தொறும்படர்ந் தலைதரும் புலவர்
எண்ண லர்பய மொழிந்தவ ராகிவந் திருப்ப
விண்ண கங்குடி யேற்றினன் விசாகனிந் திரற்கே. 68

முனிவ ராதிய பதினொரு மூவரே முதலா
இனிய வொன்பதை யிரட்டிய கணங்களுந் தெய்வ
வனிதை யர்க்குழா மலிதர சசியொடு மகவான்
புனித வாசனத் திருத்தியே புனைந்தனன் மகுடம். 69

தன்று ணைச்செய விலக்கரு மெண்மருந் தருக்கால்
ஒன்று நீழலிற் சூழ்வர வோகரச் சிறகர்
மன்ற வையயி விலகவந் தலகில்பல் வளனுங்
குன்று றுபரங் குன்றக மிருந்தனன் குமரன். 70

சேய வெங்குலி சத்துணற் றேனிடை வழுக்கி
வீய வீயுருண் டெழுந்தலர் மிசைத்தமர் துளவ
மாய னம்புயர்க் கென்னுயி ரரும்பெறன் மகளை
சேய வர்க்கொளத் தருவலென் றுனவர் தேர. 71

கனக நாட்டிறை கடவுள ருடன்பரங் குன்றுள்
அனக னம்புயச் சீறடி யேத்தினை யைய
எனத ருங்குலக் கொழுந்தையுன் குலமனை யாக்க
மனமு வந்தன னெனக்குமென் றென மகிழ்ந்தான். 72

கடுத்து புந்தியிற செலச்சிலச் சூதரைக் கருதி
படியி லந்தரம் பாதலத் தரையரை நப்பூங்
கொடியென் றெய்வதக் குஞ்சரிக் கறுமுகப் பாற்கு
கடிமணச் செயனாளை யென்ற றைகெனக் கணித்தான். 73

எண்ணி லொற்றர்கட் படர்ந்தனர் பிற்குக னிருக்கை
கண்ணொ ராயிரக் கண்ணனோ மயற்கொடு கனக
வண்ண மண்டபஞ் சோலைபூஞ் சாலைகண் மன்றந்
தண்ணந் தாமரைத் தடமட மணிபெறச் சமைத்தான். 74

முற்பி றப்பிடு கூவிளத் தாசனு முசுப்பேர்
பொறப டைந்துல கேவையும பொறும்பரை புனித
சிற்ப ரைச்சா ணுபுர தாற்பவத் திரலோர்
தற்ப ரத்துற *குந்தனென் பேருடைத் தலைவன். 75

ஆதி பூதலத் தாசரு முனிவரு மமரர்
நாத னேவிய தூதர்போய் குகன்மண நாளை
போதி யென்னுமுன் கையுறைக் கொடுகடற் புரண்ட
நீதி வந்தனர் தேவர்தஞ் சதியுட னிரைந்தார். 76

மகப திப்பதி வந்தவர்க் கின்சொலான் மலர்ந்த
முகம னேதின னவரவர்க் கிருக்கைகண் முடிப்ப
நகும லர்த்தடம் பூம்பொழிற் காவண நலங்கூர்ந்
திலகு மண்டபத் தெள்ளிட விடமிலா திருந்தார். 77

வண்டு ருமலர் கைபுனைந் தியற்றெருணை வழுவ
அண்ட ராயமுட விளரியம் பண்ணிசைத் தூற்று
வண்ட ருக்குழற் பூதல மடந்தையர் மணப்பூ
கண்ட வண்டென தேவகுஞ் சரிபுரங் கண்டார். 78

அன்ற லர்ந்தவம் போருக மலர்ந்தசூற் கொண்மூ
வென்ற வண்ணனம புயத்தணல் வெண்மணிக் கோயில்
சென்று ளன்பொடு திருமலர்ச் சேவடித் துதித்து
மன்ற லாற்றிட வாரண மகள்வர வென்றா 79

---



* குந்தன் - முசுகுந்தன்.

வேத முட்பொரு ளாகிய வெண்மயி லிவர்ந்து
போர்த நந்தியங் கணத்தசெங் குந்தர்கள் புரமே
தாதி யேவலி நிற்பநீ டுருநெறி யகன்று
சீத வாரண தேவியின் னிடப்பால தெரிய. 80

நீலக் குன்றுறண் மஞ்ஞையி னின்றிழீஇ மேல
வேல ஞலப விமான முன் வருதலு மகவான்
சேலு லாயவிழி புலோமசை பாறகொடு சேந்தன
கால் விளக்கினன் மணவணை யமரவக் காலை. 81

தேனை வென்றவந் தீஞ்சொலித் தேனு நுதற் தெய்வ
யானை யைப்பால னைம்புறந் தூழுநகெனை வலர்பூங்
காலை வென்றமை புயகதுணை கமலேய முதல
வான மங்கையர் மனைதத்தெழில செய்தனா வந்தே. 82

அந்த வேலையி லந்தரத் திழிந்துவந் தமர்ந்தான்
விந்த மாதொடுந் சிவகண முற்செல விடைமேல்
எந்தை யன்றலா விண்ணிடம் பொழிதர வியங்கண்
முந்தி யடப்போத கநந்தவா வாய்வழி முழங்க. 83

அடி முடித்தெரிந திலமெனு மைமுற லகல
படி யடிக்கணிக தவன்முதல மரர்கள் பரவ
வடி யயிறுகரந் திகழ்ந்தைவந் திறைஞ்சலு மணைத்துத்
துடி யிடைச்சிமை கன்றெனி மகிழ்ந்திது சொல்வார். 84

திருமணச்செய லாறுமுக வெனவெழிற் செங்கேழ்
அரிபரந்துநீண் டிருகுழை யொடுபொரு கக்க
மருவி நந்தகொந் தளகமா மலேமலைத தெய்வக்
கரிணி காதலி நாணொடு மிறைஞ்சினள் களித்தார். 85

ஈச னம்பரை பொழுந்தரு மாசனத் தெதிர்சிங்
காச னத்துவேன் முருகனை யானைதன் மகளை
வாச நத்தனை யிருத்தினர் காசுநீர் மனையாள்
தேசு ணங்குநன் காற்பெய விளக்கினன் றேவன். 86

கந்த வேள்கரத் தருந்தவக் கன்னியை மணப்பத்
தந்த னன்னெனுந் தாரைநீ ரேற்றனன் சாமி
அந்த வேலையி லந்தணன் மணவினை யாற்ற
கந்த ரத்*தணி நாயகம் பூட்டினன் களிப்ப. 87

நீவ லங்கொழு ழும்பன்மா தோதிமந் திகைப்ப
மேவ லங்கன நடையடி கன்மிசை விதிபால்
மாவ லங்காத் தெடுத்தனன் வைத்தனன் மணப்பாங்
கேவ ரும்மகிழ் வெய்தினர் வாழ்த்தொலி யிசைப்ப. 88

இன்ன ணங்கடி மணமுடிந் திடக்குக னின்றோர்
பொன்ன வாங்கற லேந்தனு மாசிசேய புகன்றார்
அன்னை யுமமை தந்தனுங் கரந்தன ரையன்
புன்னி தன்னுடன் பாயொளி கோயிலிற் படர்ந்தே. 89

உம்ப ரிம்பருள் ளவர்க்கெலாஞ் செய்வன வுதவ
நம்ப னையுமைப் பதம்பணிந் தவரிட னடந்தார்
உம்பன் மாமக டனனுட னுலகுயி ருவப்ப
இன்ப மேறுகர்ந் திருந்தன னென்றுமோ ரிளையோன். 90

இத்தி றத்தினு லன்றிருந் தின்றள வெவரும்
சித்தி ரகுடி யேற்றமென் றியம்பிய சீராம்
பத்தி யிற்சிவ பூசையின பலனிதோர் பாலன்
சித்தி யுற்றதுங் காலனை வென்றதுந் தெரிப்பாம். 91

திருச்சிற்றம்பலம்.

விண்குடி யேற்றுப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் சங்ச.

---

* அணிநாயகம் — மங்கிலிய சூத்திரம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மார்க்கண்டேயர் பூசித்தப்படலம்.

—— o ——

கலி விருத்தம்.

காலையி னெடும்விடவி கட்டலர் மணப்ப
மாலையில் பசுங்கொடி மணப்பவ லருச்சி
வேலையி றடத்தலர் விளங்கவுள தொப்பில்
சோலைய தனுமய மெனப்பெரியர் சொல்ல.

அத்தினடு நீடுகொடி யாடுமணி மாட
பத்தியுடை விப்பிரர்கள் பாடியுள தங்கண்
முத்தநகை மாதரினை மோகமனு காத
சித்திபெறு குச்சக னவன்றனது சேயோன்.

தேன்றுள வலங்கலணி தேவனொரு வாயா
லான்றறிவி னின்றுசிவ யோகுசெய வாமா
மான்றகரு ருஞ்சறிவின் மாமிருக கண்டு
ஆன்றவ னெனச்சொன்முனி யன்னவ னருஞ்சேய்

தூய்யமிரு கண்டமுனி சுற்றநனி சூழ
தையல ரிலக்கண நலம்பல தரித்த
மெய்யுடை மருத்துவதி மெல்லியுட னில்லம்
கையற விலாதுபுரி காலமிது கூறும்.

கோன்முறை வழாதவர் குணங்கணிய ரேனும்
நான்மறை விதித்தநி னடப்பவர்க ளேனும்
வான்மழை யெனக்கொடை வழங்குநர்க ளேனும்
கான்முளை யிலாதவர் கதிப்பெறுத லின்றே.

பின்னிறும் பூசு கொண்டிலத் தருமப் பெரிய லாற்றின னிருப்
ப, வன்னவன் கிழத்தி திருவயற் றொருசே யருணனிற் றோன்றின
தார, பன்னகம் பரிக்கும் பூவகச் சைவப் பயிர்தழைத் தோங்க
புன் மதங்க, ளின்னலி னழுங்க கந்த மெய்ஞ்ஞான மேவரு
மடைந்தரு ளெய்த. 12

உதிதருங் குழவி பெற்றவ ருற்று ருவகைமிக் கூரமுற் பக்க,
மதியென வளரக் கண்டெமார்க் கண்ட மகலையென் றிங்கெய
ராதி, முதுகருமங்க ளாற்றிநற் கலைகண் முற்றுறப் பயிலவித் திட
றால், விதிவழு வமைதி யோர்ந்தான் பூசை விஞ்சையிற் கைவரத்
தெளிந்தான். 13

சிந்தனைத் திறம்பச் செல்வமும மொரையுந் தேகமுந் திகழ்
திரு மேனி, சுந்தரப் பொலிவுங் கண்டுகண் டெமான் சொலவிய
நாளணித் தாக, மைந்தனைக் காணுந் தொருமகிழ் துங்கா மனத்
தாய்ச் சேர்ந்துசோர்ந் துருகி, தந்தையுந் தாயும் வாடிய வதனந்
தேர்ந்தி து கூறுவன் றனயன். 14

என்னரு ரெப்த லெனத்தெருங் கலியா மிடர்தபு சண்மணிச்
செல்வ, முன்னரன் கொடுத்த வாயுணிற் கனிதராய் முடிவுறு
மென்றெணி யெண்ணி, பின்னலுற் றழுங்கப் பெறறன மென்று
மீன்றவ ரஞ்சன்மி னிறைவன், சன்னதிக் குறுகி யருச்சனை நெறி
துந் தவக்குறை நிறப்புவ லென்று. 15

ஆகமத் தெல்லை கண் டிருக்காதி யாரணத் தந்தமு மறிந்து,
சோகமி னெஞ்சத் தூய்மையாற் கங்கைத் தோயமுட் படிந்துவெ
ணீற்றை, தேகமிக் கணியா வக்கமா மணியுஞ் சேர்த்தா னைந்தெ
ழுத் தோதி, நாகமு மென்பு மணியரன் கோயி னண்ணுபு மலர்க்
கரங் கொண்டு. 16

மங்கலக் காசி யாதியாந் தலங்கண் மன்னி யாங்காங் க[illegible]ற்று
ழூது, வெங்கயச் சிருங்கக் கிரித்தலைப் பன்னாள் வினையற மலக்
கரி சொதுங்க, தங்கமா தவஞ்செய் நரைமுடிச் சடிலத் தரு
வாசப் பெயர் முனிவன், சங்கமன் றடையாப் பரவின னன்னான்
றனித்தவி சுதவியா தரித்தான். 17

முனிவரர்க் கரசே யெந்தனைக் காலன் முந்துவ னென்றெனைப் பயந்த, கனிவருந் தாயர் தந்தையும் புலன்றார் காலனை வெல்லுமா புகறி, யெனமிரு கண்டன் மகனுரை செய்ய விசைகெழு பத்திமிற பெரிய, தனியருங் குழந்தாய்க் கேளென விருடி சாற்றுவன் சங்கரர்க் கருதி. 18

நதியஞ் சாரற் குணக்கியற் பாலி னதிக்கரைக் கினிற்கொண் டிஞ்ச, உநதியின தென்பா ஞகலிங் கேசத் துகர்கொரு சமிநறு நீழல், முநதிநின் றெழுதா சேள்விமா மலமோன் முருகுந்தனுங் காதொறு பரம, சுந்தர மூர்த்தத் தருப்பெற லிலிங்க சோதி யொரன றுளாதகஞ் சூநாதி. 19

அதகளி நல்லூ ரானெனக் காணு வருந்தவ முனிவ ராரும், பத்தியா லலர்தூ யெத்தினர் மாண பவமெனப் பட்டிறச் சுழலு, நொதகளிர் தின்ப முற்றன ரதனு னேன்புடைப் பார்ப்பனப் படிவ, வதகம நீயாச சனைசெயிப குறித்த வுவன்றனை வென்றனை யென்றான். 20

துப்தவ னிந்த வணைந்தசொலக் கேட்ட தூகளின்மார்க் கண்ட னென் றுரைக்குட், சேய்தனை சான்ற வளங்கெழு நல்ல திருவளர் புரநகெரிந தன்பா, லாப்மல மேநதி நந்திவன் றிருத்தர ளாகமத் தருச்சனைப் புரிந்து, தாய்தலங் குழவி கலுழலாங கரிய சாண்டுதி யோதமேயினனால். 21

வண்ணவிருத்தம்.

தனதந்த தனதந்த தனதந்த தனதந்த தனதானனே.

துதிகொண்ட வதிநண்பர் பவபங்க முறுவநக சுடரேநமோ
விதிவிண்டு மனமஞ்ச வனல்விநத முருகொண்ட விமலாநமோ
பதிபெண்ப துணையன்றி யிலையென்று வலகொன்ற பரமேநமோ
நதிவந்த சடிலங்க ளசைவண்ட திசைநின்ற நடனாநமோ. 22

தந்தா தனனதந்த தந்தா தனதந்த தானனதன.

கங்காகு ராசங்க ராபோகக ராவணிக பாலிநமோ
பங்கேரு காவம்பி காநாய காவிமலை பாகாநமோ
சங்கார மேனதுங்க மேனதிங்க மேணயசடை சாமிநமோ
வெங்காள முண்டேது கொண்டா வகண்டா விலாசாநமோ. 23

தனதான தந்ததன தனதான தந்ததன தனனாதனா.
சுகநா டெழுங்கிரண கனமாலி யென்றவொரு சுடரேநமோ
சகமாயை யின்றகல சிவபோக நன்குதவு தருவேநமோ
நகமேத கென்கைலை வருசீத செஞ்சரண நளினாநமோ
மகமாடு றுண்டதகர் முகமாம னன்றடைய வைத்தாய்நமோ. 24

தனதந்த தனதந்த தனதந்த தனதந்த தனதானனா.
பெருவஞ்ச மதுகொண்ட தலைநின்று சபைவந்த பிழையாளர்பால
கருமஞ்சு நிகரென்ற பகடொன்றி வருகின்ற கலிகாலனோ
வொருபஞ்ச மனுநெஞ்சி னிலையன்ப ரகமுந்து மொளியோயிவன்
துருமங்கொ யலர்கொண்டு நினைநம்பு மெனைவந்து தொடநீதியோ

தாந்தான தாந்தான தாந்தான தாந்தான தனதானனா.
ஈன்றாரை யான்றோரை தான்றாறு மாண்பாறு மெளியோரிடம்
வான்றாவு கூன்கோடு மான்றேரி போங்கால மன்னேமனோ
தேன்றாவு பூந்தாம வீர்ங்கோதை பாஙகாருஞ் சிவனேயிவன்
சான்றேவர் வோண்டாத மாண்டாரி னைசாண றருமங்கொலோ.

தனதான தந்தத்த தனதான தந்தத்த தனனாதனா.
நிலையாத பஞ்சொத்தி வுலகோடு வெஞ்சித்த நிட்டூரர்பால்
கொலையாட வுங்கொற்ற வலகே டெழுந்துட்ட கூற்றுவனோ
வுலைவால மன்றுட்க சுரரோடி வந்திக்கு முணர்வேயிவன்
தலைபாய நின்பத்த னெனைநாடி சந்தித்த றருமங்கொலோ. 28

தனதான தனதான தனதான தனதான தனதானனா.
தனபார மடமாத ரினபோக வுவராழி தவிரீனர்பால்
கனபாச மதுவீசி யுடலாவி கொளவோடு கலிகாலனோ
மனனாட வுரையர்ட முடியாத வளர்சோதி மதியேயிவன்
நனவாகி யுனபாத மறவாத வெனைநாட நவினீதியோ. 29

தனந்தான தந்த தனந்தான தந்த தனந்தானனா.
பறந்தோடி நெஞ்சங் கறங்கோலை யென்னப் பதங்காரண
மறந்தாரை யருசச் செயுந்தென் றிசைப்பால் வருங்காலனோ
விறந்தாரெ லும்பம் புலிப்பாம் பணிக்கொண்ட வெந்தாயிவன்
அறந்தா னறிந்தா றிருந்தேனை முன்காண லாகுங்கொலோ. 30

தனதான தந்ததன தனதான தந்ததன தனனாதனா.

மறைநீதி யறியாது கொலையாதி யகநாடு மதியாளர்பால்
கறையாய வடிவோடு மெரியேற வருகோர கண்ணாளனே
இறைபோது மகலாத திரிபோது முளசோதி யிறையேயிவன்
முறையீடு பறையாக வுனைநாடு மெனைநாடன் முறைநீதியோ. 30

தனதத்த தனதத்த தனதத்த தனதத்த தனனாதனா.

நடுவற்ற தெனசொற்ற கொடுமைக்க ணறிவற்ற நள்ளாளர்பால்
அடுமிற்றெ னெதிருற்ற வெருமைக்க ணெழுதுட்ட வதிகாரனே
முடிவற்ற மௌனத்தி னிடநிட்ட ரறிவெட்டு முதலேயிவன்
மடிவிட்டு னடிபத்தி முடியிட்ட வெனைமுட்ட வருவன்கொலோ.

கலிவிருத்தம்.

பாலனிந்த படியாகப் பரன்றிருமுன்
ஓலமிட்டா னுலகாகி யுயிராய
நீலகண்ட னிருபாதி கன்னெகினங்
கோல மறியாக் கோக்கனலி கேட்டுவந்தான். 32

அடியார் வருந்த வாற்றாத பேரருளாற்
குடிலத் தருவங் கொண்டினிய நன்மதலா
கடையூர் வரினுங் காத்தாள்வோங் கருணையினால்
செடியா ரியமன் றீத்தண்டத் தஞ்சலெனா. 33

விண்ட துழனி விபுதரெலாம் போற்றுமிரு
கண்டன் பயந்த கான்முளைதன் செவிவாயி
லுண்டு தெவிட்டா வமுதா வுணர்ந்தெணுவான்
துண்டப் பிறையான் சொல்லென்னத் துணிவுற்றே. 34

அருளு நெறியே யமுதகண்டு சந்தோன்றும்
பொருளின் றிருத்தாட் பூசையறா நாள்புரிந்து
தெருளின் வலியாற் சிவநேச னுளவமையம்
மருடர் மனத்து மறலியுல குயிராய்ந்தான். 35

வட்டி லெழுது மெழுத்தின் றுடன்சரியாங்
கேட்டி யெனது கிங்கிரர்காண் முனிமகனை
வாட்டி கணத்தின் மாசபையில் வருதிரென
மூட்டுங் கனற்கண் முரண்டூத ரேகினரால். 36

கண்டார் கடையூர் கபாலிதிரு முடியில்
வண்டார் வீழா மலரா லருச்சிக்குந்
தொண்டன் றனைப்போய்த் தொட்டிழுக்கச் சாரவனன்
மண்டிக் கொழுந்தா வளர்ந்தசிவாக் கினிமாதோ. 37

அங்க ணருங்க வஞ்சினர் வெருண்டோடி
சொங்கோற் கடவு டனைக்கண்டு சிரமிரங்கி
எங்கட் கிறையே யியமனெனும் பெரியோனே
புங்கத் தவன்பாற் போய்ப்பட்ட தென்புகல்வோம். 38

சித்தி பெறுமா செய்கின்ற சிவபூசைப்
பத்திக் கனறுன் படிந்தெங்க ளங்கமெலாம்
பொத்தி யுரோமம் பொடிந்தெவர்க்கு மஞ்சாத
சத்திக் குறைந்தோந் தனுவினெழின் முற்றொழிந்தோம். 39

சிவ கோடித் திரளிலிவ ணென்றென்ன
மேவப் பெற்றோம் வேதத்தி னுட்பொருளாந்
தேவ னடிமைத் திரம்பூண்ட செல்வனைப்போய்க்
கூவ முடியா தெனிற்பற்றக் கூடுமதோ. 40

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சூதர் சொற்ற சுடுஞ் சொலஞ் செவிபட்ட வேலை துடித் தடங
காத வெஞ்சின முற்ற னற்பொறி கண்ணி னின்றெழ காரிருண்
மேதி வெந் நிவரா கணிச்சி விளங்கு தண்டொரு பாச முந்
தோத கச் சம னங்கையிற்கொ டெழுந்தனன் படை சூழ் வர. 41

குண்டு கட்பிறை தந்த பந்தி கொடுஞ் செயற் கரு மேனியர்
தண்ட மென்ப தலாது மற்றறி யாத வெய்ய தருக் குளார்
புண்ட யங்கெறி வேலு ளார்புகை வந்து பொங்கு முயிர்ப் புளார்
எண்ட யங்கனீ கங் கதித்தெழ வேகினன் சம னென் பவே. 42

வந்த வேக முடன் பரன்பத வாரிசந் தொழு தம்பி னுற்
சிந்தை யாறி யிருந்த பாலனை சீறியே யெனை மீறி னுய்
அந்த நாளா னுந்தை பால தளித்த வாயுண் முடிந் தன
வந்தி டாதொழி யேல்வீடே னென மாமுனிச் சுத னோது வான்.

நாச நீநடு கற்றி லாய்கொ லெனைத் தொடத்தகு நாச மில்
ஈச நேச முளை ணடாதக லென்ற போதவ னென் முனை
பேசு முன்வலி யேக லின்று பிடிப்ப லென் றொருபாச மேல்
வீசி னானது கண்டு மாமிரு கண்டு சூறு விளம்பு மால். 44

நீல கண்ட மகேச வெண்குண நித்த வோல நிரா மய
சூல பாணி கபாலி யாதி சுயம்பு வோல மகோ ததி
யால கால மதுண்ட கண்ட வநாதி போல வெனைக் கொடும்
கால பாச முறுத வாறரு ளென் னவே கரு ணாலயன். 45

அமுத லிங்க மிருந் தெழுஞ்சுட ரந்தி வண்ண மழற் கரம்
குமுத நண்ப னதிப்பொதிச் சடை கோல மோ டெதிர் காலனை
திமிதி மென் றுதை தந்தபாத சிலம் பொலிச் செய தேவர்கள்
குமுகு மென்றலா சிந்த வந்தனன் குன்ற வில் லுடை யண்ணலே

கூற்று தைப்படப் பாத லத்தலை கூர்ம வெங் நிமி ராதர
தோற்ற நாரி யிடத் தடைந்து துயிர்ப் பெருங் கடன் மூழ்கினான்
நாற்றி சைப்புட விக் குலுங்கின நாக மெங்கு நடுங் கின
போற்று மாதவ ரியோகர் ஞானிகள் புளக மிக் கிக மாடினர். 47

அளி விளங்கிய முனி மகன்றனை யந்த காரி கடைக் கணித்
தொளி விளங்கிய வாயு னானு மக்கினிப் பதி னாற தாங்
களி விளங் கரு டந்த னங்கன மாவை மானில மேகென
வெளி விளங்கிய பரமனைச் சுதன் விம்மி தங்கொடு போற்றினான்

தாமி தத்தி லுலைந் தலைந்த சமன் றொழிற் கெட லாலினி
பூமி மாது பொறு ளிருஞ்சுமை யென்ன வந்து புராரி தன்
தாம ரைச்சர ணந்து தித்தனர் தான வானவர் சங்க ரன்
ஆமெ னப்புக லாம றைந்தன ரமுத லிங்க வகத் தரோ. 49

ஆத லாலினி வன்னி நீழ லமந்த ருட் பர மேசனை
போது கொண்டு வணங்கு மேலவர் புனித வித்துறை மூழ்கி னோர்
சாத லானதி லாத நற்கதி சாருவா ரென முருக வேள்
வாத ராயணர் மூது காதை வசிட்ட னுக்குரை செய்யு மே. 50

திருச்சிற்றம்பலம்.

மார்க்கண்டேயர் பூசித்தப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருாச.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வியாசர் பூசித்தப்படலம்.

——— o ———

வஞ்சித்துறை

மன்னிமாசல, கன்னியாமெனத், துன்னுநீராறு, பன்னுவேணியே.
கேகயம்பிக, மாகருங்ககம், நாகுராண்முனூல், வாகினேதையே. 2
சலிலசானவி, கலியினுடுவார்க், கிலகுமுத்தியென், னலகிலாகமம்.
தீவினைப்பவத், தேவராதினுக், தேவமானமீப், போவரென்பவே 4
சாமளச்சுக, மாமெனுஞ்சொலார், தாமரைத்தடத், தோமெனுடு
பூரணத்தவ, நாரணாதியர், தேருமாதிவாழ், வாரணாசியே. [வர்.
பசுபதிப்பர, விசுவநாதனா, ருசிதவாலயம், விசிதமென்பவே. 7
அத்திருத்தலத், துத்தமத்தவச், சித்தனெஞ்சிவ, பத்தனென்பரால்
பாராசரச்சுதனிராசயோகுசெய்நிராசையற்றுறு திரோதையற்றவன்
சுருதிநான்கையுங், கருதுசாகைகள், விரிவுறுவகை, தருதிவாகரன்
தாதெழுந்துள, வேதமாலையஞ், சீதரன்கலை, வாதராயணன். 11

வஞ்சிவிருத்தம்.

மறைவகுத்துத்தொகுத்தலின், அறைவர்வேதவியாசனென்,
கறையறுங்கடற்கண்ணதாம், இறைவிதந்தவிளவலே. 12

பத்தொடெட்டுப்பழங்கதை, நித்தனம்புயனேமியன்,
சித்ரபானுதிவாகரற், கொத்தவாறுரைதந்தனன். 13

தந்தருட்டனதாயர்பால், முந்துறைத்தமொழிப்படி,
சந்தனுக்குலத்தையலார், பந்தத்தாக்கினன்பாலரை. 14

படனமேவரும்பண்ணுப, நிடதமுண்மறைச்சூத்திரம்,
படியிலுண்மதச்சம்மத, நடனமாடநவின்றனன். 15

காமரம்புவிகண்டநாள், தோமிலிமேயாகுசெயத்தனக்,
காமருமபெறற்றந்தைதாய், தாமினிப்பத்தணந்தவன். 16

தமைமைநேரத்தாதல, மும்மைமோகமுடித்துமேல்,
செம்மையாஞ்சிவசேவடி, இம்மைநாடுமிருடிகள். 17

செந்தமிழ்க்கலைதெற்கெதிர், அந்தவப்பாத்தாரியம்,
சிந்தையங்களஞ்சேமியா, வந்தமாதவரங்குழூஉ. 18

தற்பனைப்பெயர்சாரலில், உற்பவித்தெழுமுந்தியாம்,
உற்பலத்தைபுறுத்துறும், எற்குணக்கெழுமெல்லையே. 19

காலைசந்திகட்கங்கையில், சாலவாற்றிதழற்பொடி,
மேலணிந்துவிளங்கரன், ஆலயத்தைதயடைதர. 20

கலி விருத்தம்.

சித்தி ரத்திதழ்க் கூவிளத் தெய்வதப
பத்தி ரம்பல பாசிலை தேனறு
புத்த லர்க்கொடு பூசனை யாற்றுவான்
நித்த நித்திய யாத்திரை நீந்துநாள். 21

தேசி னெண்ணில செங்கதிரா மெனை
பேசு மாவிசு வேசன தாலயம்
வாசன் முன்னம் வனப்புடை கோபுரம்
ஈச் னென்ன விறைஞ்சியுட் போந்தனர். 22

எண்ட ராதர மென்னணித் தூணமேல்
அண்ட பித்திகை யாமெனு மீமுடி
கொண்டி லங்கு குருத்திர கந்திய
மண்ட பத்தைக் குறுகி மகிழ்ந்தனர். 23

வாந் திச்சடை வைத்தம ரீசனை
சுரா திப்பொதி தோயக் கடக்கணம்
பரமு னன்புறு பச்சிலை யாகமத்
தருமு மாற்றி சாண்டுதித் தாண்டரோ. 24

விதியி னுலய முற்றி விடைப்பான்
வதித ருங்கதி வந்தமர்ந் தேவரும்
பதியி லக்கண மாயப் பாராசரர்க்
குதிகை தன்றனை யுற்றி துரைப்பரால். 25

ஏவ னூரணத் தாகமத தெட்டொணுன்
ஏவன் காணெப் பொருட்கு மிறைபரம்
ஏவன் றேவர்கட் டேமுத லீறிலான்
ஏவன் காரணன் காரிய வேதுக்கே 26

*சமய மாறில கப்புற மப்புறம்
அமைய நாற்சம யத்திருந் தாளினும்
தமையொவ் வாச்சம யம்மெது தேவெது
கமையி னெதெனுங் காதையுற் றந்தணன். 27

---

*ஆன்மாக்கள் தம்புலம் போயவாறு எடுத்துச்செய்த வழிநூல், சார்பு நூல், பூர்வபக்கநூல் இவை யிற்றிற்கு முதனூல்களாகிய (வேதம் ஆகமம்) இவ்விரு நூல்களின் உண்மையும் அபேதமும் அறியாது, உலோகாயதர், வைபாடிகர், மாத்யமிகர், யோகசாரர். சௌராந்திகர், ஆருகதர் என்னும் அறுவகைப் புறப்புறச்சமயிகளும், இவ்விரண்டனையும் நிந்திப்பர், தார்க்கீகர், மீமாஞ்சகர், மாயவாதியர், சாங்கியர், பாதஞ்சலர், பாஞ்சராத்திரர் என்னும் புறச்சமயிகள் அறுவரும் இவ்விருநூல்களில் ஆகமத்தைப்பிரமாணமாகக்கொள்ளாது நிந்தித்து (வேதம்` ஒன்றனையே பிரமாணமாகக்கொள்வர். அங்ஙனங் கொள்வராயினும் தார்க்கீகர் வேதப்பொருளோடு முரணி ; பொருட்டன்மை கொண்டும், மீமாஞ்சகர் வேதத்துட் கருமகாண்டத்தையேகொண்டு, ஞானகாண்டமாகிய உபநிடதங்களை நிந்தித்தும், ஏகான்ம வாதிகளாகிய மாயாவாதியர், ஞானகாண்டத்தையே ஒருவாறங்கீகரித்துக் கருமகாண்டத்தைவிட்டும் சிவாகமத்தை நிந்தித்தும், ஞானகாண்டத்திற்கும் பூர்வாபரவிரோதமாக மாறுபட்ட பொருள் விரித்தும் நிற்பர். ஏனய சாங்கியர், பாதஞ்சலர், பாஞ்சராத்திரர் என்பாரும் அங்ஙனே வேதத்துள் தத்தமக்கியைந்தவாறே சிலபாகங்களை மாத்திரங்கொண்டு ஏனையவற்றை யொரீஇச் சிவாகமங்களையும் இகழ்ந்து ஒழிவர், எனவே இப்பன்னிருவருள் புறப்புறச்சமயிகளான முன்னைய அறுவரும் வேதாகம நிந்தகரும், புறச்சமயிகளான பின்னைய அறுவரும் வேதத்துள் ஒரு புடையையும் சிவாகமம் முழுவதையும் நிந்திப்பவரும் ஆயினர்.

அகப்புறச்சமயிகளாகிய பாசுபதர், மாவிரதர், காபாலர், வாமர், வைரவர், அயிக்கவாத சைவரென்னும் அறுவரும் வேதத்துடன் சிவாகமத்தையும் பொதுப்பிரமாணமாகக்கொள்வர், ஆயினும் சிறப்புப்பிரமாணமாக, மாயாருத்திரர், வித்தியாருத்திரர், காலருத்திரர், சித்திபுருடர், ஆதிபைரவர், மந்திரேசுரர், என்பவராற் செய்யப்பெற்ற, பாசுபதம், மாவிரதம், காபாலமுதலிய நூல்களைக்கோடலான். அவரும் அகப்புறமாயினர். இறுதியினின்ற அகச்சமயிகள் ஆகிய சங்கிராந்தவாதசைவர், பாடானவாதசைவர், அவிகாரவாத

சைவர், பரிணாமவாதசைவர், சுத்தசைவர், பேதவாதசைவர், என்னும் அறுவரும் வேதாகமமென்னும் இரண்டையும் சிறப்புப்பிரமாணமாக அங்கீகரித்தாராயினும், தன்னியல்பு பொதுவியல்பு சிறிது வேறுபாடு உள்ளாராகலின் அவரும் சித்தாந்த உண்மைமுற்றுங் காணாராயினர். இவ்வாறே ஈண்டுரைக்கப்பெற்ற சமயிகள் யாவரும் வேதம் ஆகமம் என்னும் இருநூலையும் அவற்றுள் ஒன்றனையும் ஒன்றுட் பல பகுதியையும் வெறுத்தும் அவற்றுண்மை முற்றுங்காணாது வாளாமயங்கி இடர்பட்டு நிற்பர். இவரெல்லாம் இவ்வாறே இடர்பட்டு நிற்பச் சுத்தாத்துவித சைவசித்தாந்தி ஒருவனே வேதசிவாகமம் இரண்டையும் சிறந்த பிரமாணமாகக் கொண்டுண்மை யுணர்ந்து இன்புற்று வாழ்வனென்க.

*முப்ப தத்தது முற்பத நாப்பணுள்
அப்ப தத்த திருபத மீற்றினுள்
மொய்ப்ப தத்தது முப்பதத் தாதுரை
செப்ப லாந்திரு மந்திரஞ் சீரிதே. 28

ஆரு வெட்டெழுத் துஞ்ச துாரணச்
சார மாதவி னலச் சமயமே
கார ணப்பெயர் தெய்வத மேபர
நீர மென்கரந் தூக்கிநின் றுணரோர. 29

---

*ஓம நமோ நாராயணாய என்னும் திருவஷ்டாட்சரம் சகலவேத சாரசங்கிரகமாகிய இரகசியத்திரயங்களான திருமந்திரம் "த்வயம்" சரமஸ்லோகம் என்பவற்றுளொன்றாகும் இது பிரணவத்திற்கு வ்யாக்கியானமென்றும் இதற்கு நான்கு வேதங்களும் வ்யாக்யானமாமெனறுஞ் சொல்லலாம். இத் திருமந்திரம் எட்டிலழயாய் மூன்று சரடாயிருக்கும் ஒரு மங்கள சூத்திரம் போல மூன்று பதியாயிருககிறது. ஓம் நம நாராயணாய என்கிற ஒரட்சரம் இவைகளில் ஓம் என்பது சர்வரக்ஷகத்வத்தையும், சமஸ்த கல்யாணகுணத் மகத்வத்தையும் கூறும். நம என்கிற இரண்டக்ஷரம், மகாரம் ஆத்மாவை யுணர்த்துகின்றது, நகாரம் ஆன்மா தனக்குரியன் அல்லனென்கிற நீக்கத்தை யுணர்த்துகின்றது, எனவே நம என்கிறபதம யானெனதென்னும் அகங்கார மமகாரமாகிய நிவர்த்தியையும் சுதந்தரஹீனத்தையும் பாதந்திரஸ்வரூபத்தையும் விளக்குகின்றது. மேல் திருமந்திரத்தின மூன்றாம்பதம், நார - அயன - ஆய, என்ற மூன்று விதமாகப பிரிக்கப்பட்டுள்ளது, இதில் நாரமாவது சேதனாசேதனங்களுடைய நிச்சியத்தையும் அவற்றின் சமூகத்தையும் பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சியாரையும் நித்திய சூரிகளையும் கூறுகின்றது, அயனமாவது இவைகளை ஆஸ்ரயமாகவுடையனென்று விளக்குகின்

றது. ஆயவென்பது எல்லாவித கைங்கிரியங்களையும் செய்யவேண்டுமென்று கூறுகின்றது. இவ்வாறு திருவஷ்டாட்சாரத்திற்குப் பொருள் கூறுவதால் திருமந்த்ரார்த்தமாவது ஓம் அகாரவாச்சியனான ஸ்ரீமந்நாராயணனுக்கே உரியனான நான் நம, எனக்குரியவனன்றி நார சகல சேதனா சேதன வஸ்துக்களுக்கும் அயன ஆஸ்ரயனான நாராயணனுக்கே ஆய எல்லா கைங்கிரியங்களையும் செய்கின்றவனாகின்றேன் அன்றியும் பிரமன் முதல் எறும்பீறுயுள்ள எல்லா உயிர்களுக்கும் நாராயணனே மாதாபிதாவாயும் இருப்பிடமாயும் இரசகனாயும் சினேகனாயுமிருப்பதால் மோட்சத்திற்கு உபாயம் அவனே என்றனரற்பாலது.

இம்ப ரார ண மாய்ந்தும் புராணநூல்
நம்ப ரற்கிரு நாலிரண் டோதியுள்
வெம்பி யேபரம் விண்டுவென் றோதகைத்
தம்ப மானது சத்தியஞ் சான்றோனே. 30

பாச நீங்கிய பண்ணவர் கண்ணுமீ இ
யீச நந்திமுன் னிச்செயல் வேதவி
யாச னுக்குற வச்சுற நின்றனர்
பேசு வாரிது போருணந் திபே. 31

கலித்துறை.

அறிவி னீரநீ யெனமதி யவலமா யறைந்தாய்
நறுவி தாம்பர நாரண னென்றனை குணத்திற்
குறுகு மன்னவன் குணங்குறி பிறப்பிறப் பனுகா
மறுவ றும்பொரு ளுணர்ந்திலை வாதரா யணனே. 32

உருத்தி ரத்தினைப் பண்ணுள வுருத்திர மெசுரோத்
தருத்த காண்டமே யுளதத னடுவுள தெசுரும்
இருக்கு சாமமா திடையுள ததர்வண மிவற்றின்
கருத்த தாய்மனு வாயடங் குறுந்தவக் கணிக்கின். 33

நீத லாத*சிவ யநமவெனு மனு தெரிக்கின்
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது வேதம்
காத லாயதாய்ப் பிரணவப் பொருளுமைந் தெழுத்தின்
ஓத ரும்பொரு ளொன்றெனக் கூறுமிவ் வுலகம். 34

* சிவயநம என்னும் ஸ்ரீ பஞ்சாட்சரம் சைவர்கள் யாவருக்கும் மூலமந்திரமா

யுள்ளது. இது ஸ்ரீ ருத்திரத்தின் மத்தியிலிருக்கின்றது ஸ்ரீ ருத்திரம் எழு காண்டங்களோடு கூடிய எசுர்வேதத்தின் மத்தியிலுமிருக்கின்றது அவ்வெ சுர்வேதம் "த்ரை" என்னும் பேருடைய ருக் எசுர் சாமங்களினிடையிலிருக் கின்றது. அதர்வணவேதம் இவற்றுளடங்கும் இந்த மஹாமந்திரம் வேத ஹிருதயமாயிருப்பதால் இதனால் எல்லா வேதங்களும் பிரகாசித்தொளிபெறு கின்றன. இதனுண்மையை வேதநான்கினு மெய்ப்பொருளாவது என்னும் தமிழ்வேதமெழுந்து முழங்கியது. இந்த பஞ்சாட்சரம் ஒரெழுத்து முதல் பதினாறெழுத்துக்கள் வரையிலும் பீஜங்களது சேர்க்கையால் தொகை யேறி யுங் குறைந்தும்வரும் அங்ஙனம் பலதிறப்பட்டு பலவகைச்சித்தியின்பொருட்டு வரினும் அவையாவும் பஞ்சாட்சரமென்றே சொல்லப்படும். இந்த பஞ்சாட் சரம் பிரணவத்தின் பொருளாயிருப்பதாலும் அதைப்போன்று பிரதக மந்திர மாதலானும், முன் அனுபவித்தறியாத மோட்சமந்திரமாகும், இம்மஹாமந் திரம் ஐந்தெழுத்தோடு கூடியது இதன் முதலில் பிரணவமில்லை இது சேர்ந்து பஞ்சாட்சரமென்பதுகெட்டு சடாட்சரமாகும் அப்படி ஜெபிக்கவே விதியில்லை பிரணவம் வேறுதுணை வேண்டாது உச்சரிக்கப்படுவதுபோல் பஞ்சாட்சரமும் வேறொன்றின் ஆஸ்ரயமில்லாமல் ஜெபிக்கப்படுவதால் இரண் டும் தம்மின் வேறுபடாத ஒரேமந்திரமாகும், சில சந்தர்ப்பங்களில் ஓம் நமசி வய வென்று ஜெபிப்பதுண்டு அப்படி ஜெபிக்குங்கால் அதை பஞ்சாட்சர மென்றே பாவிக்கவேண்டும் சாரைப்பாம்பு என்று சொன்னபோதே சாரை யாகிய பாம்பென்று பொருள் கொள்வதுபோல ஓம் சிவயநம என்று உச்சரிக் கும்போது ஓங்காரமாகிய சிவயநம வென்றே பொருட்படுத்தவேண்டும், இதனை ஓங்காரமாமைந்தெழுத்தால் புவனத்தையுண்டுபண்ணி பாங்காய் நடத் தும் பரம்பொருளே யகண்டாகார பரசிவமே என்னும் தாயுமான ஸ்வாமிகள் அமுதவாக்கே நிலைநிருத்தும் இனி பிரணவமே பஞ்சாட்சரமென்பதனை துலக்குதும்.

பிரணவமென்னுந் தனிமந்திரம் ஓம் என்று சொல்லப்படும் அது சமஷ் ட்டி பிரணவமென்றும், வியஷ்ட்டி பிரணவமென்றும், இருவகைப்படும் சமஷ்ட்டி பிரணவமாவது தொகுத்து கூறுவது அது ஓம் என்பதாகும், வியஷ்ட்டி பிரணவம் வகுத்துக்கூறுவது அது அ - உ - ம என்பதாகும் இந்த வியஷ்ட்டி பிரணவமாகிய அகார உகார மகாரமென்னு மூன்று முறை யே இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் காலங்களையும் திரிகுணங்களையும் காருகபத்தியம ஆகவநியம் தக்ஷிணாக்கினியங்களையும் இருக்கு எசா சாம வேதங்களையும் உணர்த்தாநிற்கும் அகாரம் வாய்திறத்தலினால் சிருஷ்ட்டியை யும், உகாரம் இதழ் குவிதலால் திதியையும், மகாரம் வாய் மூடலால் சங்கா ரத்தையும் குறிப்பிக்கின்றமையால் எல்லா உலகங்களும் எல்லா சுருதிகளும்

இந்த பிரணவத்தினாலே தோன்றி நின்றொடுங்குமென்பது பெறப்படுகின்றது. பிரணவம் அகார உகார மகாரங்களாகப்பிறிந்து மூன்றெழுத்தாயும் இம்மூன்றுங்கூடி ஓம் என்று உச்சரிக்கபபடும்பொழுது நாதமாயும் ஓம் என்று எழுதும்பொழுது விந்துவாயுமிருப்பதால் முதல் மூன்றெழுத்தும் இந்த விந்து நாதங்களாகிய வரிவடிவாயும் ஒலிவடிவுங்கூடி ஐந்தெழுத்தாயிற்று அன்றியும் "பிரதமம் தாரகாகாரம் த்வதீயம் தண்டமுச்சதே த்ரிதீயம் குண்டலாகாரம் சதுர்த்தம் அர்த்தசந்த்ரகம் பஞ்சமம் பிந்துசம் யுக்தம் பிரணவம் பஞ்சலட்சணம்" என சுருதி கோஷிக்கின்றபடி அறிக.

தவ நவம்பெற லழகென நோற்பது தாலம
சிவ நவப்பொருள் சேதன நித்திய மாகம்
பவ னமங்கியப் பவனியா யதிற்சிதா காயம்
எவ னெனுங்கலை கற்றுணர்ந் தடங்கிலை யென்னே. 35

தேவ மானிடப் பசுத்திரட் கொருபதி சிவமே
யாவ தச்சிவத் திருவரு ளோர்ந்தவ ரல்லார்
நாவி னேதுவா ரூருரு வணம்பல நாமம்
தாவி லாரணம் பேசும துணர்தாத் தகுமோ. 36

என்ன நான்மறைப் பொருள்வகுத் துணர்ந்ததி லிறையை
யுன்னி யைம்புல மொருமுதுக் குறைவக முதிப்ப
பன்ன காபரணப் பரசிவம் பரம் பரமென்
றன்ன மாமுனி யிங்ஙனந் துதிசெயு மானே. 37

இருசீரடி நான்காய் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கிவந்த வஞ்சித்தாழிசை.

வாக்குமனமணுகாத, நீக்கமறநின்றசிவம்,
போக்குவரவற்றவிடம், நோக்குமென்மனனேகாண்;

சொல்லினுட்பொருளாகி, பல்லுகமுநின்றசிவம்,
எல்லையறப்பெற்றவிடம், சொல்லுமென்மனனேகாண்;

தேடுமறைப்பனுவன்முடி, வீடகத்தேநின்றசிவம்,
கேடுருவிலாதவிடம், நாடுமென்மனனேகாண். 38

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரஞ்சிவமென் றறிந்தமுனி நந்தியம் பெருமானே பவனே யேழை, சிரங்குனித்துங் கரமிரங்குஞ் செயலிலநா னென்செய் கேன் றேற்று கென்ன, இரங்குமன முருகியிரு கண்பனிநீ ரூற் றெடுப்ப வேத்தி நிற்ப, நூரஞ்சலன மாகவரு டந்துசிவ நந்தியிது கழறு வானல். 39

எப்பொருட்கு மிறையாமென் றிறப்பிறப் பிலானென்று மெந் த நூலும், செப்புமுதற் காரணனை பூரண புராதனனை தேவ தேவை, ஒப்புயர்விலா வொன்றை தன்னிலே தானுகு மொளி யை யோரா, தப்பதும நாபனேநீ யுயர்வெனலாற் சிவநிந்தை யார்ப்புண் டாயால். 40

அக்கினிட்டோ மாதிமகளு செயத்துணிந்து பாகிரதி யாதி யாடி பக்கண மிலாதரிய சாந்தரா யணமுதல பரிவி னூற்றி மிக்கவிர ணியதானங் கோதானம் பூதானம் வேண்டிற் றீந்து திக்கொடு திகந்தமெலாந் திரிதந்தும் சிவநிந்தை தீரொ ணாதே.

புத்திவலே யாழியுல காற்றுசிவ நிந்தைக்கப் புனிதர் போற்றி, புத்திவல யத்தாக்கும் பாவைக்கவ் விழையெழிலாம் போன்மென் றுள்ளப், பத்திவலே யிற்படுமோர் பொருளென்றே யெண்ணி யெணி பணிவி னிந்த, அத்திவலே விடுபாக்கோ ராயிரத் தெண்டல பூசையாற்று கென்றான். 42

விடைப்படிவப் பெருந்தகைச்சொன் னன்றென்ன வொரு நாலு வேதங் கோதது, நடைப்பெருமா செய்தமுனி மந்தாகினிப் புனித நதியி னாடி, சடைப்பாம நீறுருவிற் பூசியக்க மணியுருவிழ முங்கிக் காசிப், புடைப்பெரிய சிவலிங்கப் பெருமானை யலர்கொ ண்டு பூசை யாற்றி. 43

மும்மையினுஞ் செய்தவினை யிம்மையிலே செய்தவத்தான் முடித்து முத்தி, தம்மையடை குநர்போல பிறந்தவிலங் கலேவி லங்கி சாகாஞ்சேர்ந், தம்மைவரும் பவமிலதாய் நீரொடுநீ ராநதிக ளமிதமாடி, செம்மைவள பலதலத்தும் பூசித்துப் படர்கின்ற செலவி னம்மா. 44

பூவணையி லடைகிடந்து சூன்முதிர வயாநோயாற் புலம்பு கொண்டே, ஆவனலர் பெடைக்கலர்தா துண்பித்து தற்சிறகா லணைத்துத் தேற்றி, மாவிளரி பாடிமன மகிழ்விக்கும் பூவிதழ வன்னி நீழற், றேவனைத்தெய் வக்குலத்தை குடியேற்றுஞ் சிவக் குறியைத் திகழக் கண்டான். 45

கண்டனலி னிழுதினக முருகியுரோ மஞ்சிலிர்ப்பக் கண்ணீர் வார, தண்டெனவீழ்ந் தடிவணங்கி நல்கூர்ந்தார்க் கரியபெருந் தனமுற் றுங்கே, மண்டியகண் டாவப்பேர் தடமகிழ்ந்தக் நீர் முகந்து மணந் தலர்ந்த, புண்டரீக வலரினலூ ரீசனைப் பூசனை யாற்றிப் புகல்வ னீதே. 46

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

திருவளர் மறைபொரு டேர்ந்தசிவ போகசுக
மருவளர் மூவா வளவீடு தோன்ற
முந்தவித் தருளெய்தன் முறையெனலால் விடயமவாம்
ஐந்தவித் தாற்றலுளா ரகமுகமா மூரகேள்;

வாழ்த்திருக்கு பேசா மௌனசிவ போகசுகத்
தாழ்த்துநெறி தானு மரியவகந் தோன்ற
அநாதிமல வாதனைவிட் டாய்ந்தவர்க ளந்தண்
தனுதிதய கமலத் தவிசமரு மூரகேள்;
இவை இரண்டுந்தரவு.

ஆட்டுமுகம் படைத்தா னவிதரா தொருவனெனக்
கேட்டிருந்தும் பரமறியாக் கெடுமதியே னென்செய்கேன்;

காமடங்க லுரியவிழ நஞ்சாபஞ் செப்பவதன்
பாமடங்கக் கண்டறியாப் பதிதனே னென்செய்கேன்;

தாருவன முனிவர் சார்த்தூல மாதிவலி
ஆரவடு வலமென் னறியாயா னென்செய்கேன்;

சதாநடத் தாலிச் சகமியங்க முத்திப்
பதாம்புயத்தா யென்னப் பகுத்தறியே னென்செய்கேன்;

கண்குடிக்கும் போரந்த கநதனுற் சூர்தடிந்து
விண்குடியேற்றும் விதமுணரே னென்செய்கேன்;

அக்கமிடந்தர விந்தத் தர்ச்சிக்க சலந்தரற்கொற்
சக்கரமாற் கீந்த தரமுணரே னென்செய்கேன்;
இவையாறுந்தாழிசை.
வஃகான்ற - இது தனிச்சொல்

கொடும்பவ மடப்பரி விடப்படு கடங்கொடு
இடும்பையு ளயர்ந்தயர்ந் தொடுங்குறு முயிர்
செறிதரு மலவினை பெரிதவை விரிவற
அறிதரா நிலையல தெவரறி பவர்
சிவபர பவஹர திமிரத பனவின
தவநவ மதியுதி தருகதி நவில்
சமிவன முதிதரு சகல சுகுணகன
இமிலெறுழ் நரைவரு மிறைபரை யிடன்;

இவை நான்கும் அராகம்.

மாழாந்துயி ரேங்குமாயை வலந்தவிர்ப் பாய்மன்
ஏழாம் பிறப்பினுக்கும் ஏமாப்பி னிருப்பாயோ
மறப்பென்னும் பகைஞனெறி மறுக்காமை செய்வாய்மன்
பிறப்பென்னுந் துன்பப் பேரொழிய நிறுப்பாயோ
வகுத்துரைத்த வேதவிதி வந்துதவச் செய்வாய்மன்
இகத்தலத்தி னிற்பணியே யெற்பணியி னிறுப்பாயோ
நனவிற்ற சேந்திரிய நாடகங்கா ணுறுரையாய்
கனவின் மனக்கூத்தைக் காண்கிற்கு மாறுரையாய்
மூவாத நிற்பதமே முன்னியுறு மாறுரையாய்
தாவாத வின்றியருட் சார்ந்தோங்கு மாறுரையாய்
சொற்பொருளா மப்பொருளைத் தோய்ந்துணரு மாறுரையாய்
கற்பெரிய வில்லோய்நுங் காப்பணியு மாறுரையாய்

இவையாறுந்தாழிசை.

உரைப்பின் - இது தனிச்சொல்.

| | |
|---|---|
| மதி தெளிந்தது புகு | விதி யடைந்ததொ ரிரு |
| மற மொழிந்தது பகற் | வினை யழிந்தது மல |
| கதி ரெழுந்தது சட | பொதி யவிழ்ந்தது துயர் |
| கட முடைந்தது சுக | புற மகன்றதெ னுயிர் |

இது இருசீரடி எட்டம்போதரங்கம்.

அதனால் - இது தனிச்சொல்.

நீற்றொளி மேனி நின்மலக் கொழுந்தே
மாற்றினங் காணு மாழைபொன் மணியே
பல்லூ ரெவற்றினும் பான்மைத் தாய
நல்லூ ரமர்தரு நதிவதி சடில
மதியிளங் கண்ணி வயங்கிய மலையே
கதிதரு நும்பொற் கான்மலர் வணங்குதும்
காயத் துடுவினுங் கான்யாற் றறலினும்
மாயை யுருவினு மற்றவட் செயலினும்
மிக்கா மாண பவத்து மீளாது
இங்குண் டமித காலஞ் சென்ற
பஃறலைப் பாந்தட் பரிக்கும் பாரில்
இஃறலை யவன்கை சீதா னரன்கை
ஆற வெற்கா லாற மலவினை
பாற விறந்த பகற் போலாது
சுத்த மெய்ஞ்ஞான சுகக் கடலாடி
சத்தினி பாதத் துத்தம ளுகி
நித்தலு மலர் தூ வேயப்
பத்தரி னத்துப் பரிவுறற் பொருட்டே. 47

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருப்பவிழும் பூவிதழாங் ககநெகிழு முனிவானல் லன்பிற் கெந்தம், கருப்புவியாம் பரமேசன் றேவரிருடிக ளமலன் கணங்க ளோத்த, மருப்பெருத்திற் பல்லுலக வனுத்திரளா மக்கடமை வயிறு வாய்த்த, குருப்புருவ வின்னுதலம் பிகைபாக மாயெழுந் தான் குழுறச் சங்கம். 48

நாதனெழுந் தருளமுனி வரனைத்தி சிவகாட்சி ஞானக் கண் ணுற், போதவறிந் தனனின்றே கண்காட்சி யாக்கண்டேன் புனித மானேன், கோதலொழிந் தனதெளிந்தேன் தவப்பயனே யென் னமுனி நுவல வீசன், ஏதுவிழைந் தனைசெய் குற்றமெலாங் கணமான வென்ன மோனன். 49

முத்திவிரும் பிலனுலகி லெண்ணரிய வெண்ணிய முடிக்க மோக மாமெண், சித்திவிரும பிலனுனது பாதாரவிந்தமலர்சேவை செய்யும், பத்திவிரும பினனென்ன வாதளித தான்கரந்தான் பாலற் றௌவுஞ், சித்திரகா யற்பாவி செல்வுறிச் சென்று னிருந்தான் சீர்வியாதன். 50

வில்லூருங் குழவிமதி வேணியா னிங்கையரில் வேதங் கோத்தோன், நல்லூரி லீசனடிப் பூசித்துத் தீர்சரித நாடிச் சொற்றும், மல்லூருஞ் சிறுவிதிசெய் சிவனிங்கை கேட்டவெழு மாதவத்தோர், அல்லூ ரகங்தொலைத்த கருப்புலியூர் காதைசொல வன்பிற் கேண்மோ. 51

திருச்சிற்றம்பலம்.

வியாசர் பூசிததப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருருரு.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சத்தமுனிவர் பூசித்தப்படலம்.

-o--

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முற்கா லத்தங் தேன்பிலிற்று முளரித் தவிசோன் மகனெவர்க்கு
மிக்கா னேவ னெனவினவி விதியா துரைப்பச் சிறுவிதிதேர்ந்
தெற்கான் றௌிசெய் முத்தலைவே லிறையாற் குறையாவரமடைந்து
வட்கார் வெருவ மூவுலகு மொருகோ லோச்சி வருநாளில். 1

வேத வல்லி யெனுங்கொடியை வேட்டு மணந்தா யிரமக்கட்
போத வளித்து மானதமா மடுவிற் றவஞ்செய் வான்போக்க
நீதி லவர்முத் திக்கருக ராக வதன்பின் சேயிழைய
மாத ரீன்றுசசி முதலோர் மணப்பத் தந்தின் புறுமேல்வை. 2

கரைகொன் றிரங்குங் காளிந்தி நதிநீர் சூடைந்து கம்பேந்தும்
பரையை தன்னை யாயடைந்து பன்னிகரத்தீந் தமு தூட்டி
விரைய நறுங் கொந்தளக மகளாக கன்னிமட மிருத்தி
நரையந் துவசத் திறைமறையோ ணுகவா மற்றவர்க் கீந்தான். 3

மணந்த கோலத் தொடுவிடையோன் மறைந்தான் விடைகொண் டிலனென்ன, தணந்து தெவ்வா யரற்கருதி தருக்கித் தக்கனிருப்பமறை, யுணர்ந்தோன் வேள்வி மனோவதியில் செய்ய வும்பர் முனிவர்சிவ, கணங்க ணந்தி யுடனேகக் கண்டான் றக்கன் கனன்றெழுந்தான். 4

ஆரார் வந்தா ரெனத் தாதைக் கறிவித் தீமத் தாடிகண
நேரா ரெற்றுக் கவர்வருகை யென்று நீதி யறிவில்லான்
தேரான் றெளிவுந் தெளிந்தான்கண் ணையுற் றிருத்த றீதென்ன
சீரார் முது நூற் கிலக்காக நின்றான் வினையார் தெளிகிற்பார். 5

புதிதா யரசு செயுங்கொடியோன் புரங்கூற் றுரைதஞ் செவிசார
பதித வுனது சென்னியிற சுரர்தா னவராற் படவென்ன
மதியார் முற்ற மதித்தொருகால் வருகே மெனப்போந் தருணந்தி
கதியாங் கருணை நிதிகைலை கண்டான் விளைந்த விண்டானல். 6

* சூதெதல் வேலென முலைக்குழற்கண் டோகை நாவோன் றுனுக் குற்று, நாத னெவைக்குங் காரணனென் றறையும் பறையே நான் மறையும், ஆத லொடுங்கு மிடந்தோன்று முலக மென்று லனுபவமாம், சோதித் திருமுன் னோர்ந்தவிது துடர்க்கே தென்ன வென்செய்தான். 7

கேளா வாளா விடைக்கொடியோ னன்றி நாணிக் கிருதியற்றின்
மாளாப் பழங்கண் ணுளாவேன் மகமும வேண்டே னதிலுண்டா
மீளா விசையும்வசை வேண்டே னென்றான் சென்றார் விருந்தினர்கள்
கோளார் திண்டோட் சிறுவிதிதன் னுமைப்புரியிற் குடிகொண்டான் 8

சின்னாட் பின்ன ரென்றுதை முயன்ற கருமஞ் செய்வவெனச்
பொன்னன் மயனைற் பாகிரதித் துறையி லோமச் சாலைசெய
மன்னன் செய்பு மகங்காண்க வென்ற முடங்கற் கண்டமுதர்
முன்னு முலகத் தவரெல்லா மொய்த்தார் தக்கன் மொழிகின்றான்.

---

சூது - முலை. எல் - குழல். வேல் - கண்.

நக்க னல்லா னிட்டிக்கு நாரா யணனே காரணனும்
ஒக்க னீயென் றுரைப்ப வும்பர்க் கிறைவன்செய் தவத்தான்
மிக்க வோரே ழிருடியர்கள் காண்கே மவையி லெனவிளம்ப [ன்.
தக்கன் றாதரால்விளித்தான் சார்ந்தான் முகுந்தன் றனைவென்றே

வந்த வந்தணர்க் கிருக்கை யாதி வழங்க வவனுசி
தந்திம் மகத்தை யந்திவணச் சாமிக்கவி தந் தாற்றுகென
சிந்தக் கனற்க ணகைகூட்டஞ் செய்துசீறி சிறுவிதி மன்
புந்தி நைந்து வெய்துயிர்த்துப் புகல்வா னின்ன சிவநிந்தை. 11

கொச்சகக்கலிப்பா.

ஈசனென்பு தரிக்குமோபசு வேறிபாரி னுலாவுமோ
பூசுமோவடு சாம்பறன்னை புரத்துளேபலி யேற்குமோ
நேசமாமத யானைவெம்புலி தோலைமேற்கொள நேருமோ
தேசில்வெண்டலை யோடுதீகர மேந்துமோவிட மாந்துமோ. 12

பாதிபாக மொருத்திமேவ பணிக்குமோபவ ளச்சடை
மீதிலோர்பெண்ணை வைக்குமோமதி மிலையுமோபுர மலையுமோ
வாதமாநட மாடுமோமத வேளைதீயுண் மடிக்குமோ
காதுவெம்பணி பூணுமோவுரை கத்தனோவொரு மத்தனே. 13

இத்துணைச்சிவ நிந்தைகாதி லிருஞ்சலாகை புகுத்தென
உத்தமத்தவ னங்கைபொத்தியு ரைத்தகாதை மறுதிரா
மத்தநீயறை கூவுகின்றனை மம்மரென்றவ னங்கொரீஇ
தத்துவத்தலை நின்றமாமுனி சங்கமுற்றிது சாற்றினன். 14

அக்கணத்துமை யைம்முகன்சின வையைசேய வழற்கணும்
உக்கிரன்பொர யாகசாலை யுளும்படோடி யுருண்டனர்
தக்கனுடு முகங்கொளச்சமர் சக்ரபாணி தளர்ந்தனன்
செக்கரஞ்சடை யானலாத செயற்கிதாமென றேரவே. 15

சத்தியத்தவ ததிமகாமுனி தக்கனுட னுரைத்தநாளும்
சித்துலாமல யத்தருந்தவன் கௌதமன்றிறல் காசிபன்
நித்தலும்பதி னூறெனுயு ணிலைத்தவண்ணல் புலத்தியன்
சுத்தவாங் கிரசன்வசிட்டன் றுடித்தயர்ந்திது சூழ்வரால் 16

பொருளலாதன பொருளெனப்புரி பூரியர்ப்பொரு ளோர்கிலார்
மருளுளார்செயு மடிகணிந்தை மடுத்தனஞ்செவி வாயுளே
தெருளுமாறினி தென்கொலென்ன சிவாகமம்பல தேர்ந்தோர்ந்
தருளிலாநல மாவதின்றது மன்பினின்றலை யாமெனு. 17

தருச்சினைப்பல மலர்கணல்த தலஞ்சிவத்திரு மூர்த்தியே
மருச்சரோருக நனைநனைந்தெழு மாணநீணதி தீர்த்தமே
கருச்சினைப்பல பங்கமாமொரு கதிவலஞ்செய சிவபிரான்
அருச்சனைப்புரி வேமனுவெழு முனிவரன்புரு வாயினர். 18

இமயமால்வரை யாதிகன்னி குமாரியுட்கொ டிருக்குமா
ணமருமாறர னாலயந்தல மன்பினுகம வாறினும்
தமரவேதம் விதித்தவாறினும் தரிசினங்கொடு மற்றவும்
கமையினைத்து நலாறறிந்தனர் கருப்புலீச்சுர வாலயம். 19

பொற்பிதிர்ச்செழு நந்திநின்று புகுந்துபானதி சங்கமாம்
அற்புதத்துறை யாடிபூம்பொடி யாடிசெங்குரு வாயவீ
தற்பெடைப்பிறி தென்றுமாழ்குறு தண்டலைக்குசு மங்கொடே
கற்பகாடவி போலும்வன்னி நிழற்கணுதி பதிப்பதம். 20

ஆயிரத்திரு நாலிரட்டி யருச்சனைச்சிவ பூசனை
சேயபத்திரு நாளியற்றி திரிந்திடாகர ணத்தராய்
தூயபாலன வேதனந்திரு முன்னருய்த்து வணங்கியே
பாயிரத்தை யுணர்த்தியாதி பரன்றுதிச்செய மேயினர். 21

கலி விருத்தம்.

அன்பா னவர்தன் னகவீ டமரும்
சம்போ சிவசங் கரதற் பரனே
நம்பா வனகா நல்லூ ரரனே
என்பா லருளொன் றிந்நா ளிலையோ. 22

துர்ச்சங் கமெமைத் தொடருந் தொடாம்
எச்சந் தருமூற் பவநோ யெதிரா
அச்சங் கொடுநா மலையத் தகுமோ
நச்சங் களனே நல்லூ ரரனே. 23

மோனத் தவர்பான் முதிரின் பிரதம்
பானப் பரமெம் பரநீ யலையோ
ஞானச் சுடரே நல்லூ ரரனே
தேனக் கலர்செஞ் சடிலா சிவனே. 24

கல்லா ரவைகண் டணுகா கனமார்ந்
தெல்லார் சுடர்கண் டிருமாந் துளநன்
னல்லோ ரகலா நல்லூ ரெனலால்
இல்லா தெனுமா றில்லா தருளே. 25

காதங் கமழ்கண் ணியசங் கரிபங்
காதந் திரனே பரமா பதியென்
றோதந் தணவா நல்லூ ரரனே
ஏதங் கெடுமா றேதோ திறையே. 26

எனவித் துதியே எழுமா முனிவோர்
பனவத் தருணம் பரனோ ரிடபம்
தனிநின் றமைமா னொருமா னுடனாய்
கனவங் கனலா கரனு கினனே. 27

விண்ணும் புவியும் மிளிர்சோ தியுருக்
கண்ணுங் கருதவக் கண்டார் தொழுதார்
உண்ணின் றொளிசெய் யொளியே வெளியாம்
பண்ணெம் பவநோய்ப் பறியப் புரியே. 28

என்றார் கருணா நிதியுந் தவமே
நன்றா மகிழ்வுற் றனநா மகமே
குன்றா தவர்காண் குணமா தவர்கா
ளென்றா னரனந் தரமா யினனே 29

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அம்முனிவர் தமிலொருவ னீயுணர்தி வசிட்டமுனி யன்ப கேட்ட, வெம்மைதரு சிவநிந்தை நீங்கியவா றுறைசெய்தாம் வேங்கை நீங்கா, இமமகியி லுந்துநதி கொடுபூசை கௌண்டிஞ்ச னியற்று மாற்றை, நன்மையுறக் கேண்மினெனச் செங்கைவடி வேன்முருக னிவ்வ னன்றே. 30

திருச்சிற்றம்பலம்.

சத்த முனிவர் பூசித்தப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருஅரு.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கௌண்டிஞ்ச முனிவர் பூசித்தப்படலம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மந்தியின மறியாத நெடுஞ்சினையி னிணரரும்பு மர னடர்ந்த
கந்தரங்கட் கருமுகிர கந்தரத்திற் படியுமுடி கனகக் காமர்
கந்திமலை யாச்சிரமத் தவநிலையி னீயிருந்த ஞான்று காதி
மைந்தனந்த விலங்கிலுள விலங்கினவேட்டங்கருதிவந்தானன்றே.

ஆடமரின் முகந்திரும்பாச் சினவீரர் கொலையஞ்சா வக முகத்த
வேடுவர்கள் பலதுறையும் புக்கயில்வேற் குந்தமழு வில்லம் பேந்தி
காடகத்துண் மறவிலங்கு கொடுவரிமான்கலையேனங்கரடி செந்நாய்
ஓடவடித் தம்பெறிவேற் குந்த நுழை வழியுதிர மூற் றெடுப்ப. 2

கடகரிகை மேனோக்கிப் புகலிடமி லாமகிரு காவிற் றோடி,
விடமுடியா தடுக்கலென வீழ்ந்தயா சிலமிருகம் வெருவி யோட,
கடிகைபதி னைந்தளவும் வனவேட்ட மாடிமிகக் களைப்புண் டாகி,
அடலதிபன் றுணையொடும் வந்தடைந்தான் வசிட்டமுனி யமருஞ்
சாலை. 3

கறிகற்கு மதுகரங்கண் மதுகரவா வலருழக்குங் கமலற் குண்
டாய், அறிவிற்றென் னெனவறியு நிலையறிந்தோ னங்கழற்கா
லரையற் கெந்தாய், சிறுபுக்கில் விருந்துவிருந் தெல்லீரு முண்ட
யர்வு தீர்ந்தே கென்ன, நறுவிற்றிம் மொழிமுகம னென்றுமிலா
னெனவேந்த னக்கான் மிக்கோன். 4

ஈரமனத் தாற்றெய்வப்பசுவிளித்துசெய்வனசெய்யிறைவர்க்கென்
சாலியன்னகாதிரீஇகோயின்மணிமிளிர்மாடஞ்சதுக்கவீதி [ன
வீரணி கடற்றுனை மறுகவ ரவர்க்குறிய விடுதி யாக்கி
கோமெனு நீரமடு தடமட்டத்து மேவாளர் கெழும வாக்கி. 5

பானமுறும் பாறயிர்தேன் கனவிரதந் தெண்ணீரும் பருக
வீந்து போனகமா தியவெவவே தெண்ணியவெண் ணியவண்ணம்
பொசிப்பித் தின்பக், கானவிசை யாழ்செவிக்கு மமுதூட்டி
காத்ததந்த காமதேனு. 6

வருந்தவருங் கௌசிகமன் னனீகமுட னத்தினத்தின் மாழாக்
தூற்ற, விருந்தாச போகத்தும் யாங்கண் டிலேமென்னும் விம்மி
தத் தாழ்ந், திருந்தவ மயத்திறைவ னவ்வித் தழுக்காற்றி னெண்
ணிக் கானத், தருந்தவ நிற்கித்துணைப்பாங் கென்னமக்கி தருடி
யெனை வறைவ னையன். 7

கன்னிநறுங் காதுமிய கட்டுடையுந் துளாயலங்கற் கமல வீட்
டுப், பொன்னிவள ரணியகலன் சுராசுராற் கடல்கடைந்த போ
துண்டாய் நாம், உன்னியவா றுணவூட்டுங் காமதேனுத் தவத்தோ
ருரையி னிற்கும், எண்ணிவிதற் கெவருரியர் எவர்தருவர் வரின
தைக்கொண் டேசென் றேத. 8

உற்றவிடத் தன்னமிட்டார் வீட்டகத்தே கன்னமிட்டா ரொப்
பச் சீறி, மற்றவன்றன் றூனைகளை யேவியிந்த பசுவேகா வண்ணஞ்
சூழ்ந்து, பற்றாகவென் றேறுதமுனம் நாற்படையு முற்றிபல
பாசம் வீசி, கொற்றவெழிற் பொற்கழற்கால் வீராதி காரவுரை
கூறி யார்ப்ப. 9

காண்டலுமச தெய்வசுர பிக்கனன்று முனிவாருட் கண்ணேக்
கெய்தி, ஈண்டியெதி ரேற்றவர்கட் சிரமுருள காம்புரள வீருள்
வாயிற, பூண்டுதிர நீராடுவ கொம்பிரண்டாற் பின்புரத்தாற் போர்ந்
தார் போர்ந்தார், மாண்டியம னூர்களத்தி லாயிரமா யிரமடித்து
மறைந்த தாவே. 10

ஆமறைய விதுதவத்தா லாயதது செய்வலென்ன வகத்துட்
டேர்ந்து, காமித மிலாதிறந்தா ரொழியவிருந் தார்க்குவிடை
தந்தோர் சாலை, ஏமமுற வாக்கியதி லைநதடக்கி சுகாசனத் திருந்
தா னுற்றற், கோமகனுண் டிக்காட்சி கண்டகௌண் டிஞ்சமுனி
குருமுன் னேதும். 11

முனிபுங்க வர்க்காசே னன்றிகொன்ற பெரும்பாவ மூரி வேந்த னனியிளைப்பக் கண்டபழி தீர்கிற்பான் கங்கைமுத னதிக ளாடி, பனிமேகந் தவழ்குடுமி நந்திமலை வருதுமென பதுமக் கோயிற், புனிதனிதயத்துதித்தோ னருள்கொண்டு வருநெறியோர் பொழி லடைந்தான். 12

முன்மலர்ந்து பிற்கூம்பா நண்னட்புப் போன்மலர் முகத்த வாகி, சொன்மலர்ந்த நாகணைவாய் புட்கோகி லங்கிளிகை தும்பிக் கெல் லாம், தன்மமலி சாலையென தோன்றவத னூப்பமொரு சமிநன் னீழல், வின்மலர்ந்த சிவலிங்கப் பெருஞ்சோதி யாயிருந்து விளங் கக் கண்டான். 13

அண்டபுவ னங்களெலா முண்டகனிச செவ்வாயன் அவையாக் காயன், பண்டையசெந் தமிழ்வேதம் சொல்லளவை யாலறியாப் பரம லிங்கங், கண்டகணத் தெம்மறமு மறமாமென் றனந்தமறை கழறு மத்தால், எண்டகுசீ ராகாய கங்கைகொடு பூசிப்பே னென வுட் டேர்ந்து. 14

சானவியா டப்போந்த செலவிலிந்த சிவக்குறியை சந்தித்தே னென், பானலியா பவபங்க மானேனின் றபிடேகம் பண்ண வேண்டி, நீநலமாந் தேவநதி யாயிருத்தி யாதலிநீ டேழி வாழி. வாநதியா யெனநந்தி மலையிழிந்து வாறாறு வந்த தன்றே. 15

கட்டளைக்கலிப்பா.

மாம திப்பிறைக் கண்ணிய னங்கணை
　　பொத்து நாளுநை வண்கரந் தோன்றிய
ஏம வானதி மூன்றினி லம்பர
　　வீர்ங்குணத் துறைக் கின்னருட் பொங்குபு
* பூம ணிக்கம லங்கன கம்மிவை
　　புயல்க ளான்கும் பொழிவன போன்மென
காம ரந்திவ ணச்சிவ நந்திமேல்
　　சிந்த வந்தது கௌண்டிஞ்ச மாநதி. 16

மருப்பு நான்குடை வாரண னன்பினால்
　　மஞ்ச னக்குடந் தன்கரத் தேந்தியே
கருப்பு லிச்சிவ லிங்கத் திருமுடி
　　யாட்டு நீரிற் கடுத்த தான்றன
விருப்ப ரூதக முங்களும் பத்தியின்
　　வித்தை யின்றுறைக் கைவாத் தோசலால்
அருக்க றிந்துத் துதிசெய வானதி
　　அரிய நந்திம லைக்க ணிழிந்ததே. 17

---

* பூமணி கமலம் கனகம் என்பது சப்தமேகத்துள் சங்காரித்தம் பூ - புட்க [illegible]தம், பொன் - ஆவர்[illegible]ம், நீர் - சம்வர்த்தம், மணி - பொழிவன. ளு

அம்பு ராசி யறைப்புறஞ் சூழ்மா
தொண்டை நாடெனு மானனப் பூமகள்
மொய்ம்பு ணர்ந்த மலைமுலைத் தாங்கிய
முத்த மாலையை யொத்து விளங்கின
பம்பு கானகத் தேனம ருப்பினும்
பாத்த யானைகைக் கோத்தம ருப்பினும்
கொம்பு காம்பினுந் தோன்றிய வாரங்கைக்
கொண்டு தூங்கரு விப்பொலி வாங்கரோ. 18

கோவை யாஞ்சரக் கொன்றையங் கூந்தற்செங்
குமுதம் வாய்நறுங் காவி விலோசனம்
மாவி ளந்தளிர் மேனி பசுங்கழை
வண்பு யஞ்செழுங் காந்தளங் கைநிலம்
தாவு காதை கமலங்கொடு நந்தியந்
தாயு யிர்த்து கரச்செ லரும்பெறற்
பாவை யாங்கௌண் டிஞ்ச தரங்கிணி
பாலி யோடு கலந்து படர்ந்ததே. 19

கல்வி டைச்சினை சந்திழைத் தாவிய
கான மான்மத மற்ற கலந்தெழில்
வில்லி டும்பன் மணிப்பொற கலன்கொடு
வில்லம் பச்சிலை நொச்சி யறித்துறும்
முல்லை யானிரை யைந்தலைக் கைத்தலத்
தேந்தி முன்ன மொலித்துதித் தோடலால்
செல்லும் பூசைச் செயல்வினை மாக்களைச்
சிவனு மென்பத் தெளிவறு நீந்தமே. 20

கட்டளைக்கலித்துறை.

வான்செய்த கங்கை வருகை யறிந்த மதிமுனிவன்
நான்செய்த புண்ணிய நன்றென் றதிசய நண்ணியுளந்
தேன்செய்த வாக நதியை வணங்கித் தெளிந்துமுகந்
தான்செய்த பொற்கரகத் ததிலா கமத்தா டியரோ. 21

முந்திச் செருக்கிரி மூடிக வாகன மூலகண
தந்தித் திருமுகத் தம்மா னுகசா ரரவிந்தம்
வந்தித் தணியபி டேக முடித்து மறுவினைல்லூர்
சந்தித் துயர்மதிற் கோபுர வாயிலைச் சார்ந்தனனே. 22

கஞ்சக் கரத்தினி லாயிரத் தெண்ணெண் கமலமெடுத்
தஞ்சக் கரத்தையு முன்னியவ் வன்னி யருகணைந்து
விஞ்சக் கரத்தைப் புரிசிவ லிங்கம் விளக்கிவிதி
கொஞ்சக் கரணித மொன்றிய பூசை குயிற்றினனே. 23

சம்போ சிவ பரமேசனு ராரணந் தான்புகழும்
தம்பர் மீழு வலத்தேந்திய சங்கரா நன்றிமறந்
தெம்போ லிய தவனேவிய வாவிற் கிடரிழைப்ப
பம்பி றும் பூதுகண்டே னந்தபாவம் பறித்தருளே. 24

என்றென்பு நெக்குநெக் கேங்கமெய் யுள்ளன் பிருந்தபடி
பொன்றங் கவையிலு மூவே டணையிலாப் போதரக
மன்றந் தனிநட மாடிநல் லூரினில் வல்லியமாய்
நின்றன் றருள்பவன் றேர்ந்தெழுந் தான்றவ னோர்ந்துமன்னோ. 25

அருட்பெருஞ் சோதியின் மான்மழு நாற்புய மாடவரம்
கருப்பொரத் தேவரைக் காத்ததி தாமெனுங் காளகண்டம்
பொருப்பரை யன்றவப் பேதை யிடங்கொண் டிடபமெழும்
கருப்புலி யீச்சரன் பூவடி வீழ்ந்து கலுழ்தலுமே. 26

உள்ளும் புறமொரு வேற்றுமை யில்லன் புடையதவப்
பிள்ளை நிற்பூசைக் குகந்தன மானம் பிறங்கநந்தம்
வெள்ளி விலங்கற் கணங்க ளுடன்செல வேண்டுமென
வள்ளன் மறைய கைலையி லான்றவன் வாழ்ந்தனனே. 27

ஆதலாற் பால சார்த்தூல லிங்கங்கண் டருச்சித்தவர்
வேதனை நீங்கி விரும்பிய போக நுகர்ந்துபின்னை
மாதவ ராயிக வாழ்நாட் பெருகி மகிபிறத்தல்
சாதலி லாச்சிவக் குன்றி[illegible] காணிழற் றங்குவரே. 28

வாழிய நான்மறை யாகமம் வாழி மறைபுரா
வாழிய வேள்வி தராதரம் வாழி மண்ணுளர்சர்
வாழியப் புராணம் படித்தவர் கேட்டவர் வாழிதவம்
வாழிய சைவ விவேகசி லோகரும் வாழியவே. 29

திருச்சிற்றம்பலம்.

குடிபேற்றநல்லூர் புராண உத்தரகாண்ட முற்றிற்று.

ஆக திருவிருத்தம் [illegible].

[illegible] பிரஸ், திருப்பத்தூர், 1915.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 21 | செயத | செய்த |
| 7 | 29 | கைலைக்கெருந்தருளிய | கைலைக்கெழுந்தருளிய |
| 9 | 20 | திருவளையாடல் | திருவிளையாடல் |
| 11 | 21 | ஆங்சிரீசன | ஆங்கிரீசன் |
| 20 | 3 | நமபார்க்கெ | நம்பார்க்கே |
| 21 | 4 | அருனிய | அருளிய |
| 21 | 13 | வேற்றி | வெற்றி |
| 28 | 7 | ஆறறின் | ஆற்றின் |
| 29 | 7 | கிவவேட | சிவவேட |
| 29 | 8 | வரம்மை | வரம்பை |
| 31 | 11 | வழை | வாழை |
| 32 | 12 | நிறீகி | நிறீஇ |
| 36 | 24 | ரெனன | பென்ன |
| 37 | 20 | பகைஞளும் | பகைஞரும் |
| 45 | 21 | நொக்குவிட | நெக்குவிட |
| 48 | 24 | செல்வி | செலவி |
| 49 | 2 | யோலும் | போலும் |
| 52 | 7 | பகவி | பகவி |
| 56 | 12 | நூஉய் | தூஉய் |
| 57 | 12 | சோரூற்றி | சேரூற்றி |
| 58 | 11 | செய்யதாயமுகம் | செய்யதாய்முகம் |
| 61 | 18 | பிறவாதரெ | பிறவாதவரே |
| 67 | 22 | புருடனோம் | புருடனோடும் |
| 70 | 3 | ம்கையகல் | ம்கையால் |
| 73 | 5 | மேறு | மேரு |
| 74 | 12 | விமலாப் | விமலர்ப் |
| 74 | 19 | துள்ளின | தள்ளின |
| 80 | 19 | செந்தி | செந்தீ |
| 82 | 1 | குரியாய | குறியாய் |
| 86 | 3 | இவ்வாலுற்ற | இவ்வாறுற்ற |
| 86 | 10 | போறைந்தாம் | பேறறைந்தான் |
| 113 | 18 | பொருமித | பெருமித |
| 124 | 4 | பவத்திரபத் | பவத்திரயத் |
| 126 | 3 | செய்கேம் | செயதேம் |
| 133 | 28 | முனைந்தவணை | முனைந்தவனை |
| 132 | 7 | கேளாய்க் | கோளாய்க் |
| 134 | 2 | லுருண்டை | லுருண்ட |
| 135 | 18 | கடறுலை | கடற்றலை |
| 135 | 19 | சினைபுடை | சினையுடை |
| 137 | 23 | மடந்தையா | மடந்தையர் |
| 152 | 21 | பொறுளுணர் | பொருளுணர் |
| 161 | 17 | சவாகை | சலாகை |
| 165 | 2 | 2-வது அடி விடுபட்டது | நானநவி நீசமயர் விரிந்தோட செய்வித்து நாகர்நாட்டுட் |
| 166 | 37 | பொழிவன் | பொழிவன |

